துறைமங்கலம் - சிவப்பிரகாச சுவாமிகள்

அருளிச்செய்த

# பிரபுலிங்கலீலை

அரும்பத விசேட ஆராய்ச்சிக்
குறிப்புரையுடன்.

B. இரத்தின நாயகர் ஸன்ஸ்

சென்னை.

வேதாந்த சித்தாந்த வீரசைவ சமயாசாரியராகிய

துறைமங்கலம் - சிவப்பிரகாச சுவாமிகள்

அருளிச்செய்த

# பிரபுலிங்கலீலை

தேவாரம், திருப்புகழ், பெருமாள் திருமொழி, திருக்குறள்,
திருக்கைலாய ஞானஉலா முதலிய பல நூல்களின்
உரையாசிரியரான

பிரசங்கபூஷணம்
பு. பா. இரத்தினசபாபதி நாயகர் அவர்கள்
இயற்றிய
அரும்பத விசேட ஆராய்ச்சிக் குறிப்புரையுடன்

---



பதிப்பாசிரியர்கள் :

B. இரத்தின நாயகர் அண்டு ஸன்ஸ்,
திருமகள்விலாச அச்சுக்கூடம்,
சென்னை.

பதிப்புரிமை]   1938.   [விலை ரூபா 2.

# கதிகளின் அட்டவணை.



ஆக கதி 25 - க்கு திருவிருத்தங்கள் - 1159.



# முகவுரை

அமுதினு மினிக்கு மருந்தமிழ் நாட்டின் ‘செவ்விய மதுரஞ் சேர்ந்தநற் பொருளிற் சீரிய கூரிய தீஞ்சொல் வவ்விய கவிஞருள் கவிதா சார்வ பௌம ரெனப்படுந் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய பிரபுலிங்கலீலை யெனு மிந்நூல், இறைவன் தன்மையின்ன; அவ்விறைவனை யடையும் நெறியின்ன; அந்நெறிக்குத் தடையா யிருப்பன வின்ன; அத் தடைப்பாடுகளை யகற்றும் முறையின்ன எனுமாற்றைத் தெளிவுற விரித்துக் கூறும் பெற்றித்து.

வீரசைவம் கூறும் ஞானநெறியினை கதைப்போக்கில் சலிப்புத்தோன்றா வண்ணம் விளக்கும் இதுபோலும் நந்நூற் பிறிது கண்டிலம். சுவைமிகு கற்பனை நயங்கட்குக் கருவூல மென்னுங் கருத்தால் தமிழன்னை வயின்வந்த பிறசமயப் புலவோருள்ளும் மிகச் சிறந்த இலக்கிய நூலென் றிதையேற்றுப் போற்றாதா ரிலர்.

ஒருமுறை யோதினரை மீட்டும் மீட்டும் தன்னை யோதுமாறு செய்யும் இந்நூற் செய்யுட் பொலிவுகளை வரைவானும் வாயானும் வகுத்துரைக்க லாங்கொல்?

வரலாற்று வாயிலாக வீட்டிற்கு நேர்வழியாம் ஞானத்தைக் கற்பிக்கும் இந்நூலால் நாம் உணரக்கிடக்கும் செய்திகள் பல:

நிராங்கார சுஞ்ஞானிகளிடத்து அல்லமர் தோன்றினரென்றலின், அகங்கார மமகாரமற்ற தூய ஞானிகட்கே சிவத்தைக் காண்டலியலு மென்பதூஉம்;

உன்னலு மியலாது அல்லமனைக் காண்டலென உமைக்குப் பரமன் ஓதினா னென்றலின், சிவதத்துவத்தினும் சத்திதத்துவம் உயர்ந்ததென்பார் கூற்று ஒரு சிறிதும் சாலா வென்பதூஉம்;

உமாதேவியின் குணக்கூறுகள் மூன்றனுள் இராசத தாமதகுண மடந்தையர்க டம்மா லறிதற்கியலா அல்லமர், சத்துவகுண மங்கையா லறியப் பெற்றா ரென்றலின், சத்துவகுணத்தாற்றான் சிவத்தைக் காண்டலியலு மென்பதூஉம்;

மமகார மோகினியர்க்கு மகளாக மாயை தோன்றினு ளென்றலின், மாயையின் தோற்ற மின்ன விடத்தினு மென்பதுவும், அவட னிலக்கண மித்தன்மைத் தென்பதூஉம்;

வசவண்ணர் வரலாற்றான் மெய்யன்புடையோரை யிறைவனே குரு வடிவாய் வந்து அருணெறி காட்டி யாட்கொள்வ னென்பதூஉம்;

அக்கமாதேவி வரலாற்றான் ஆண்களே யன்றி அரிவையரும் வாய்மை நெறியின் மலர்வரேல் அருணெறி பெறுதற் குரியவர்க ளென்பதூஉம்;

கொக்கிதேவர் சித்தராமையர் கோரக்காதியர் வரலாற்றான் சரியை கிரியைகளும் எண்வகைச் சித்திகளும் வீட்டிற்கு நேர்வழியாகா வென்பதூஉம்;

மருளசங்கரர் வரலாற்றான் ஞானிகள் நேர்வும் பெருமிதமு மித்தன் மைத் தென்பதூஉம்;

இவற்றோடு, புறவழிபாட்டினும் அகவழிபாடே நலனுடைத்து; குல வேற்றத் தாழ்வு அடியவரிடத்துக் கோட லாகா; திரிபுடிக்கோள் வீட்டு நிலைக் குரித்தன்று என்பனவுமாதிய இந்நூலிற் பெரிது பாராட்டப்பெறும்.

மனோலயகதி இந்நூற்கோர் மகுடம் போல்வது; வீட்டின் அடைவிற்கு மனோலயம் இன்றியமையாதது என்னுமிஃதெவரானு மறுக்க வொண்ணாத தன்றே! இறுதியாக வசவண்ணர்க்கு ஓதியமையானு மிஃதுணரப்பெறும். இக்கதியை யோதுநர் சிந்தனைச்செறிவு பெரிதுபெற்று பின் ஒடுக்கங் காண்பரிது திண்ணம்.

இந்நுட்பங்களை நினைப்பித்தாங்கே மாலைக்கால வருணனை மதிகண் டிரங்கல் தென்றலை குயிலை மதனனைப் பழித்தலாதிய துறைகள்; மாயை அல்லமனைத் தழுவுதன் முதற்பல் இடங்கள் நம் கருத்தைக் கவர்ந்து கனிவிக்கும் தகையன. விமலகதி 39 - ஆம் செய்யுளின் ஈற்றடியில்

“வருக வென்றனை மகிழ்தர வந்து மேல்விழு மல்லமன்”

என்ற பாடங்கொள்வது நேர்.

முன்னோர் முதுமொழியும் பொன்னேபோற் போற்றுவமென்ற கருத் தான் இந்நூலாசிரியர் தற்குமுற்கவிகளைப் பிறபற்றியனவும்; இவரைப் பின் பற்றிப் பிறகவிகள் இவர் செய்யுட் கருத்தை யேற்றனவுமாக உள்ள இடங் கள் பற்பல. இதனை விரிக்கிற் பெருகுமெனினும் தாலீபுலாகம்பற்றி யிரண்டோ ரிடங்களை மட்டும் நினைப்பது தகும்.

மாயை யுற்பத்திகதி 11 - ஆம் பாட்டிற் கூறிய வயல்வளச் செய்தியை:—

" மீன்களினளவும்வெற்றிடங்களின்மையாற்
தேன்கணக்கரும்பியல்காடும்செந்நெலின்
வான்புகழ்களிறுமாய்கழனியாக்கமு
மூன்கலூர்க்குரைப்பரிதொல்லென்சும்மைத்தே "

என்ற [சீவகசிந்தாமணி, நாமக ளிலம்பகம் 25 - ஆம்] செய்யுளினும்;

பிரபுதேவர்வந்தகதி 63 - ஆம் செய்யுட் கருத்தை;

" வருந்தியீன்றுண்மறந்தொழிந்தாள்வளர்த்தாள்சொற்கேட்டில்கடிந்தாண்
முருந்தின்காறுங்கூழையைமுனிவார்நின்னையென்முனிவார்
பொருந்திற்றன்றலிதுவென்னுய்பொன்றுமளித்திவ்வுயிரென்னுய்
திருந்துசோலைக்கருங்குயிலேசிலம்பவிருந்துகூவுதியால் "

என்ற [சீவக:—கனகமாலையா ரிலம்பகம்—105 - ஆம்] செய்யுளினும்;

பிரபுதேவர்வந்தகதி 78 - ஆம் செய்யுட்கருத்தை;

" அம்பொரைந்துடையகாமனையனென்னவந்தண
னம்புநீரல்லர்நன்குரங்குநீரராயினும்
தங்குரவர்தாங்கொடுப்பினெஞ்சுநேர்ந்துதாழ்வர்தாம்
பொங்கரவவல்குலாரெனப்புகன்றுசொல்லினான் "

என்ற [சீவக—சுரமஞ்சரியாரிலம்பகம் 3 - ஆம்] செய்யுளினும்;

கைலாயகதி 39 - ஆம் பாட்டை

" மழவிற்பாற்கடல்மாந்திவளர்ந்தன
மதத்திலக்கடல்பான்முடைமாற்றின
முழவிற்பூரித்தகும்பகுடந்தொறும்
மூரியேழ்கடலுந்தருமூக்கின "

என்ற [தக்கயாகப்பரணி 273 - ஆம்] செய்யுளினும்;

சூனியசிங்காதனத்திலிருந்தகதி 9 - ஆம் பாட்டை

" கூவிரியால்விண்விரியக்கூராழிகள்பதிந்து
பாவிரிசேடன்படம்விரியத்—தேவருல
கச்சாணியந்தேரணிகுடைக்குமப்பாலே
கைச்சாணிருசாணேகாணுமென—முச்சகமும்
கோத்தமகமேருக்கூண்டனையதேர்மீதில்
வாய்த்தமகதேவன்வரல்கேட்டாள் "

என்ற [தேவையுலா 304, 5, 6 - ஆம்] கண்ணிகளினுமறியத்தகும்.

இன்ன பல;

ஆய்விற் கருத்துடையார் முயற்சிப் பெருக்கம் உன்னியே சில விடங்களை நினைப்பிக்க நேர்ந்தேம். பாநலனும் நடைநலனும் ஒருபுறமிருக்க; ஞான நெறி ஒன்றனையே பின்பற்றும் இந்நூலின் உட்பொருண்மை அநுபவிகட்கே விளக்கமாவதெனும் உட்கோள் வீரசைவ உலகின் உலவுகின்றது.

இங்ஙனம் அருமையும் பெருமையும் மிக்குள இந்நூல், நல்ல தாளில், பிழையின்றியும் விளக்கமான குறிப்புரையுடனும் ஒரு பதிப்பு வருமேல் நலமெனப் பலர் என்னிடம் கூறியதுகொண்டு இப்பெருஞ் செயலிற் கொருசிறிதும் ஆற்றேனெனஎன்னை அறிந்து வைத்தும்; கடமையை முன்னிட்டும், ஏதாயினும் ஒரு திருப்பணி வாழ்க்கையில் செய்து போதால் நோக்கானும் இதற்கொவ்வ நேர்ந்தேன்.

சீர்பிரித்தல்; அடிவரையின் மொழி முதலில் உயிர்வரப் பார்த்தல்; கடின பதம் அனைத்திற்கும் குறிப்புரை கூறல்; ஆவசியகம்பற்றிச் சில விடங்களில் விசேடங்காண்டல்; முதற்குறிப்பகராதி யமைத்தல் ஆதிய இப் பணிக்கே இப்பதிப்பு பிறபதிப்பினும் பக்கம் மிக்கமை கருதி மேலும் விசேடம் காண அஞ்சினம்.

வியாபாரமும் பொருளீட்டலுமே யன்றி மொழியினும் எழுத்தினும் இயன்றவரை பிழைநோவின்றிக்கே நூல் வெளியாதல் நேரிது எனுங் கோட்பாட்டிற் கருத்தூன்றி எளிய விலைக்குமாக இந்நூலை வெளியிட்ட **திருமகள்விலாச அச்சுக்கூடத்தார்க்கு** இவ்வுலகம் பெரிதும் கடப்பாடுடையது.

இத்தகை நூற்களை மென்மேலும் அன்னோர் வெளியிடத் திருவருள் தூண்டுதல் நேர்வதாக எனப் பரமன் திருவடித்துணை பரவுகின்றேன்.

மீட்டும் யான் வேண்டுவதொன் றுண்டெனின், தமிழ்மக்கள் எளியேனது இத்திருப்பணியை யேற்குமாறு வேண்டுவதே.

அன்னையா யீன்று பின்னோர் நற்கதி புகுத்தும் தன்மையால் மகவாகி நிற்கும் தகைமைவாய்ந்த காவியத் தெய்வத்தின் காங்களுக்கே அடைக்கலம்.

ஆர்வலன்:

**பு பா. இரத்தினசபாபதி.**

துறைமங்கலம்

# சிவப்பிரகாச சுவாமிகள் சரித்திரம்.

காஞ்சீபுரத்தில் தொண்டை மண்டல வேளாளர்க்குத் தீட்சா குருவாக விளங்கியவர் ஸ்ரீ குமாரஸ்வாமி தேசிகர் என்பவர். அவர் தவறாது ஆண்டு தோறும் கார்த்திகைத் தீபம் தரிசித்து வந்ததன் பயனாக, திருவண்ணாமலையான் திருவருட் பேற்றால் சிவப்பிரகாச சுவாமிகள், கருணைப்பிரகாச சுவாமிகள், வேலையப்ப சுவாமிகள், ஞானாம்பிகை எனப் பெயரிய நால்வரை மக்களாய்ப் பெறும்பேறு அடைந்தார்.

தனது தவப்பயனால் மலர்ந்த மக்கள் கல்வி பயிலும் இளம்பருவத்தேயே குமார தேசிகர் சிவலிங்க ஐக்கியமாயினர். அதனால், மக்களுள் முதல்வரான சிவப்பிரகாச சுவாமிகள் உடன் பிறந்தாருடன் திருவருணையை யடைந்து அங்கு ஆலயத்தின் தெற்கு வீதியில் உள்ள மடத்துக் குருதேவரை வணங்கி அவர் ஆதரவில் சிலகாலம் அங்குத் தங்கி, தம் கல்வி முயல்வில் தளராது வாழ்ந்து வரலானார்.

ஒருநாள் அண்ணாமலையை வலம் வரும் இவர், நாப்படைத்ததன் பயனாக ஓர் திருப்பணியாற்றக் கருதினராய், சோணசைலமாலை எனும் பெயருள நூறு செய்யுட்களினா லமைந்த பிரபந்த மொன்றைப் பாடி அண்ணாமலையாரைத் துதித்தனர்.

பெரிய தமிழிலக்கணங்களிற் பயில வேண்டுமெனும் அவா சுவாமிகளை உறுத்தலாயிற்று. அது காரணமாகத் தென்னாடு நோக்கிச் செல்லும் அமயம் வழியிடைப்பட்ட வாலிகண்டபுரத்தின் அண்மையின் உள்ள துறைமங்கலம் எனும் பதியைச் சார்ந்ததொரு நந்தனவனத்திற் றங்கி சிவபூசை நிகழ்த்திக் கொண்டிருந்தார்.

துறைமங்கலத்தில் பெருஞ் செல்வச் சீமானும், பண்டகுலத்தில் வந்தவரும் வல்லகோல் எனும் குடும்பப் பட்டப்பெயர் பூண்டவருமான லிங்கப்ப ரெட்டியாரது புதல்வரும், நீலகண்ட ரெட்டியாருடைய சகோதரரும், கல்வி அறிவு ஒழுக்கம் சிவபத்தி தமிழிலக்கியப் பயிற்சி புலவர்மாட்டு அன்பு சிற்றரசரென உயர்ந்த மதிப்பு ஆதிய நிறைந்த அண்ணாமலை ரெட்டியார் என்பவர், சிவப்பிரகாச சுவாமிகள் தமது ஊரை யடுத்த நந்தனவனத்திற் றங்கி யிருத்தலை ஓர்ந்து, விரைந்து சென்று சுவாமிகளை யடைந்து விழுந்து அடிபணிந்து எழுந்து, எந்தாய்! தேவரீர் இவ்

விடத்திலேயே எழுந்தருளி யிருக்க வேண்டும் என அவர் திருமேனி யிருப்பில் ஈடுபட்டாராய் வேண்ட, சுவாமிகள் குருலிங்கம சங்கம பத்தியிற் றலைசிறந்த ரெட்டியார் வேண்டுகோளை மறுக்க ஆற்றாராய் அங்ஙனமே உடன்பட்டு, அவ்வூரில் சென்னவசவையர் மடத்திற்கு மேற்றிசையில் ரெட்டியார் தமக்கென அமைத்தளித்த திருமடத்திற் றங்கி, இரவும் பகலும் நீங்கா அணுக்கத் தொண்டராயிருந்த ரெட்டியார்க்கு இரண்டு ஆண்டுவரை சன்மார்க்க போதனை செய்து கொண்டிருந்தார்.

அதன்பின், கல்வி நிலையில் தாங்கொண்டிருந்த கருத்தை நிறைவேற்றிக்கொளன் முகத்தால் ரெட்டியாரிடம் பிரியா விடைபெற்று, தருமபுர ஆதீனத்தை யடைந்து, அங்கிருந்த வெள்ளியம்பலவாண சுவாமிகளை யடைந்து தம் நினைவை யுணர்த்த, அவர்கள் சிவப்பிரகாச சுவாமிகளின் இலக்கியப் பயில்வை யறிதனிமித்தம், 'கு' என முதலெடுத்து, 'ஊருடையான்' என்பதை இடைப்பெய்து ஈற்றினும் குகரமே உறவோர் வெண்பாப் பாடுதிர் எனலும் உடனே,

> " குடக்கோடு வானெயிறு கொண்டாற்குக் கேழன்
> முடக்கோடு முன்னமணி வாற்கு—வடக்கோடு
> தேருடையான் றெவ்வுக்குத் தில்லைத்தோன் மேற்கொள்ள
> லூருடையா னென்னுமுல கு"

என விரைந்து தங்கு தடையின்றிப் பாடியதையும், இடையில் மன்மதனை வடக்கோடு தேருடையான் என்பதன் அழகையும் வியந்த வெள்ளியம்பலவாணர் சிவப்பிரகாச சுவாமிகளைப் பாராட்டி, அவர்க்கும் அவரது உடன்பிறந்தவ ரிருவர்க்குமாக ஐந்திலக்கணங்களையும் ஒருபட்சத்திற்குள் போதித்தனர். அதனாற் பெரு மகிழ்வெய்திய சிவப்பிரகாச சுவாமிகள் ரெட்டியார் தம் வழிச்செலவிற்கென உபகரித்த முந்நூறு பொன்னையும் குரு தக்கிணையாக வைக்க, வெள்ளியம்பலவாண சுவாமிகள் அதை மறுதலித்து, திருச்செந்தூரில் தமிழ்ப்புலவ ரொருவர் கல்விச்செருக்கால் அகங்கரிக்கின்றார்; அவர்தம் வீறடக்குதிராயின் அஃதே சாலுமென அதற்கு உடன்பட்டு, தம்துணைவரும் தருமபுரத்துப் பிற மாணவகரும் தொடர திருச்செந்தூர்ப் போந்து, அவணுள புலவரைக் கண்டனராக, அவர் தமிழறிவிற் றம்மினும் மிக்கார் யாங்கணு மில்லையெனத் தருக்குதலைத் தாமேயும் நேரிலறிந்து, நிரோட்டகமாக யமகம் பாடுவது ஒரு குறிப்பிட்ட காலவரைக்குளென அவரை உடன்படுத்தி, அவ் எல்லைக்குள் தாம் 'திருச்செந்தூர் நிரோட்டகயமக வந்தாதி' யெனப் பெயரிய பிரபந்தத்தைப் பாடி, அதுவரை ஒரு பாடலும் பாட இயலா அப்புலவரை வென்று அடிமைப்படுத்தி யழைத்து வந்து, வெள்ளியம்பலவாண சுவாமிகள் முன் கொணர்ந்து நிறுத்தி யவர் செருக்கடக்கினர். தம் கருத்தை நிறைவேற்றிய சிவப்பிரகாச சுவாமிகள் விடயத்தில் வெள்ளியம்பலவாண சுவாமிகளுக்கு உண்டான மகிழ்ச்சிக்கு அளவுண்டோ.

பின், தருமபுரத்தில் உத்தரவு பெற்று நீங்கி, பல சிவ தலங்களைத் தரிசித்தபடி துறைமங்கலம் அடைந்து ரெட்டியார்க்குத் திருவருள் பாலித்து, அவர் வேண்டுகோளின்படி அவர் ஆளுகையில் அமைந்த வாலிகண்டபுரத்தின் வடமேற்கில் உள்ள * திருவெங்கைமாநகரத்தில், தம் பொருட்டு அமைத்த திருமடத்தில் தங்கினர். அத்தலத்தில் எழுந்தருளிய † பழமலைநாதர் மேல் திருவெங்கைக்கோவை, திருவெங்கைக் கலம்பகம், திருவெங்கையுலா, திருவெங்கை யலங்காரம் எனப் பிரபந்தங்கள் நான்கு இயற்றினர்.

---

* இத்தலம் திருச்சிராப்பள்ளி ஜில்லாவில் பெரும்புலியூர்த் தாலுக்காவில் உள்ளது.

† திருவெங்கைக் கோயிலைக் கட்டியவர் அண்ணாமலை ரெட்டியார். இவர் தமக்கே உரிய பல கிராமங்களுள் ஒன்றான வெங்கனூரில் குடியிருந்தனர். அவ்வமயம் ஒவ்வொரு பிரதோட நாளினும் நோன்பிருந்து விருத்தகிரி யடைந்து பழமலை நாதரையும் பெரியநாயகியாரையும் வழிபடும் இவர், ஒரு அமயம் வெள்ளாற்றில் நேர்ந்த வெள்ளங் காரணமாகப் பிரதோட காலத்தில் விருத்தகிரி செல்லமுடியாது தவித்து இல்லம் திரும்பியிருந்தனராக, அன்று இரவு இவர் கனவில் பழமலைநாதர் வெளிப்பட்டு, வெங்கனூரில் குறிப்பிட்ட ஒரு இடத்தை நினைவுறுத்தி, அங்கு சிவலிங்கத்தை பிரதிட்டித்து வழிபடுகவெனக் கட்டளையிட்டதை விழித்தெழுந்த ரெட்டியார் வியப்பு மீக்கூர்ந்து, திருவருட்டிறத்தை எண்ணி யகங்களித்து இறைவன் குறிப்பித்த இடத்தை யடைந்து கண்டு அப்படியே நர்மதை நதியிலிருந்து பாணலிங்கம் வருவித்துத் தனியே பிரதிட்டித்து நாடோறும் வழிபட்டு வந்தார்.

அவ்வமயம் வடநாட்டில் உண்டான பஞ்சம் காரணமாகப் போந்த சிற்பிகள் தென்னாட்டிற்குத் தம் ஊர் வழியாகப் போதலையறிந்து அவர்களை நிறுத்தித் தம் கருத்தை அவர்கட்கு உணர்த்த; தக்ககாலத்தில் நேர்ந்த உபகரிப்பென மகிழ்ந்த அவர்கள் உடன்பட்டு விதிப்படி ஊக்கம் தளராது ஆலயம் கட்டி வந்தனர். தமக்கு ஒரு குறையும் நேராது உபகரிக்கும் ரெட்டியார் விடயத்தில் கொண்ட பரிவால் சிற்பிகள் தம் கடமை தவறாது கட்டலாயினர். சிற்பத்தலைவன் தாம்பூல விருப்பனென அறிந்த ரெட்டியார், அவனுக்கென ஓர் அடைப்பக்காரனை அமைத்து விரும்பும் எக்காலத்தும் தாம்பூலம் மடித்துத்தர ஏற்படுத்தி யிருந்தார். சிற்பத்தலைவனுக்கு இதனல் நேர்ந்த மகிழ்விற கெல்லையுண்டோ.

ஓர் நாள் பாவுகற்களின் உட்பாகத்தில் சிற்பத்தலைவன் பல சிற்பங்களை சாரத்தின்மேல் இருந்து அண்ணாந்து பார்த்தபடி மன ஒருமையோடு அமைத்துக்கொண்டிருந்த அமயம், ரெட்டியார் அங்கு அவன் வேலைக்குத் தடை நேராதபடி சந்தடிசெய்யாது மெதுவாக வந்து அச் சிற்ப அழகுகளை வியந்தபடி நின்றார். சிற்பத் தலைவனுக்குத் தாம்பூல நினைவு எழ, கண்

பின்னர் ஒரு நாள் அவ்வூர்ப் பிடாரியார் தேர் விழவில் அடியவர்க்குப் பயனாகத் திருமடத்தின் எதிரிலிருந்த முருங்கைமரம் முரிந்தமை கண்டு,

"திருந்துதமி ழிலக்கணவைந் திணைக்கோவை
விருத்தகிரிச் செல்வர்க் கோதும்
பெருந்தகைமை யுடையம்யாம் விடுமோலை
வெங்கைநகர்ப் பிடாரி காண்க
இரும்புவியி லொருமுருங்கைக் கொம்பொடியா
மற்காத்திங் கிருக்கு நீநம்
முருங்கைதனை வேரோடும் களைந்தனையென்
றூலுனக்கு முறைய தாமோ"

எனப் பாடினராக, உடனே அத்தேர் அழிந்தொழிந்தது என்பர்.

அந்நாளில் ரெட்டியார், சுவாமிகளை திருமணம் செய்துகொள்ளுமாறு வேண்ட உடனே சுவாமிகள்,

"சேய்கொண்டா ருங்கமலச் செம்மலுட னேயரவப்
பாய்கொண்டா னும்பணியும் பட்டீச் சுரத்தானே
நோய்கொண்டா லுங்கொளலா நூறுவய தாமளவும்
பேய்கொண்டா லும்கொளலாம் பெண்கொள்ள லாகாதே"

எனவும்,

---

களை வேலைப்பாட்டிற் செலுத்தியபடி தாம்பூலத்திற்குக் கையைக் கீழ் நீட்டினான்; அடைப்பக்காரன் அவ்வமயம் வெளியே போயிருப்பதை அறிந்து ரெட்டியார், தனது அருகில் நின்ற தனது அடைப்பக்காரன் தமக்கு அப்போதளித்த தாம்பூலத்தை எடுத்து சிற்பியின் கையில்தர, கொடுத்தது ரெட்டியாரென அறியாது அதை யவன் தன் வாயிலிட்டு மெல்ல, அது அளவிறந்த வாசனைப் பொருளமைந்ததாயிருக்க வியந்த சிற்பி எது இது என்று கேட்கக் கீழ் நோக்கி, மீட்டும் தனக்களிக்கக் கைநீட்டும் ரெட்டியாரை யறிந்து உடனே அச்சத்தொடு கீழே குதித்து வணங்கி நடுங்கி 'என் அபசாரம் மன்னியுங்கள்' என்று கதற; ரெட்டியார் அஞ்சாதீர்; சிவாலயம் கட்டும் புண்ணியமிக்க உமக்குத் தாம்பூலம் மடித்துத்தர என்ன புண்ணியம் செய்தேன் யான் என்று அவனைத் தேற்றினர். அவர் மனப் பாங்கையறிந்த சிற்பத் தலைவன் பக்திப் பெருங்கா தன்மிக்கு ரெட்டியார் என்ன கூறியும் கேளாது கூலி வாங்குதலின்றியே அவ்வாலயங் கட்டினன். இறுதியில் ரெட்டியார் அவனுக்கு சன்மானம் செய்து மகிழ்வித்தனர், என்ற வரலாறு அறிஞர்கள் ஆய்வினுளது. கூலிக்கெனக் கட்டாது அன்பு மீக்கூர்வில் அமைத்ததாகலின் அவ்வெங்கனூர் ஆலயம் மிகச் சிறப்பாக அமைந்துளது.

அண்ணாமலை ரெட்டியார் குணத்தையும் அவர்கனவில் இறைவன் எழுந்தருளித் தெரிவித்ததையும் நரரைப் பாடேன் என்றிருந்த தம் வாயால் சிவப்பிரகாச சுவாமிகள் திருவெங்கை யுலாவில் பெரிது பாராட்டியுளர்.

பட்டையிலே யிருந்துமனத் துறவடைந்த பெரியோர்க ணிமலன் றுளைக்
கொட்டையிலே தொடுத்துமுத்தி பெறுமளவும் பெரியசுகம் கிடைக்குங் காம
வெட்டையிலே மதிமயங்குஞ் சிறுவருக்கு மணம்பேசி விரும்பித் தாலி
கட்டையிலே தொடுத்துநடுக் கட்டையிலே வைக்குமட்டும் கவலை தானே"

எனவும் விடையிறுத்தனர். சுவாமிகள் உட்கருத்துணர்ந்த ரெட்டியார் வேலையப்ப சுவாமிகளை வேண்ட, அவர் சிவப்பிரகாச சுவாமிகள் கட்டளை யாதாமோ எனும் ஐயப்பாட்டால் உடன்படல் மறுத்தல் இரண்டுமின்றி வாளாவிருக்க, பின் யாத்திரையினின்று மீண்ட கருணைப் பிரகாசரை ரெட்டியார் வேண்டலும் அவர்,

"நாணி யென்பதை நாரியென் றுரைத்திடு நசைபால்
வேணு வானது வளைந்துபோய்ப் புகுந்தது வென்றால்
காண லாவதோ ருருவமெய்ந் நாரியைக் கண்டால்
பூணு வார்மயற் காளைய ரென்பதும் புதிதோ"

எனும் கலித்துறையில் தங்கருத்தறிவிக்க; தம்பியர் இருவர்தங் கருத்துணர்ந்த சுவாமிகள் தாம் துறவு பூண்டமையை உணர்த்தி யவ்விருவர்க்கு மட்டும் மணம்புணர்த்தி ஆசி வழங்கினர்.

அதன்பின் ரெட்டியாருடன் சிதம்பரம் போந்து அங்கொரு மடம் கட்டுவித்து அதிலிருந்து, சிவப்பிரகாச விலாசம், தருக்கபரிபாடை, சதமணிமாலை, நால்வர் நான்மணிமாலை எனும் பிரபந்தங்களையருளி, பிற தலங்களையும் வழிபட்டு, திருக்காட்டுப்பள்ளியை யடைந்து சில நாள் தங்கினர். ஒரு நாள் வீதியில் உப்பு விற்பாள் குரல்கேட்டு அவள்பால் இரக்கம் உற்று அவட்கு சட்சுதீக்கை செய்து அவளது ஆகூழையும் பக்குவ நிலையையும் பிறர்க்குணர்த்த வுன்னி,

"நிறைய வுளதோ வெளிதோ கொளுவேம்
பிறையை முடிக்கணிந்த பெம்மான்—உறையும்
திருக்காட்டுப் பள்ளி திரியாவாய் நீயிங்
கிருக்காட்டுப் பள்ளி யெமக்கு"

எனும் வெண்பாவை யருள, அவள் உடனே,

"தென்னோங்கு தில்லைச் சிவப்பிரகா சப்பெருமான்
பொன்னோங்கு சேவடியைப் போற்றினோம்—அன்னோன்
திருக்கூட்ட மத்தனையுந் தெண்டனிட்டோந் தீராக்
கருக்கூட்டம் போக்கினோங் காண்"

எனும் வெண்பாவைப் பாடி உளமுருகி வணங்க அவட்கு அருள் புரிந்தனர்.

பின் ரெட்டியாருடன் காஞ்சிபுரம் வரும்வழியில் சாந்தலிங்க சுவாமிகளைக் கண்டு உறவாடி, அவர் வேண்டுகோளாலுந் தெய்வத் தூண்டுதலாலும் சிவஞான சுவாமிகள்மீது தாலாட்டு, நெஞ்சுவிடுதூது முதலியவற்

றைப் பாடி அவற்றை சிவஞான சுவாமிகள் சந்நிதானத்திலேயே அரங்கேற்றி, அவரிடம் ஞானோபதேசம் பெற்று, அவர் கட்டளைப்படி தம் தங்கையை சாந்தலிங்க சுவாமிகட்கு மணம்புணர்த்தி, ரெட்டியாரைத் துறைமங்கலத்திற்கு அனுப்பிவிட்டு, தம் ஞானசாரியரை வழிபட்டுக் கொண்டிருந்தார்.

அதன்பிறகு காஞ்சீபுரம் அடைந்து, வேதாந்த சூடாமணி, சித்தாந்த சிகாமணி, பிரபுலிங்கலீலை முதலியவற்றைப் பாடி, ஞானசிரியர் மீதெழுந்த நினைவு காரணமாக அவர்மேல் திருப்பள்ளியெழுச்சி, பிள்ளைத் தமிழ் எனும் பிரபந்தங்களை யருளி, அங்ககன்று இடையில் உள்ள தலங்களையும் தரிசித்து, கூவத்தை யடைந்து அங்குளார் வேண்டுகோளால் கூவப்புராணம் பாடி யரங்கேற்றி, பின் ஞானசாரியரை யடைந்து உடன் வசித்திருந்தார்.

அதன்பின் ஞானசாரியர் கட்டளைப்படி விருத்தகிரியடைந்து, தம் பொருட்டு அங்கோர் திருமடம் அமைத்து எதிர் வணங்கிய சிதம்பர பூபதியை ஆசீர்வதித்து அம்மடத்தில் தங்கி பழமலையந்தாதி, பிட்சாடன நவமணிமாலை, கொச்சகக் கலிப்பா, பெரியநாயகி விருத்தம், கலித்துறை யாதிய பாடினர்.

ஒருநாள் விருத்தகிரியில் உள்ள மணிமுத்த நதியில் நீராடி வரும் அமயம், வழியிலுள்ள மரத்திலிருந்து விழுந்து எடுப்பாரின்றி வறிது கிடந்த மாங்கனி யொன்றைக் கண்டு, இது சிவ நைவேதனத்திற்கு உதவுமென எடுக்க, அதை அச்சோலைக் காவலன் கண்டு, சுவாமிகளைக் கள்வனென வைது மடிபிடித் திழுத்து மனவருத்தஞ் செய்ய, அதனால் சிவாபராதம் மிக்க அவனை ஒறுத்து அத் தீமை கழிக்கும் முகத்தால்,

“அடுத்துவருந் தொண்டனுக்கா வந்தகனைத் தாளா
லடர்த்ததுவுஞ் சத்தியமே யானால்—எடுத்தொரு
மாங்கனிக்கா வென்னை மடிபிடித்த மாபாவி
சாங்கனிக்கா தித்தன்வரத் தான்”

எனும் வெண்பாவைப் பாடி, கதிரோ னுதயமாதற்குள் உயிர் துறக்கச் செய்து அவனை நற்கதியிற் புகுத்தினர் என்பர்.

இடையில் தமது ஞானசாரியர் இஷ்டலிங்க பரசிவத்திற் கலந்தமை யறிந்து மனங்கலங்கி பொம்மபுரம் போந்து ஆசிரியரொடுங்கிய குகையுட் புகுந்து வணங்கித் தம்மையும் விரைவில் திருவடியிற் சேர்க்குமாறு வேண்டி, தாமியற்றிய கலம்பகத்தையும் சந்நிதியி லரங்கேற்றி அங்கு ஞானசிரியரை பாவனுருபமாக வழிபட்டிருந்து, ஒருநாள் கடற்கரை மணலில் தாம் எழுதிவைத்த நன்னெறி வெண்பா நாற்பதையும் எழுதி வருமாறு தம்பி கருணைப் பிரகாசருக்குக் கட்டளையிட்டு, அவர் அங்ஙனே கொணர்ந்தபின், பல தலங்களையு மடைந்து வழிபட்டு, வழியில் சதுரகாதி செய்த வீரமா முனிவர் எதிர்ப்பட்டு சமய முறையில் தருக்கவாத நிகழ்த்த, சுவாமிகள்

அவர் தங் கொள்கையை ஏகமத நிராகரணம் எனப் பெயரிய நூலொன் றியற்றி மறுத்து, பின் நல்லாற்றூரை யடைந்தனர். இடையில் கருணைப் பிரகாசர் இட்டலிங்க அகவல் பாடி நிறைவேற்றி, சீகாளத்தி புராணம் ஆரம்பித்து சீகாளத்திச் சருக்கம்வரை பூர்த்தி செய்து திருவெங்கையில் பதினெட்டாம் வயதில் பூர்த்தி யெய்தினர். அதனை யறிந்த சிவப்பிரகாச சுவாமிகள்,

"முன்னமொரு தமிழ்ப்புலவன் றனையுண்டு கண்டசுவை முதிர்ச்சி யாலே
தன்னியலை முழுதுமுரைத் தமையாமுன் னினைக்கவர்ந்து தடங்கா ளத்தி
மன்னவனுண் டானெனது மாதவத்தின் வலிதீர மண்ணின் மீதே
என்னுடன்வந் தவதரித்த விளங்கருணைப் பிரகாச னென்னுங் கோவே"

என வருந்திப் பாட; உடனே வேலையப்ப சுவாமிகள்,

"ஆண்டதனு லெனையொவ்வாய் வித்தையினிற்
றமையனினு மதிக மென்றே
பூண்டஉல கதனிலுளோர் புகல்வதுகேட்
டிருந்துமென்ன புதுமை தானோ
காண்டகுகண் மணியேநல் விளங்கருணைப்
பிரகாசக் காளாய் நீதான்
மாண்டனையென் றறிந்திருந் துயிர்தரித்தேன்
யானுமிகு வன்னெஞ் சேனே"

எனப் பாடி வருந்த, சிவப்பிரகாச சுவாமிகள் அவரைத் தேற்றி நிறுத்தி, தாம் நல்லாற்றூரை யடைந்து, திருமடத்திற்றங்கி சிவநாம மகிமை, அபி டேகமாலை, நெடுங்கழிநெடில், குறுங்கழிநெடில், நிரஞ்சனமாலை, கைத் தலமாலை, சீகாளத்தி புராணத்துள் கண்ணப்பச் சருக்கம், நக்கீரச் சருக் கம் ஆதிய செய்தருளி சிவாநுபவமெய்தி வாழ்ந்திருந்து முப்பத்திரண் டாம் வயதில் கன்னிமதியில் பௌர்ணிமைத் திதியில் இட்டலிங்க பரசிவத் திற் கலந்தருளினர்.

அதையறிந்த வேலையப்ப சுவாமிகள்,

"அல்லிமலர்ப் பண்ணவனு மாராய்ந் தறிகவிதை
சொல்லு மிருவரிடைத் தோன்றியயான்—முல்லை
அரும்பிற் பொலிபு மணிமுறுவ னல்லாய்
கரும்பிற் கணுவிகர்த்தேன் காண்"

எனும் பாவைப்பாடித் துன்பக்கடலு ளழுந்தி, பின் ஒருவாறு தெளிந்து, சிவப்பிரகாச சுவாமிகளது சமாதியைத் தரிசித்து, அவ்விடத்தினின்று நீங்கி நல்லூர்ப்புராணம், இட்டலிங்கக் கைத்தலமாலை, வீரசிங்காதன புரா ணம், நமச்சிவாயலீலை, பாரிசாதலீலை, மயிலத் திரட்டைமணிமாலை, மயி லத்துலா ஆதிய பிரபந்தங்களை யருளி, சீகாளத்திப் புராணத்தையும் முடித்து, பெருமத்தூர் மடத்தில் எழுபத்திரண்டாம் வயதில் சிவலிங்க ஐக்கியமாயினர்.

# பிரபுலிங்கலீலை



பிரபுலிங்கலீலை யென்பது = பிரபுவாகிய லிங்கத்தினுடைய லீலை யென விரியும். பிரபு=சர்வைஸ்வர்ய சம்பன்னனான இறைவன் எனும் பொருட்டு. லிங்கம் என்பது, அருவுருவான சதாசிவத்தை உணர்த்திற்று. (சிவம் சத்தி நாதம் விந்து எனும் நான்கு நிலையையும் அருவம் எனவும்; பிரமன் விஷ்ணு உருத்திரன் மகேசன் எனும் நான்கு நிலையையும் உருவம் எனவும்; சதாசிவ நிலையை அருவுருவம் எனவும் ஓர்க.)

லீலை=திருவிளையாடல்; எம்மிறைவன் செய்யும் செயலெல்லாம் அவனுக்கு எளிதின் முடிதனோக்கி அவற்றை அவனது 'லீலை' யென்றார்: "சொன்னவித் தொழில்க ளென்ன காரணந் தோற்ற வென்னில், முன்னவன் விளையாட் டென்று மொழிதலு மாமே" என்பது சிவஞான சித்தியார். இறைவி காரணமாக நிகழ்த்தியதாகலின் 'லீலை' யென்றா ரெனினுமாம்.

பிரபுலிங்கலீலை யென்பது=மூன்று வடசொற்கள் இருசந்தியாலான ஒரு தொடர். பிரபுலிங்கம், பிரபுவாகிய லிங்கம் என விரிதலின், அல்வழி; இருபெயரொட்டுப் பண்புத்தொகை. லிங்கலீலை = லிங்கத்தினுடைய லீலை; ஆறாம் வேற்றுமைத் தொகை.

பிரபுலிங்கலீலை யென்பது அமலன் செய்த திருவிளையாடலை உணர்த்தும் நூலுக்காயிற்று; இது, நூற்குப் பொருட்குறிப்பிற் போந்த பெயர்.

பிரபு=அல்லமப் பிரபு என்க; அல்லமப் பிரபுப் பெயர்க்காரணத்தை இந்நூல் விமலைகதி 37-ஆம் செய்யுளின் அறிக.

இருபத்தைந்து கதிகளைக் கொண்ட இந்நூல் ஆன்ம தத்துவம் இருபத்ினொன்கும் கடந்த இருபத்தைந்தாம் தத்துவமான வீடுபேறடைதற் குறிப்புணர்த்திற்று என்பர் ஒரு சாரார்; அதன் மேலும் வித்யாதத்துவம் சிவதத்துவமாதிய உளவாகலின் அவர் கூற்று சாலாதென்பர் பிறர்: என்னை? தத்துவங் கடந்த தனிப்பெருந் தகுதித்து வீடுபேறு என்றலின்.



உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# பிரபுலிங்கலீலை

## கணபதி காப்பு

சுரகு லாதிபன் றாய்மலர் நந்தனம்
பெருக வார்கடல் பெய்த வயிற்றினோன்
கரக நீரைக் கவிழ்த்த மதகரி
சரண நாளுந் தலைக்கணி யாக்குவாம்.

(குறிப்புரை.) சுரகுலாதிபன்=தேவேந்திரன். நந்தனம்=பூஞ்சோலை. பெருக=தழைக்க. வார்கடல்=நெடியகடல்; வினைத்தொகை. பெய்தவயிற்றினோன்=அகத்தியன். கரகநீர்=கமண்டலநீர். மதகரி=யானைமுகர். சரணம்=திருவடிகள். தலைக்கு அணியாக்குவாம்=முடிமேற்கொள்வம்.

முதலாவது

# துதிகதி

## சிவஸ்துதி

பூவாய் நெடுங்கோட் டுறுபசுந்தேன் கைகான் முடங்கு பொறியிலித
நாவா யொழுகிற் றெனவுலக மளந்த மாலு நான்முகனுங் [ன்
றேவா வெனநின் றேத்தெடுப்பத் தானே வந்தெங் கரதலத்தின்
மேவா வமர்ந்த மாமணியைத் தொழுது வினைக்கு விடைகொடுப்பாம்.

(கு - ரை.) பூவாய் நெடுங்கோடு=மலர்களைத் தன்னகத்தேயுடைய நீண்ட கிளைகள். நாவாய்=நாவில். ஏத்தெடுப்ப=துதித்தல் செய்ய. மேவா=மேவி; வந்து. மாமணி=மாணிக்கம். இஃது இல்பொருளுவமை.

## தேவிஸ்துதி

...தி பகவன் றனதூட றணிப்பான் பணிய வவ்விறைவன்
...ாத மிறைஞ்சு மதற்குநெற்றிப் பகையு மல்குற் பகையுமாஞ்
...த மதியு மாவும்விழுஞ் செயற்கு முவகை செயாமலலை
...து பணியு மதற்குமன மகிழு முமையை வணங்குவாம்.

(கு - ரை.) ஆதிபகவன்=(திரு, ஐஸ்வர்யம், புகழ், வீர்யம், ஞானம், வைராக்யம் எனும்) அறு குணங்களுக்கும் முதல்வன்; பகம்= ஆறு. தனது ஊடல்=(இறைவன்மாட்டு) இறைவிகொண்ட பிணக்கு; ஊடலின் விரிவை திருக்குறள் காமத்துப்பாலில் காண்க. செற்றிக்குப் பகை சீதமதி, அல்குற்குப் பகை அரவு என இயைக்க. உவகை செய்யாமல்=மகிழாமல். அலைமாது=கங்கை. (2)

## கணபதிஸ்துதி

மார னெடுத்து வளைக்குமொரு கரும்பை யொடித்து மலர்சிதறி
நாரி யடுத்த வளிமாலை குலையத் துரந்து நயந்தோடி
வீர மனத்து வினைப்பாகர் குறிப்பி னொழுகி விளையாடும்
ஈர மதிச்செஞ் சடைக்களிநல் யானை யிணைத்தா ளேத்துவாம்.

(கு - ரை.) நாரி அடுத்த அளிமாலை=நாணியாகச் சேர்ந்துள்ள வண்டுக்கூட்டம். குலையத்துரந்து=கலைந்துபோகுமாறு துரத்தி. வினைப் பாகர்=இருவினை ஒப்பெய்திய ஆதோரணர். தின்னற்குக் கரும்பை ஒடித்தலும், மதர்த்த உணர்வால் மலர்களை இறைத்தலும், மதநீரில் வந்து மொய்க்கும் வண்டுகளைத் துரத்தலும், பாகர் நினைவு வழிச் சேறலும், யானைக்குச் சாதித்தன்மை. அதனைக் கணபதிமேல் கூறியது பிற கடவுளர்போல் காமத்தால் கலங்குவதின்று அப் பெருமான் என்பதறிவித் தற்கு. இச் செய்யுள் உருவக உயர்வு நவிற்சியணி. (3)

## சுப்பிரமணியஸ்துதி

பாக மொருபெண் குடியிருக்கும் பரம னணியிற் பரித்தமணி
நாக நுழைவுற் றுடல்சுருண்டு கிடந்து நகுவெண் டலைப்புழையிற்
போக மெல்லத் தலைநீட்டிப் பார்த்து வாங்கப் போகுமொரு
தோகை மயில்வா கனப்பெருமா டிணைத்தாட் கமலந் தொழுதிடுவாம்.

(கு - ரை.) அணியிற் பரித்த=ஆபரணம்போல் தரித்த. மணி நாகம்=மாணிக்கத்தையுடைய பாம்பு. நகுவெண்தலை=நகைப்பதுபோல் காட்சியளிக்கும் வெள்ளைத்தலை. போக=(வெளியே) போதற் பொருட்டு. வாங்கப்போகும்=தலையை உள்ளே இழுத்துக் கொள்ளுதல் செய்யும். (4)

## அல்லமதேவஸ்துதி

கலையை மதிக்கும் புலவர்தமைச் சித்தர் குழாத்தைக் கடவுளரை
நிலையை மதிக்கு முனிவரரைத் திசைமா முகனை நிரைவளையாச்
சிலையை மிதிக்கு நெடியோனை விழுங்கி யுமிழாத் திறன்மாயை
தலையை மிதிக்கு மல்லமன்செங் கமல மலர்த்தா டலைக்கணிவாம்.

(கு - ரை.) கலை=அறுபத்துநான்கு கலைகள். நிலை=தத்துவநிலை. ரைவளையா=வரிசைப்பட வளையலை அணிந்த அகலிகையாக; அன் மொழித் தொகை. சிலை=கல். நெடியோன்=இராமன்: நெடியோன் என்னும் அடைக் குறிப்பு, அத் துணைப்பெரியோனையும் விழுங்கி உமிழ்தல் செய்யா மாயையின் வலிமையை உணர்த்திற்று. புலவர்=வித்வ சிரேட் டரையும், சித்தர் குழாம்=ஒன்பது கோடி சித்தரையும், கடவுளர்=முப் பத்து முக்கோடி தேவரையும், முனிவரர்=நாற்பத் தெண்ணாயிரம் இருடி கணங்களையும் உணர்த்தும் குறிப்பு மொழிகள். தனுகரண புவன போகங் களாய் வியாபித்து யாவரையும் யாவற்றையும் தன்னுள் அடக்கி நின்றமை யின் 'விழுங்கி உமிழா' என்றார். மாயையின் தலையை மிதித்தலாவது, மாயையைக் கீழ்ப்படுத்தி நிற்றல். (5)

## வசவேசர்ஸ்துதி

வெள்ள வேணிப் பெருந்தகைக்கி யாஞ்செய் யடிமை மெய்யாகக்
கள்ள வேடம் புனைந்திருந்த கள்வ ரெல்லாங் களங்கமறும்
உள்ள மோடு மெய்யடியா ராக வுள்ளத் துள்ளுமருள்
வள்ள லாகும் வசவேசன் மலர்த்தா டலையால் வணங்குவாம்.

(கு - ரை.) இச் செய்யுளிற் போந்த வரலாற்றை இந் நூலில் 'வச வண்ணர் வந்த கதி'யிற் காண்க. 'யாம் செய்யடிமை மெய்யாக' என் பது கருத்துடை அடைகொளியணி. (6)

## சென்னவசவஸ்துதி

பங்க வளற்று வழிமாற்றி யொருநல் வழியைப் பகர்வார்போல்
தங்கண் மதியிற் பலபிதற்றுஞ் சமய ருரைக டமைநீக்கி
அங்க நிலையிற் றிலிங்கநிலை யிற்றென் றருளும் வீரசைவ
சிங்க நிலைத்த வருட்சென்ன வசவன் றிருத்தாள் சிரத்தணிவாம்.

(கு - ரை.) பங்க அளறு=பழுதான சேறு; இது அறியாமையை உணர்த்திற்று. நல்வழி=முத்திமார்க்கம். அங்கநிலையிற்று=தூல,சூக்கும, காரண உடல் நிலை இவை. இலிங்கநிலையிற்று=இட்ட; பிராண, பாவலிங்க மென்னும் மூவகையாக நிற்கும் நிலை இவை, (7)

## மடிவாலமாச்சையர்ஸ்துதி

வார்க்குங் குமமென் முலைபாக னடியா ரறுவை மாசடித்துத்
தீர்க்குஞ் செயல்போல் விச்சலமன் னவன்றன் சேனை செய்பிழையை
தாக்குங் கரவாள் கொடுசின்ன பின்ன மாகத் தடிந்திட்டுப் [த்
போக்குங் கருணை மடிவால மாச்சன் பொன்னங் கழல்போற்றி.

(கு - ரை.) அறுவை=ஆடை. மாசடித்துத் தீர்த்தல்=அழுக் கைக் கல்லின்மேல் அடித்துப் போக்கல். கரவாள்=கைவாள். கலி யாண புரியில் வசவேசர் மடாலயத்து அடியார்களது ஆடைகளைத்

தோய்த்துத் தரும் திருப்பணியை மேற்கொண்டிருந்த மடிவால மாச்சையர், ஒருநாள் அவ் வாடைகளைக் கொடுபோம்போது தகாதா னொருத்தன் தீட்டுப்படுத்தினனெனச் சினந்து கைவாள்கொண்டு அவனை வெட்ட, அஃதறிந்த விச்சலமன்ன னேவவந்த அவனது சேனைகளையும் அவ் வாள் கொண்டே வெட்டி அழித்த வரலாறு ஈண்டுக் கூறினர். அவர்தம் பிழையை இவ்வாறு நீக்காவிடின் அவர்கட்கு நரகு நேருமெனக் கருது தலின், 'கருணை மடிவால மாச்சையன்' என்றார். (8)

## நால்வர்ஸ்துதி

பெண்ணிற் கரசு தானுக வென்பு பெருநீற் றறைபிரச
வண்ணக் கமல மலர்ப்பொய்கை யாகச் செங்கன் மாழையாய்
நண்ணச் சிறிய நரிகண்முடங் குளைய பரியாய் நகர்புகுதப்
பண்ணற் குரிய வழுதுறழ்மூத் தமிழ்நால் வரையும் பணிகுவாம்.

(கு - ரை.) பெண்ணிற்கரசு=அங்கம் பூம்பாவை. பிரசம்=தேன். வண்ணம்=அழகு. மாழையாய்நண்ண=பொன்னுகப்பொருந்த. முடங்கு உளையபரி=மடங்கிய பிடரிமயிரையுடைய குதிரை. பண்ணற்குரிய= செய்தற்குரியவர்களான. உறழ்=போல; உவம உருபு. (9)

## அடியார்பொதுஸ்துதி

பரவை கேள்வன் றிருத்தொண்டத் தொகையு ளடியார் பத்தியெலா
உருவ மாகு நஞ்சோம நாதன் றுதியு ளுறுசரணர் [ம்
அரவ வணியா னடியார்கண் மற்றை யவர்க ளனைவருந்தாம்
விரவி நாளு மிருப்பவிடங் கொடுக்கு முள்ளம் விரிந்தன்றே.

(கு - ரை.) பரவை கேள்வன்=சுந்தரமூர்த்திகள். சரணர்=வீர சைவ சமயத்தில் ஒழுகும் அடியார். மற்றையவர்கள்=(திருத்தொண்டத் தொகை யுள்ளும், சோமநாதர் துதியுள்ளும் கூறப் பெறாத) மற்றைய அன் பர்கள். பத்தியெலாம்=குருபத்தி, லிங்கபத்தி, சங்கமபத்தியாகிய அனைத்தும். விரவி=கலந்து. (10)

## சிறப்புப்பாயிரம்

(நூல் செய்தவர் பெயரும் நுதலிய பொருளும்)

தண்ணிலவு புனைசடிலத் திறைபுகழல் லமதேவன்
சரிதத் தீம்பால்
புண்ணியரஞ் செவிவாயிற் றமிழ்ச்சங்கத் தான்முகந்து
புகட்டி னுனல்
எண்ணரிய புகழ்மலயத் திருந்தவனோர் வடிவெடுத்தா
னென்று கூறப்
பண்ணியமுத் தமிழ்க்கவிதைச் சிவப்பிரகா சப்பெரும்பேர்
படைத்து ளானே.

(கு - ரை.) தமிழ்ச்சங்கத்தால்=தமிழ்ச்செய்யுளாகிய சங்கினால். மொகந்து=மொண்டு. மலையத்திருந்தவன்=பொதிகை மலையில் வசிக்கும் அகத்தியன். விந்தம் அடக்கி, கடல் பருகி, வில்வலன் வாதாவியை அழித்து, நிலப்பரப்பைச் சமன்செய்து, தமிழ் வளர்த்ததாதிய எண்ணரியது அவர் புகழ் என்க. இச் சிறப்புப்பாயிரம் இந் நூலாசிரியரது சகோதரருள் ஒருவர் செய்தார் என்பது யூகம். (11)

## அவையடக்கம்

அடனுறு மல்லம னரிய சீரொடு
படுதலி னயந்துபா ராட்டும் பன்முறை
மடனிரு முலகமென் மொழியை வந்துவர்க்
கடலினு மூழ்குவர் கால மொன்றினே.

(கு - ரை.) படுதலின்=தோன்றலால். மடன் இரும்=அறியாமை அகற்றிய. உலகம்=உயர்ந்தோர். 'மடன் இரும் உலகம் என் மொழியைப் பன்முறையும் நயந்து பாராட்டும்' என்க. காலம்=கிரஹணமாதிய காலம். ஒன்றின்=நேரின். 'காலம் ஒன்றின் உவர்க்கடலினும் வந்து மூழ்குவர்' என இயைக்க. (12)

## படலத்தொகை

நாற்கதி தருமிடர் கடந்து நச்சுநர்
பார்க்கதி முதலிரு பத்தைந் தாங்கதி
மேற்கதி பெறவருள் விளங்கு மல்லமன்
சீர்க்கதி யிருபதோ டைந்துஞ் செப்புவாம்.

(கு - ரை.) நாற்கதி=தேவகதி, மனிதகதி, மிருககதி, நரககதி. பார்கதி=பிருதிவிதத்துவம். இருபத்தைந்தாங்கதி=இருபத்தைந்தாகிய தத்துவங்கள். மேற்கதிபெற=(ஷை தத்துவங்களுக்கு) மேலான வீடுபேற்றுக் கதிபெற. சீர்க்கதி இருபதோடைந்து என்றது, இந் நூல் துதிகதி முதல் மான்மியகதி முடிய உணர்த்திற்று. இருபத்தைந்து தத்துவங்களாவன:—பூதம் 5. ஞானேந்திரியம் 5. கன்மேந்திரியம் 5. தன்மாத்திரை 5. புருடன் 1. மான் 1. அஹங்காரம் 1. மனம் 1. மூலப்பகுதி 1. ஆக 25. (13)

## சம்பந்தம்

கன்றிய வைரிகள் காதுங் காதையும்
வன்றுயர் மதனநோய் வளர்க்கு மாற்றமும்
புன்றொழி லினர்வறும் பொழுது போக்கலும்
அன்றரு ளல்லம னமல லீலையே.

(கு - ரை.) கன்றியவயிரிகள்=சினந்த பகைவர்கள். காதும காதை=(தம்மைத்தாமே) கொன்றுகொண்ட வரலாறுகள். அமல லீலை=மாசின்றிய திருவிளையாடல். (14)

## அதிகாரிகள்

புறங்கறை யொழுகுசெம் புண்ணி லீயென
உறுங்கதை புல்லியர் கொள்வர் மாமலர்
வறுங்களி வண்டினல் லமனெண் காதையைப்
பிறந்துள பயன்பெறு பெரியர் கொள்வரே.

(கு - ரை.) புறம் ஒழுகு கறை=புறத்தால் ஒழுகும் குருதி. வறுங் கதை=பயனற்ற கதை. புல்லியர்=அற்பர். மலரின் மொய்த்த வண்டு கள்போல் பிறவியின் பயனைக் கைக்கொள்ளும் பெரியோர் அல்லமன் கதையைக் கொள்வர் என்க. (15)

## பிரயோசனம்

மயலளற் றான்றுகோன் மல்கு மன்பெனும்
இயலெழுத் தெழுதுகோ லங்க லிங்கமாம்
வியனிலத் தளவுகோன் மதிவி ளக்கினை
யயர்வறத் தூண்டுகோ லமல லீலையே.

(கு - ரை.) அமலலீலை=ஊன்றுகோல், எழுதுகோல், அளவு கோல், தூண்டுகோல் என்க. மயல் அளறு=(பொருளல்லவற்றைப் பொருளாகக்கொள்ளும்) மயக்கச்சேறு. இயல்=இலக்கணம். வியனி லம்=அகன்ற ஞாலம். மதிவிளக்கு=அறிவுத்தீபம். அயர்வு அற= அயர்ச்சி நீங்க. (16)

## விடயம்

நன்றிகொ ளடிகணுன் குறநடந் துபோ
யென்றனி நாவினின் றெழுமிச் செய்யுளான்
வென்றிகொ ளல்லமன் சீர்த்தி மென்பயன்
கன்றலி லன்பராங் கன்றை யூட்டுமால்.

(கு - ரை.) இச் செய்யுள் ஆன்=இச் செய்யுள் நூலாகிய பசுவா னது. நன்றி=நன்மை. அடிகள் நான்கு உற=நான்கு அடிகளாகிய பாதங்கள் பொருந்த. சீர்த்தி மென்பயன்=புகழாகிய சுவையுடையபாலை. கன்றல் இல்=அழிவில்லாத. அன்பராம் கன்றை=சிவபக்தர்களாகிய கன்றுகளை. ஆல்=அசை. இச் செய்யுள் உருவகவணி. (17)

## 3 - பாட்டுகளால் உற்பத்தி சொல்லப்படுகின்றது

பரசிவம் பிரம மென்னப் பட்டொரு திரிவு மின்றி
உரைமன மிறந்து நின்ற வொருசிவ லிங்கந் தன்னின்

வருமுயர் சதாசி வன்றான் மற்றவன் றனைப்பொ ருந்தும்
அருமைகொண் ஞான சத்தி யவர்களாற் சிவனு திப்பன்.

(கு - ரை.) திரிவு=விகாரப்பாடு. உரை=வாக்கு. இறந்து=கடந்து. உயர் சதாசிவன் வரும் எனவும், அவன்றனை அருமைகொள் ஞான சத்தி பொருந்தும் எனவும் இயைக்க. சிவலிங்கம் ஒன்றே பரசிவம், பிரமம் எனப்படும் என்க. தான், மற்று=அசைகள். சதாசிவன் ஞான சத்தியொடு பொருந்த சிவன் (மகேசுரன்) தோன்றும் என்க. (18)

சாற்றுமச் சிவனுக் கிச்சா சத்தியவ் விருவரானுந்
தோற்றுவ னுருத்தி ரன்றான் சொல்லிய வவற்குச் சத்தி
மாற்றருங் கிரியை யென்பர் மற்றிவ ரிருவர் பாலும்
போற்றுறு மரியு திப்பன் பொறியவன் சத்தி யாமால்.

(கு - ரை.) சாற்றும்=மேற்கூறிய. சிவனுக்கு இச்சா சத்தியே தேவியாவள் என்க; ஜீவர்களுக்கு அருளும் விழைவையே இச்சா சத்தியெனவும், படைத்தற்றொழில் வன்மையையே கிரியா சத்தி எனவுங் கூறுவர். பொறி=திருமகள். (19)

அத்திரு மாலு மாவு மளிப்பவந் துதிப்பன் வண்டு
மொய்த்திசை முரலுஞ் செங்கேழ் முளரிவா னவன வற்குச்
சத்திவெண் கமலை யன்னோர் தரவரு முலகிற் றோற்றம்
நித்தனங் குருகு கேச னினைவுமாத் திரையி னுமால்.

(கு - ரை.) மாவும்=திருமகளும். செங்கேழ் முளரி வானவன்=செந்தாமரை மலரில் உள்ள பிரமன். வெண் கமலை=வெண்டாமரையிலுள்ள கலைமகள். நித்தன்=நித்தியன்; என்று மிருப்போன். நம்+குரு+குக+ஈசன்=நம் குருவாகிய இருதய குகையிலிருக்கும் அல்லமன். இத்துணைத்தோற்றமும் அல்லமன் சங்கற்பத்தால் நிகழும் என்றபடி. (20)

## அல்லமதேவன் சிறப்பு

ஆக்குறுஞ் செயல தொன்றே யயன்றனக் காக்க லோடு
காக்குறுஞ் செயலி ரண்டுங் கண்ணனுக் காக்கல் காத்தல்
போக்குத லென்றிம் மூன்றும் புராந்தகற் களித்த வர்க்கு
நீக்கரு மிறைமை நல்கி நிறுவினன் குருகு கேசன்.

(கு - ரை.) அவர்க்கு=பிரம்ம, விஷ்ணு, உருத்திரர்களுக்கு. இறைமை=அவ்வத் தொழிற்குரிய தலைமைப்பேறு. (21)

முதலாவது

துதிகதி - முற்றிற்று.

கதி 1-க்கு திருவிருத்தம் - 22.

இரண்டாவது

# கைலாசகதி

வெள்ளிமால் வரையி னுச்சி வீற்றிருந் தருளு முக்கண்
வள்ளலா ரொடுசூ ளுற்று மதரரி நெடுங்கட் செவ்வாய்ப்
பிள்ளைவாண் மதிநு தற்றம் பிராட்டியல் லமனைக் காண்பான்
கள்ளமா யையைஞா லத்து விடுத்தவக் கதியு ரைப்பாம்.

(கு - ரை.) மால்=பெரிய. வரை=கணு; இஃது இதனையுடைய மூங்கிற்காகி, அம் மூங்கில் விளையும் மலைக்கு இருமடியாகு பெயராயிற்று. சூள் உற்று=சபதம் செய்துகொண்டு. மதர்=மதர்ப்பு; களிப்பு. அரி=இரேகைகள். (1)

## 6 - பாட்டுகள் கைலைச்சிறப்பு

இயங்குவ நிற்ப வான யாவையுங் கலைமா தோடு
முயங்குபு முன்ன மீன்ற முளரிவா னவன்வ குத்து
வியன்புவி யண்டந் தன்னுள் விதித்தனன் றகுமி டங்கள்
வயங்கெழு மசுரர் நாகர் வானவர் முதலி யோர்க்கும்.

(கு - ரை.) இயங்குவ=சரம். நிற்ப=அசரம். முயங்குபு=கூடி. முளரிவானவன்=பிரமன். வியன்புவி அண்டந்தன்னுள்=பரந்த பூமியுள்ளும் ஆகாயத்துள்ளும். வயம்கெழு=வெற்றிமிகுந்த. 'தகுமிடங்கள் வகுத்து விதித்தனன்' என்க. (2)

நான்முக வண்டந் தன்னு ணனிசிறந் தொப்பி கந்த
தூன்முக விழிக ளாற்கண் டும்பர்க ளுவகை பூப்பத்
தான்மிகு மருளான் மேனி சாத்திய பேரா னந்தக்
கூன்முக மதிய ணிந்த கொற்றவன் கைலைக் குன்றம்.

(கு - ரை.) சாத்திய=தரித்துக்கொண்டிருக்கிற. கூன் முகமதி=பிறைத்திங்கள். ஊன்முகவிழி=ஊனக்கண். நான்முக அண்டந்தன்னுள்=பிரம்மாண்டத்தில்; 'அருள்மேனிக் கொற்றவன் கைலைக்குன்றம் உம்பர் உவகைபூப்ப நான்முக அண்டத்துள் ஒப்பு இகந்தது என்க. (3)

கொள்ளைவண் டிழிந்து தாது குடைந்துழக் குழவு டைந்து
கள்ளழிந் தொழுகு செம்பொற் கடுக்கைவேய்ந் திலகு வேணி
வள்ளல்வெண் புகழ்தி ரண்ட வளங்கெழு கைலைக் குன்றில்
வெள்ளிவந் தத்தி யாச மாகவே விளைந்த தம்மா.

(கு - ரை.) கொள்ளை=கூட்டம்; சூறையுமாம். தாது=மகரந்தம். உழ=கிளர. உடைந்து=முறுக்கவிழ்ந்து. கடுக்கை=கொன்றை மலர். வேய்ந்து=சூடி. இலகு வேணி=பிரகாசிக்கும் சடை. அத்தியாசம்=ஒன்றை மற்றொன்றாக அறிதல். அம்மா=வியப்பு உணர்த்திற்று. இஃது புகழை யேற்றி வெள்ளியை ஒழித்தலின் ஒழிப்பணி. (4)

கண்பிசைக் கொருசே யின்னுங் கலுழினுந் தளைக்கொ டுப்பன்
மண்பிசைந் துண்ட மாயன் மறித்திட வலிப னல்லன்
நண்பிசைந் திறைவ னுக்கே காமிட னாவ மென்று
பண்பிசைந் தலைதி ரண்ட பரிசினின் றிடுமக் குன்றம்.

(கு - ரை.) சேய் = உபமந்யுமுனிவர். கலுழினும்=அழுதாலும். மறித்திட=தடுக்க. பண்பு இசைந்து=தன் குணத்தொடு கலந்து. இஃது, தற்குறிப்பேற்றம். உபமந்யு முனிவர் குழவிப்பருவத்துப் பசிபொறாது அழ, பிரமன் பாற்கடலை ஏவி ஊட்டிப் பசி தணித்த வரலாறு ஈண்டு குறிக்கப் பெற்றது. (5)

ஒழுகுறு மருவி யீட்ட மொலியினா னகுவெண் டிங்கள்
பழகுறு முடற்க ளங்காற் பாகசா தனன்கூர்ங் கோட்டு
மழகளி றுமிழ்ம தத்தான் மலர்மிசைக் கடவு ளூர்தி
அழகுறு நடையா லன்றி யறிதரப் படாவக் குன்றில்.

(கு - ரை.) பாகசாதனன்=இந்திரன். கூர்ங்கோடு=கூரியதந்தம். மழ=இளமை; "மழவுங்குழவு மிளமைப் பொருள" எனபது, தொல்காப்பியம். மலர்மிசைக்கடவுள்=பிரமன். ஊர்தி=அன்னவாகனம். தன்னைச் சார்ந்த எவற்றையும் தன் வண்ணமாக்கும் வெள்ளி மலையினின்று அருவியை ஒலியாலும், திங்களைக் களங்கத்தாலும், ஐராவதத்தை மத ஜலத்தாலும், அன்னத்தை நடையாலும் அன்றி அவற்றைப் பிரித்தறிய இயலா என்க. (6)

## அரசாட்சி மண்டபச்சிறப்பு

விளங்கொளி துளும்பு மந்த வெள்ளியங் கிரியி னுச்சி
துளங்கொளி விரிக்குஞ் செம்பொற் சுடர்மணிச் செய்குன் றொன்று
களங்கறு பாரரைத் துய்ய கருப்புரக் குவாலின் மீது
வளங்கெழு சுடரொன் றுற்று வயங்குதல் போலு மன்றே.

(கு - ரை.) துளும்பும்=ததும்புகின்ற. துளங்கும்=அசைகின்ற. செய்குன்று=சிகரம்; கிரீடாசைலம். பரு+அரை=பாரரை; இது, பருத்த அடிப்பாகத்தையுணர்த்திற்று. குவால்=தொகுதி. வெள்ளிமலையி னுச்சியில் பொன்னாலும் நவமணிகளாலும் இயன்ற சிகரம், கருப்பூர மலையி னுச்சியில் தீப்பற்றிய காட்சி போன்றிருந்த தென்க. (7)

இனையதிக் கைலை வெற்பி லிறையர சிருக்கை யொன்றுண்
டனையதை யணிய மாட்டா தப்புறம் போயி னானென்
றெனையிகழ் பவர்க ளில்லை யிலங்குமம் மண்ட பத்தின்
தனிவள மனந்த னாலுஞ் சாற்றிடற் கரிது மாதோ.

(கு - ரை.) இறை அரசிருக்கை=இறைவனது அரசியல் மண்டபம். அணியமாட்டாது=அலங்கரித்துக்கூறாது. அநந்தன்=ஆதிசேடன். (8)

## ஆதனத்திருத்தற்சிறப்பு

அன்ன மண்டபத் தங்கண ஞோர்பகல்
மின்னு செம்மணி வேதிகை யொன்றன்மேல்
மன்னு செங்கதிர் மண்டலத் துற்றனன்
என்ன வந்தங் கிருந்தன னென்பவே.

(கு - ரை.) அம்கணன்=அழகிய கண்களையுடைய பரமன்; கண்ணிற் கழகு கருணை. வேதிகை=மேடை. செங்கதிர் மண்டலம்=சூரிய மண்டலம். (9)

## 6 - பாட்டுகள் கடவுள்சிறப்பு

குழவி யாயுடற் கூனிந ரைத்ததோர்
விழவு வாண்மதி வேணியின் மேவுறக்
கிழவி யாகிக் கிரிக்கோன் மகப்பெறும்
அழகு நீர்மக ளாயிடை வாழ்வுற.

(கு - ரை.) 'குழவி நரைத்த வாண்மதி' 'கிழவி...மகவு' என்பன, முரண்விளைந்தழிவணி. குழவிமதி = பாலசந்திரன். கூனல்=உடல் வளைவு. நரை=வெண்மைநிறம். கிழவி=உரியவள். கங்கையும் உமையும் மலையரையன் மகளிர் என்பது புராண வரலாறு; மற்று உமைநகக் கண்வழி கங்கை பெருகினள் என்பதும் வரலாருகலின், கிரிக்கோன் புதல்வியான உமையீன்ற மகள் எனினும் ஆம். (10)

அங்கி யென்றற் கடுப்பமே ஞோக்கிய
செங்க ணொன்று திருநுதல் சேர்தரத்
திங்க ளென்றுந் தினகர னென்றும்வாழ்
அங்கண் மல்கு மருண்மடை போன்றுற.

(கு - ரை.) அங்கி=நெருப்பு. அடுப்ப=ஒக்க. நுதல்=நெற்றி. தினகரன்=சூரியன். மல்கும்=நிறைந்த. அருள்மடை=அருள்வெள்ளம் பெருகும் மதகு. நெருப்பு மேல் நோக்கலும், நீர் கீழ் நோக்கலுமான தகுதிப்படி நெற்றிக்கண்ணை மேனோக்கின எனவும், வலது இடக் கண்களைக் கீழ் நோக்கின எனவும் கூறலின், இது தகுதியணி. (11)

எண்ணு மன்ப ரிதயமென் புட்படு
கண்ணி போன்றுவார் காதிடைத் தோடுற
நண்ணு மாதுமை நன்னுதற் பொட்டென
வண்ண நீல மணிமிடற் றொன்றுற.

(கு - ரை.) இதயமென்புள்=இருதயமென்ற பறவைகள். படும்=அகப்பட்டுக்கொள்ளும். கண்ணி=வலை. தோடு=ஒருவகைக் காதணி. வண்ணநீலம்=கருநிறவிடம். மணிமிடறு=அழகிய கண்டம். ஒன்றுற=பொருந்தப்பெற. (12)

நகந்த ருங்கொடி கண்களை நாணியே
முகந்தி ரும்பு முறையிற் றிரும்புமால்
மகிழ்ந்தி டங்கதிர் வீர மழுவலந்
தகுந்த குந்தகு மென்று தயங்குற.

(கு - ரை.) நகந்தருங்கொடி=இமயமலை அளித்த பூங்கொடி போன்ற பார்வதி. முகம் திரும்பும் முறை=நாணத்தால் முகம் திரும்பிக் கவிழ்கிற படி. இறைவன் இடத் திருக்கரத்திருக்கும் மான், தேவியின் கண்களைக் கண்டு நாணி முகத்தைத் திருப்பிக்கொள்ள, அதுகண்ட வலக்கரத்துள்ள மழு, மான் திரும்பியது தகும் தகும் என்று கூறல்போல் ஒலி செய்து எரிகின்ற தென்க. (13)

சொற்றெ ரிந்த சுடர்மணி கங்கணம்
உற்றி லங்க வொருகருங் கேழலின்
பற்றி ருந்த மதாணியிற் பட்டெனப்
புற்ற ருங்கலை யுற்றரை பொற்புற.

(கு - ரை.) சொல் = வியாகரணமாதிய. தெரிந்த=கற்றறிந்த. கங்கணம்=(ஆதிசேடனாகிய) கங்கணமானது. உற்று=திருக் கரத்தில் பொருந்தி. இலங்க=பிரகாசிக்க. கருங்கேழல்=கரிய பன்றி; வராக மூர்த்தி. பல்=தந்தம். மதாணியின் திருந்த என இயைத்து, மார்பு பதக்கம்போல் பிரகாசிக்க என்க. 'புல்தருங்கலை அரை உற்றுப் பட்டெனப் பொற்பு உற' என இயைத்து, தாருகாவனத்து முனிவர்கள் விடுத்த புலி அளித்த தோலாடை இடுப்பில் பிரகாசிக்க எனக் கொள்க. புல்=புலி. ()

புரத்தை வென்ற நகைக்குமென் போதினேன்
சிரத்தை வென்றசெங் கைக்குஞ் சிலைமதன்
எரித்த கண்ணிற்கு மின்றெனக் கூற்றடூஉத்
தரித்த வீரக் கழலொடு தாளுற.

(கு - ரை.) போதினேன் = பிரமன். இன்றென=(இத்தகைய வெற்றி) இல்லையென. அடூஉ=கொன்று. உயிரையும் உடலையும் வேறாகக் கூறுபடுத்தலின் கூற்று என காலற்குப் பெயர்க் காரணம் கொள்க. உற= பொருந்த. (15)

## கடவுளிடத்து உமையிருந்தமை

இருந்த வாதி யிடத்தி லிருந்தனள்
பரந்த வானும் படியு முயிர்களும்
ஒருங்கு தோன்ற வுதவிக் கருவுறீஇ
வருந்தி லாத மணிவயிற் றன்னையே.

(கு - ரை.) பத்தாவது செய்யுளிலிருந்து வாழ்வுற, போன்றுற, தயங்குற, பொற்புற, தாளுற எனப் போந்த வினையெச்சங்கள் இச் செய்யு

னில் 'இருந்த' என்னும் வினை கொண்டு முடிந்தன; இதுவரை குளகம்: "குளகம் பலபாட் டொருவினை கொள்ளும்" என்பது விதி. ஆதி= இறைவன். இடத்தில்=இடப்பாகத்தில். வான்=விண்ணுலகு. படி=நில உலகு. அன்னை ஆதியிடத்தி லிருந்தனள் என்க. (16)

## 9 - பாட்டுகள் உமாதேவிசிறப்பு

இறைவ னங்க ணெனுமுச் சுடர்களும்
உறவு கொண்ட விருளெனு மோதிமேல்
அறவ னென்றவவ் வண்ணல் புனைந்தருள்
நறவு மிழ்ந்த நறுமலர் தாழ்ந்திட.

(கு - ரை.) முச்சுடர்=சந்திர, சூர்ய, அக்கினி. இறைவன் ஆர்வ மொடு நோக்குதலின் அப் பரமனது நட்பேற்ற கூந்தல் என்பது முன் னிரண்டடிகளின் பொருள். ஓதி=பெண்களின் தலைமயிர். அறவன் என்ற அவ் வண்ணல்=(திருவள்ளுவராதியோரால்) அறவாழி யந்தணன் எனப்பெறும் சிவபிரான். இறைவி கூந்தலில் இறைவன் மலர் சூட்டு தலைப் பின்னிரண்டடிகள் விளக்கின. நறவு=தேன். நறுமலர்=வாசனை யுள்ள மலர். (17)

ஏற்று வார்கொடி யெந்தை சடைப்பிறை
யாற்றுள் வீழ்வுற் றிறப்பதற் கெண்ணுறத்
தோற்ற மேவு சுடர்த்திரு நெற்றியின்
ஞாற்று மோர்மணிச் சுட்டி நலந்தர.

(கு - ரை.) வார் ஏற்றுக்கொடி=நெடிய இடபக்கொடி. 'சடை யாற்றுள் வீழ்வுற்று இறப்பதற்குப் பிறை எண்ணுற' என இயைக்க. ஞாற்றும்=தொங்கவிட்டிருக்கும். ஓர் மணிச்சுட்டி = ஒப்பற்ற இரத் தினச் சுட்டி. (18)

ஈச னார்முக மென்னு முளரியில்
ஆசை கூரு மளிவிழிக் காரருள்
வாச மாமலர் வாய்க்கிள வெண்ணகை
தேசு லாமணி யாகச் சிறந்துற.

(கு - ரை.) முளரி = தாமரை. அளிவிழிக்கு = வண்டுகளாகிய கண்களுக்கு. ஆர் அருள்=நிறைந்த அருள். மலர்வாய்க்கு=செவ்வல்லி மலர் போன்ற வாய்க்கு. தேசு=ஒளி. அணி=ஆபரணம். முகமுளரி= முகத்தாமரை; உருவகம். இதில் விழிக்கு அருளையும், வாய்க்குப் புன் னகையையும் அணியாக உருவகித்தமையின், உருவகவணி. (19)

மாணப் பூண்புனை மற்றை யுறுப்பெனப்
பூணுட் பட்டிடா தோலையின் பூணென

யாணர்ச் செம்பொ னிலங்கொளி யோலைமேற்
காணக் காதெனும் வள்ளை கவின்செய.

(கு - ரை.) யாணர்=அழகு. ஓலை=காதோலை; ஓலை செம்பொன் ...தலின் ஒளி வீசுகின்றன என்க. வள்ளை=காதுகளுக்கு உவமை கூற ...ம்கும் ஒரு வகை இலை. மாண=சிறப்பாக. பிற அவயவங்கள் போல ...ருச்செவிகளும் தம் பொன்னோலைகளுக்கு அழகுசெய்கின்றன என்க. ()

ஓங்கு வாவுடை யும்ப னயனரி
தாங்கு மாவி தணந்தொழி நாளினும்
வாங்கு றூவெழின் மங்கல நாணொளி
தேங்கு பூண்ர சென்னச் சிறந்திட.

(கு - ரை.) ஓங்குவா=உயர்ந்த வெள்ளையானை. உம்பன்=இந் ...ரன். தணந்து=நீங்கி. ஒழிநாளினும்=அழியவருங் காலத்தும். வாங் ...று=களையாத. தேங்கு=நிறைந்த. உம்பன் அயன் அரிகள் ஒழிந்திடும் ...ளினும் மங்கல நாண் பூணர சென்னச் சிறந்திட என்றமையின் இறைவற் ...ம் இறைவிக்கும் உள்ள நித்தியத்வம் குறிக்கப் பெற்றதென்க. (21)

அரவு லாஞ்சடை யண்ணலைப் பிள்ளை தான்
பரூவ மூன்றினிற் பாடலின் பாறரும்
பொருவில் கொங்கைப் புகழெனப் பொங்கொளி
மருவு மார மணிவடந் தாழ்ந்துற.

(கு - ரை.) பிள்ளை=திருஞானசம்பந்தர். ஆரமணிவடம்=முத்து ...மாலை. தாழ்ந்துற=தொங்கி அமைய. (22)

பறந்தி டாமணி வண்டு படுமலர்
சிறந்த நீல மலரொடு சீர்பெற
மறந்தி டாது மறைமுடி யின்பொருள்
அறைந்து பைங்கிளி முன்கை யமர்ந்திட.

(கு - ரை.) பறந்திடாமணிவண்டு = இரத்தின வளையல். படு= ...லிக்கின்ற. மறைமுடியின்பொருள்=உபநிடதப் பொருள். தாமரை ...வளையோடு ஒன்றியதுபோல இறைவியின் திருக்கரத்தில் கிளியுள ...தென்க; தாமரை கரத்தையும், கிளி நீலமலரையும் உணர்த்திற்று. (23)

தோலு டைப்பரன் றென்மனை யாட்டிதன்
பால டுத்ததெவ் வாறெனும் பட்டரை
மேலு டுத்து விளங்கவொண் மேகலை
நூலி டைக்குறு நோய்புரி யாதுற.

(கு - ரை.) தோல் உடைப்பரன்=தோலை ஆடையாக உடைய ...ரமன். அடுத்தது எவ்வாறு என்னும் பட்டு=வந்தது எவ் வழியில் எனக் ...ருதத்தக்க பட்டாடை. அரைமேல்=இடையில். மேகலை=மேகலா ...ரணம். நூலிடைக்கு=நூல்போல் துவளும் இடைக்கு. (24)

புத்த னிச்சம் படினும் பொறுமையை
எய்த்து மற்றை யிருமணத் தம்பியில்
அத்தன் வைத்த வடிக்கம லங்களின்
முத்த ரிச்செஞ் சிலம்பு முழங்குற.

(கு - ரை.) புத்தனிச்சம்=புதிய அனிச்சமலர். எய்த்தும்=அறிந்திருந்தும். அற்றை இருமணத்து=அக் காலத்து நடந்த திருமணத்து. அரி=மணிகளையுடைய. (25)

## 22 - பாட்டுகள் மகாசபை கூடுதற்சிறப்பு

இருந்த வாரரு ளெம்பெரு மாட்டிபால்
குரும்பை நாணுமென் கொங்கைப் பொறையினால்
வருந்து நூற்பக வன்ன மருங்குலார்
அரம்பை மாத ரளப்பில ரெய்தினார்.

(கு - ரை.) பதினேழாம் பாட்டிலிருந்து தாழ்ந்திட, நலந்தர, சிறந்துற, கவின்செய, சிறந்திட, தாழ்ந்துற, அமர்ந்திட, புரியாதுற, முழங்குற எனப் போந்த எச்சங்கள் இச் செய்யுளில் 'இருந்த' என்னும் பெயரெச்ச வினை கொண்டு முடிந்தன. பொறை=பாரம். பகவு=பிளவு; 'இழை யொன்றிரண்டு வகிர்செய்த நுண்ணிடை' என்றார் பிறரும். (26)

## வேறு

முல்லை யந்தொடை யருந்ததி முதலெழு முனிவர்
இல்ல றம்புரி துணைவிய ராமெழு வரும்போய்
வல்ல ரும்பெனக் குவிமுலைப் பனிமலை மகளைச்
சொல்ல ருந்துதி செய்துவாழ்த் தெடுத்தனர் தொழுது.

(கு - ரை.) தொடை=மாலை; முல்லைமாலை கற்புடையார்க்குரித்து. வல்=சூதாடு கருவி. பனிமலைமகள்=பார்வதி. (27)

அன்ன மொன்றறி யாமுடிக் கங்கையை யறிந்து
துன்ன வந்தல மருமெகி னங்களின் றொகுதி
என்ன வம்புயத் தொருசத கோடியிந் திரைகள்
முன்ன டைந்துவெண் கவரிக ளிரட்டினர் முறையால்.

(கு - ரை) துன்ன=நெருங்க. அலமரும்=சுழலும். எகினங்கள்=அன்னங்கள். தொகுதி=கூட்டம். சதகோடி=நூறுகோடி. இந்திரைகள்=திருமகளிர். கவரிகள்=சாமரைகள். இரட்டினர்=இருபுறமும் மாறி வீசினர். திருமகளிர் பலர் இரட்டும் சாமரை, பிரமனூர் அன்னம் முன் அறியாத் திருமுடியிலுள்ள கங்கையைக் கண்டு வந்து அங்கு சுழலுவ போலுள என்னுமிது, தற்குறிப்பேற்றவணி. (28)

அரவு கௌவிய கதிரெனப் பட்டசாந் தாற்றி
பரவை யல்குல்வெண் முத்தவா ணகைக்கொலை பயில்வில்

புருவ மென்மலர்க் குழற்சசி கோடிகள் புகன்று
மருவி யம்பிகை மருங்குநின் றசைத்தனர் மன்னோ.

(கு - ரை.) சாந்தாற்றி=சிற்றாலவட்டங்களது பெயர். பதுமராகத்தாற் செய்த சாந்தாற்றிகளைச் சூரியனாகவும் முத்துக்களால் சமைத்தவற்றை சந்திரனாகவும் கூறல் மரபு ஆகலின் 'கதிர்' எனப் பொதுமையால் கூறினார். பரவை=பரப்பு. சசிகோடிகள்=கோடி இந்திராணிகள். புகன்று=சென்று. சிற்றால வட்டங்களின் கைப்பிடிக் காம்பு அரவு கௌவிய கதிர்போலும் என்க. அவ் வட்டங்களைக் கண்டவர்கள் 'அரவு கௌவிய கதிர்' என மயக்கங் கூறலின் மயக்கவணி. (29)

எடுத்து வீணைக ளுளர்நரம் பிதுமிட றிதுவென்
றடுத்த கேள்வரா மபிரமரு மறிவரி தாகப்
படத்த பாம்பணி பரன்புடை மாதுசீர் பாட்டில்
தொடுத்து வாலிய கலைமடந் தையர்பலர் துதித்தார்.

(கு - ரை.) உளர் நரம்பிது=தெரிக்கும் நரம்பின் ஒலி இது. மிடறிது=கண்டத்தின் ஒலி இது. வாலிய=வெண்மையான. ஒப்புமையின் நரம்பொலி கண்டத் தொலிகளின் வேற்றுமை அறிய முடியவில்லை என்க.

செப்ப மைந்ததண் ணுமையிசை தாளமென் சிறுதாள்
துப்ப மைந்தவொண் சதிதழீஇச் சுவையபல் காயம்
உப்ப மைந்தவின் கறியென நடித்தன ருழையோ
டொப்ப மைந்தகண் ணுருத்திர கணிகைய ருவந்து.

(கு - ரை.) செப்பு=மொழி; இசைச்சொல். தண்ணுமை=மத்தளம். துப்பு=தூய்மை. சதி=நடன மிதிப்பு. உழை=மான். (31)

எந்தை பாலுமை முக்குணங் களுமுரு வெடுத்து
வந்த மாதர்க ளருகுநின் றனர்பணி மகிழூஉ
அந்த மாதருட் டமோகுண மாதுமை யருளால்
சந்த மாயையென் பெயர்கொடு தருக்கிநின் றனளே.

(கு - ரை.) முக்குணம்=சத்வ, ரஜோ, தம குணங்கள். 'பணி மகிழூஉ அருகு நின்றனர்' என்றியைக்க. சந்தம்=அழகு. என் பெயர்=என்கிற பெயர். தருக்கி=இறுமாந்து. (32)

தெள்ளு வார்திரைக் கங்கையுங் கங்கையுஞ் சிறிய
பிள்ளை யாகிய மதியமு மதியமும் பெரிது
துள்ளு மோரிள நௌவியு நௌவியுந் தொடர்பு
கொள்ளு மாறவ ணொருங்கின வுருத்திர குழாங்கள்.

(கு - ரை.) தெள்ளு=தெளிந்த. நௌவி=மான். தொடர்பு=உறவு. அவண்=அச் சபையில். (33)

சங்க மொன்றுட னொன்றுதாக் குறவொலி தழைக்குந்
துங்க நேமியு மன்னவா யுறவலை சுருட்டும்
பொங்கு வேலைவந் தெனவரிக் கணங்களற் புதத்த
எங்க ளுயகன் பேரவை யிடத்துவந் திறுத்த.

(கு - ரை.) துங்கம்=உயர்வு. நேமி=சக்கரம். அன்னவாய்உற=அப்படியே நெருக்கமாக வர. வேலை=கடல். அரிக்கணங்கள்=பல நாரணர் கூட்டங்கள். வந்திறுத்த=வந்து சேர்ந்தன. (34)

முகங்க ளொன்கினு நான்மறை விதிமுறை முழங்க
உகந்து கையிரு நான்குநான் குச்சியிற் குவியச்
சகந்த ருஞ்செயற் பிரமர்க ளளப்பிலர் தையல்
பகுந்த மேனிய னவையிடைப் புகுந்தனர் பரவி.

(கு - ரை.) விதிமுறை=விதித்தபடி. ‘உச்சியில் உகந்து குவிய’ என்றியைக்க. தரும்=படைக்கும். பகுந்த=பகிர்ந்த. (35)

அயனு மாயனு மெனினுயர்ந் தவரென்ப தன்றிக்
கயிலை நாயக னமர்திரு வோலக்கங் காண்பான்
நயன மாயிர மிலாமையி னதிகன்னா னென்று
வயிர வான்படை யிந்திர ரெண்ணிலர் வந்தார்.

(கு - ரை,) எனின்=என்னைக் காட்டிலும். என்பதன்றி=என்று சொல்லுவதல்லாமல். இலாமையின்=இல்லாமையால். (36)

உரகர் சித்தர்கள் வித்தியா தரர்சுர ருயர்கிம்
புருடர் மெய்க்கதிர் முதலிய கோடிசை புரப்போர்
இருதர் மற்றுளார் விழிபிதுங் கிடவுட னெருங்க
வரத னத்திரு வோலக்கங் காணிய வந்தார்.

(கு - ரை.) மெய்க்கதிர்=மெய்ம்மையுள்ள சூரியன். கோள்=கிரகங்கள். திசை புரப்போர்=எண்திசை பரிபாலகர்கள். வரதன்=வரங்களை வழங்கும் பரமன். (37)

அழிவு மாக்கமு முரையினுற் செயும்வலி யடைந்தார்
மொழியும் யாக்கையு மனமுநல் லறங்களின் முயன்று
கழியு மாறுமுக் காலமு முளர்தளை கழன்றூர்
பழியி லாவதிட் டாதிமா முனிவரர் பரந்தார்.

(கு - ரை.) ஆக்கமும்=வளர்ச்சியும். உரையினுல்=வாய்ச் சொல்லினாலேயே. தளை=பந்தம். (38)

குழவி பால்குடிப் பதுகடல் குடிப்பது குழவி
பழகு மாறுணன் மண்ணெடுத் துண்பது படைப்பு
முழுது மோர்தளர் நடைமகச் செயலெனு முரண்கொள்
வழுவி லாவருட் கணங்களெண் ணிகந்தன வந்த.

(கு-ரை.) ஒரு குழந்தை பால் குடிப்பது, கடலைக் குடிப்பது
பாலவும், சோறுண்பது, பூமியை யுண்பதுபோலவும், தளர் நடையின்
ளையாட்டுச் செயல், உலகப்படைப்பு செய்வதுபோலவும் உளதென்க.
றிய பூதங்களின் செயலே இங்ஙனமாயின் பெரிய பூதங்களின் செயலாற்
ல் கூறுமலே அடங்கும். முரண்=மிக்க வன்மை. வழு=பழுது.
ருள் கணம்=கருணையுள்ள பூதக் கூட்டம். (39)

செருக்கொ டுஞ்சிவ நிந்தைசெய் வாய்க்கிலை தீர்வு
விரிக்கி னென்றுமுன் சிறுவிதி தலையற வெட்டி
எரிக்கு நல்கிநிந் தனைசெயா மறிமுக மியைத்துத்
தருக்கி நின்றவவ் வீரன்வந் தொருபுடை சார்ந்தான்.

(கு-ரை.) விரிக்கின்=(வேதாகமங்களை) ஆய்ந்து நோக்கின்.
ர்வு இலை என்று=கழுவாயின்று என்று கருதி. சிறு விதி=தக்கன்.
றி=ஆடு. இயைத்து=பொருத்தி. வீரன்=வீரபத்திரன். புடை=
க்கம். (40)

காதி யாயிர மால்களைப் பிழிந்துமாங் கனிபோற்
கோது வீசினுங் கடல்கவிழ்த் தனையசெங் குருதி
பாதி யாயினு நிரம்புறாக் கபாலபா ணியனுய்
மாது பாதிய னவையிடைப் புகுந்தனன் வடுகன்.

(கு-ரை.) காதி=அழித்து. மால்கள்=நாரணர்கள். கோது=
க்கை. கவிழ்த்தனைய=கவிழ்த்தது போன்ற. கபாலபாணியன்=பிரம
பாலமேந்திய கரத்தன். வடுகன்=வைரவமூர்த்தி. ஆயிரமால்களைக்
ாதி மாங்கனிபோல் பிழிந்து கோது வீசியுங் குருதி நிரம்புறாக் கபால
ாணியனுய் வடுகன் புகுந்தனன் என்க. (41)

வீர மாதருக் கில்லையென் றுரைப்பதென் விளங்க
வீர மாதென வறிகிலி ரோவென விளம்பி
வீர யோகினி வெள்ளமோ டமர்பொர விரும்பும்
வீர காளியும புகுந்தன ளவையிடை விரைந்து.

(கு-ரை.) 'மாதருக்கு வீரம்' என மாற்றுக. வெள்ளம்=பெரிய
தார் எண்ணின் பெயர். யாவராலும் வெல்லவொண்ணு மகிடாசுரனைக்
கான்றமையின் இவ்வாறு காளி வீரங் கூறி வந்தனள் என்க. (42)

ஊன்று ஞானமோ டுயர்வயி ராகநல் லொழுக்கம்
ஊன்று காலெனக் கொண்டரன் முகத்திள முறுவல்
தோன்று மாறுநின் றுடினன் சுடரவ னிருளைப்
போன்று மாயையைத் தொலைத்திடு பிருங்கியென் புனிதன்.

(கு-ரை.) ஊன்றுதல்=உறுதியாய்த் தாங்கி நிற்றல். வைரா
ம்=வைராக்கியம் என்பதன் திரிபு. இளமுறுவல்=புன்னகை. சூரியன்
ருளை யகற்றல்போல, மாயையை அகற்றியவர் பிருங்கி முனிவர் என்க. ()

படிகொண் மாமுடிக் கங்கணத் திறைபதம் படுமொண்
முடிகள் யாவையும் படுகழ னந்தியெம் முதல்வன்
அடிக ளேந்துகை யுறவடித் தொதுக்கியவ் வவையைக்
கடிகொண் மாலையம் பிரம்பொடு திரிந்தனன் களித்து.

(கு-ரை.) படி=பூமி. கங்கணத்திறை=கங்கணம் தரித்த இறைவன். கழல்=திருவடிகளையுடைய. 'ஏந்து கை அடிகள் உற அடித்து' என இயைக்க. ஒதுக்கி=இருமருங்கினும் விலக்கி. அவை=சபை. கடி=வாசனை. இறைவனை வணங்கும் வானோர் முடிகள் நந்தியையும் வணங்கும் என்க. (44)

பெய்யு மாமழை முகிலெனப் பெரியவாய் முழவந்
துய்ய மாமதி யனையவெண் சுரிமுக சங்கம்
ஐய வாணனும் பானுகம் பப்பெய ரவனுங்
கையும் வாயுமொத் ததிர்த்தனர் செவிகரங் கவிழ்ப்ப.

(கு-ரை.) வாய்=குரல். முழவம்=ஒருவகை வாத்தியக் கருவி. சுரிமுகம்=சுழிந்த முகம். ஐ=அழகிய. ஆயிரங்கை வாணாசுரன் முழவத்தாலும், ஆயிரம் வாய் பானுகம்பன் சங்கத்தாலும் யாவரும் செவிகளைக் கைகளால் மூடிக் கொள்ளுமாறு பேரொலி யுண்டாக்கினர் என்க. (45)

துதிப்ப ரோர்சிலர் பாடுவ ரோர்சிலர் துள்ளிக்
குதிப்ப ரோர்சிலர் கைகளாற் றோளிணை கொட்டி
யதிர்ப்ப ரோர்சிலர் நெக்குநெக் குருகிநெஞ் சகமெய்
விதிர்ப்ப ரோர்சில ராயின ரவையிடை மிடைந்தோர்.

(கு-ரை.) விதிர்ப்பர் = நடுங்குவர். மிடைந்தோர்=நெருங்கி இருந்தோர். (46)

படைக்க லங்களி னொளியிமை யவரொளி பரித்த
தொடைக்க லங்களி னொளியரம் பையர்பணைத் தோளின்
இடைக்க லங்களி னொளியெலா மிருளிறை மிடற்றின்
அடைக்க லம்புக நிறைந்தன பரந்தபே ரவையில்.

(கு-ரை.) படைக்கலங்கள்=போர்க்கருவிகள். பரித்த=தாங்கிய. தொடை=மாலை. பணை=மூங்கில் போன்ற. கலங்கள்=ஆபரணங்கள். ஒளியெலாம் பரந்த பேரவையில் நிறைந்தன; இருளெல்லாம் தங்க இடமின்றி இறைவரது கண்டத்தில் அடைக்கலம் புகுந்தன என உபசரித்தார்.

## 11 - பாட்டுகள் இறைவனுக்கும் தேவிக்கும் வாக்குவாதம்.

இன்னண மவையிடை யிருந்த வெம்பிரான்
தன்னொடு வினவுமோர் தகைமை யுன்னுபு
கன்னலு மமுதமுங் கைப்ப வெம்முடை
அன்னை தன் வாய்திறந் தறைதன் மேயினள்.

(கு - ரை.) தகைமை=தகுதி. உன்னுபு=நினைத்து. கன்னல்=கருக்கரை. கைப்ப=கசக்க. (48)

தலைவநின் னவையிடைச் சார்ந்த விப்பெரு
நலனுடை யவரெலா நணுகி வெம்பவத்
தலைகில ராகியின் படைவ ரோவலால்
நிலையில ரோவிது நிகழ்த்துவா யென்றாள்.

(கு - ரை.) பவம்=பிறப்பு. அலால்=அல்லாமல். (49)

விளங்கிழை நன்றுநின் வினவென் றெந்தைமண்
அளந்தவ னயன்முத லாயி னோருமின்
புளங்கொளு நாமரு பத்தொ டொன்றுறத்
தளைந்துள கிரியையாற் சார்கிலா ரென்றான்.

(கு - ரை.) விளங்கிழை=உமையே; விளி. ஒன்றுற=பொருந்த. தளைந்துள=பக்தித்துள்ள. கிரியையால்=வினைசம்பந்தத்தால். சார்கிலார்=(பேரின்பத்தை) அடையார். (50)

## வேறு

அனையதே னும ரூபக் கிரியைக ளனைத்தும் வெல்ல
நினைவுறு சூழ்ச்சி யொன்று நீயெனக் குரைத்தி யென்னப்
பனிமலை தவஞ்செய் தீன்ற பவளவாய் மடந்தை கூற
நனையவிழ் கொன்றை வேணி நம்பன்மற் றிதனைச் சொல்வான்.

(கு - ரை) சூழ்ச்சி=உபாயம். நனையவிழ்=(தேனின் ஊற்றால்) நனைந்துமலர்ந்த. வேணி=சடை. நம்பன்=உயிர்கள் நம்பிச் சரணமடையத்தக்க சிவபிரான். (51)

போக பூமியினிற் போக தனுவினும் பொருந்த லாகா
தேகமா மின்ப சித்தி யியம்புறிற் கரும பூமி
ஆகமா னதுகொண் டன்றி யாதலான் ஞாலத் தெய்தி
யோகமா நெறியி னின்றோ ருண்மைசா தித்துக் கொள்வர்.

(கு - ரை.) ஏகம்=ஒன்றுபடுதல்; இதனை ஐக்யம் என்பர். இன்ப சித்தி=பேரின்பவாய்ப்பு. கருமபூமி=கன்மபூமிஇடத்து. ஆகம்=(மக்கள்) உடம்பு. போகபூமி=தேவலோகம். போகதநு=தேவஉடல். ஞாலம்=பூவுலகம்; இது கருமபூமி. நெறி=வழி. உண்மை=தத்துவஞானம். சாதித்துக்கொள்வர்=அடையப்பெறுவர். (52)

என்றிது கொழுநன் கூற விளங்கொடி யனைய தாயின்
ஒன்றொரு மக்கண் ஞாலத் துவமையின் ஞான சித்தி
நன்றுற வுணர்த்த வல்ல குரவன்யார் நவிறி யென்னக்
குன்றணி மதிய மொப்பக் குனித்தவன் கூற லுற்றான்.

(கு - ரை.) அனையதாயின்=அப்படியானால். ஒன்றொரு மக்கள்= ஒவ்வொரு மனிதரும். குரவன்=ஆசிரியன். நவிறி=கூறுதிர். குன்று குனித்தவன்=(மேரு)மலையை வில்லாக வளைத்த பரமன். (53)

தொல்லையி னுயர்சுஞ் ஞானி தூய்நிராங் கார னென்போர்
எல்லையி றவங்கள் செய்ய வெமதுமெய் வடிவத் தானே
அல்லம நாமமைந்த னயின் மனையான் றன்னை
வில்லுறழ் நுதலாய் காண்டன் மிகவுனக் கரிய தென்றான்.

(கு - ரை) தொல்லையில்=முன்னொருகாலத்தில். சுஞ்ஞானி= தூய அறிவன். நிராங்காரன்=மத்தகுணமில்லான். மெய்வடிவம்=சொரூபத்திருமேனி. வில்லுறழ்=வில்போலும். (54)

என்றலு மிமைய வல்லி யெனக்கரி தென்ப தென்கொல்
உன்றனி யல்ல மன்ற னுண்மையை யறிய வேண்டின்
நின்றவர் தமக்கெ லாமு மெளிதென நெகிழ்ந்து ரைப்ப
அன்றினர் புரமெ ரித்த வணிநகை யாளன் சொல்வான்.

(கு - ரை.) தனி=ஒப்பற்ற. நெகிழ்ந்து=தவறுபட்டு. அன்றினர்= பகைத்தவர். (55)

முனிவுறேல் வறிய வுன்றன் மொழியள வல்லன் மாதே
வினைதபு மன்ப ரன்பால் வேண்டிய வடிவ னாகி
யனையவர் விழியிற் றோன்றி யருளுவ னலம தேவன்
தனதியல் பியாவ ரானுஞ் சாற்றிடற் கரிய தென்றான்.

(கு - ரை.) வறிய=பயனிலாத. தபும்=ஒழிக்கும்; "உப்பகார மொன்றென மொழிப இருவயி னிலையும் பொருட்டா கும்மே" என்பது தொல்காப்பியம். (56)

மெய்ம்மையிம் மாற்ற மாகும் வேறுளார்க் கியான்செய் மாயை
பொய்ம்மலி செயலிற் றப்பிப் போமெனிற் காண்ப லென்னா
அம்மலை மகட ருக்கி யறைதலு நின்ற னாற்றல்
மைம்மலி குழலாய் காண்கு மென்றிது வள்ளல் கூறும்.

(கு - ரை.) மாற்றம்=வார்த்தை. வேறுளார்=அரி, அயன், புரந்தரன் முதலினோர். மலி=நிறைந்த. செயலில்=செயலினின்றும். என்மாயை அல்லமனிடத்துத் தோற்குமாயின் காண்பல் என்பது குறிப்பு. ஆற்றல்= வன்மை. மை=கருமை. (57)

இன்னணஞ் சூளி யம்பி யினிவறி திருத்தி யாயின்
பொன்னவிர் சுணங்கு பூத்த புணர்முலை மடவாய் தோல்வி
நின்னிடை வருமென் றண்ண னிகழ்த்தலு மிமைய வல்லி
என்னுரை தவறா தென்னா நெடுமொழி யிசைத்துப் பின்னர்.

(கு - ரை.) சூள்=சபதம். சுணங்கு=தேமல். (58)

## மாயையைப் பூமிமேல் விடுதல்

ூயிடை யருகு நின்ற தமோகுண வடிவ மாகும்
ாயையை விளித்து நீபோய் மண்ணிடை யல்ல மப்போர்
ாயகன் றனைய றிந்து நணுகுதி யென்று கூறி
யின னவள்வ ணங்கி யினையதொன் றியம்ப லுற்றாள்.

(கு - ரை.) எயினள்=எவினாள். (59)

## மாயை சூளுறவு

ுல்லம ணியல்ப றிந்தங் கணைகுவ னழுவு மாயின்
ல்லிதின் வலிந்து பற்றி யீர்க்கிவண் வருவ லென்று
சொல்லின ளொருசூள் வேலை சுவறவுண் டிடுவ லென்று
புல்லிய வெறும்பொன் றாற்றல் புகல்வது போல வன்றே

(கு - ரை.) இயல்பு=இயற்கைத்தன்மை. நழுவுமாயின்=தப்பிச் சென்றால். வல்லிதின்=வலிமையால். ஈர்த்து=இழுத்து. வேலை=கடல். வற=வற்ற. புல்லிய=அற்பமான. 'எறும்பின்மொழி' இல்பொருளுவமை.

ன்னள வறியாண் மாழ்கித் தண்மதி தவழும் வேணி
முன்னவ னவையு ணின்று மொழிந்தவச் சூண்மு டிப்பான்
ன்னக முடிப ரித்த பார்மிசைச் செலவை நெஞ்சத்
துன்னின ளெய்தி னாளவ் வொளியிழை மாயை மாதோ.

(கு - ரை) தன் அளவு=தனதெல்லையில் பட்டவலிமை. மாழ்கி=மயங்கி. பன்னகமுடிபரித்த பார்=ஆதிசேடன் தாங்கும் பூமி. செலவை=செல்லுதலை. இழை=ஆபரணம். மாது, ஓ=அசைகள். (61)

இரண்டாவது

கைலாசகதி முற்றிற்று.

கதி 2 - க்கு திருவிருத்தங்கள் - 83.

மூன்றவது

# மாயையின் உற்பத்திகதி

பூத லத்தைப் பொருந்துபு மாயையென்
றோத லுற்ற வொருபிடி நுண்ணிடை
மாத வத்தர் மனங்கள் கலங்குறச்
சாத முற்று வளர்ந்தமை சாற்றுவாம்.

(கு - ரை.) பொருந்துபு=அடைந்து. நுண்ணிடை=சிறிய இடையையுடைய மாயை; அன்மொழித்தொகை. சாதமுற்று=பிறந்து. (1)

## 4 - பாட்டுகள் நாட்டுச்சிறப்பு

களங்க வெண்மதி நெஞ்சங் கவற்றுமோர்
துளங்கு சங்குடைத் தோன்றன் மணத்தணி
வளங்கொண் மண்மகண் மார்பின்ம தாணிபோல்
விளங்கு மென்ப விளவல தேயமே.

(கு - ரை.) கவற்றும்=கவலையை விளைவிக்கும்; கவலைக்குக் காரணம் தன்பால் களங்கம் உள்ளமை. மணத்தணி=திருமண அலங்கரிப்பு. மண்மகள்=பூதேவி. மதாணி=மார் பதக்கம். பூமிக்குச் சிறந்த அழகு செய்கின்ற காரணத்தால் விளவல தேசத்தை மதாணி என்றார். (2)

வாவி யாவு மதன்பெருந் தூணிசெய்
யாவு மார னெடுக்குஞ் சிலையிடங்
காவெ லாமவன் காகள சாலைகள்
பூவை மார்மனே போர்க்கள மென்பவே.

(கு - ரை.) வாவி=குளங்கள். தூணி=அம்புக்கூடுகள். செய்=வயல்கள். கா=சோலைகள். காகளம்=சின்னம். காமனுக்கு மலர்களே அம்புகள்; கரும்புகளே விற்கள்; குயில்களே வெற்றிச் சின்னங்கள்; மாதரார்மனையே போர் செய்யும் களம்; மலர்களிருக்கும் குளங்களை அம்புக் கூடாகவும், கரும்புகளிருக்கும் கழனிகளை விற்சாலையாகவும், குயில்களிருக்கும் சோலைகளை வெற்றிச் சின்ன நிலயங்களாகவும், அரிவையர் இல்லங்களைப் போர்க்களமாகவும் கூறினமையின் இது, பிறிது நவிற்சியணி.(3)

பொறைக் கயிற்றிற் புகழையின் சொல்லெனும்
விறற்க யிற்றின் விருந்ததைக குரவர்சொன்
மறைக்க யிற்றின் பணத்தைத் திருவைநல்
அறக்க யிற்றி னசைப்பவ ரெங்குமே.

(கு - ரை.) பொறைக் கயிற்றின்=பொறுமையாகிய கயிற்றினல். விறல்=வென்றி. குரவர் சொல்=ஆசாரியர் உபதேச மொழியென்னும்.

றை=மகாமறுவாகிய. திருவை=செல்வத்தை. அசைப்பவர்=கட்டுபவர். பொறுமையில் புகழையும், இன்சொலில் விருந்தினரையும், குரவர் உபதேசத்தில் மனத்தையும், தருமத்தில் பொருளையும் கட்டுவர் என்க. (4)

வறிய னவன் வடதிசை மன்னவன்
அறிவி லாள னனந்தனு மாவனேர்
சிறிய னவன் சிலைமதன் பூம்பொழில்
வெறியு லாவும் விளவலத் தெய்தினே.

(கு - ரை.) வறியன்=தரித்திரன். மன்னவன்=குபேரன். ஏர்=அழகு. பொழில்=சோலை. வெறி=மணம். விளவல தேயத்தை எய்தினவர் தம் செல்வத்தால் குபேரன் வறியனையும், அறிவால் ஆதிசேடன் அறிவிலியாயும், அழகினால் மன்மதன் அழகிலானையும் தோன்ற அமைவர் என்றபடி. (5)

## 14 - பாட்டுகள் நகரச்சிறப்பு

இணையி லாத வினைய வளம்பல
நணுகி வாழும் விளவல நாட்டிலவ்
அணியி னப்ப ணழுக்கும் விலையிலா
மணியின் மேவும் வனவசை மாநகர்.

(கு - ரை.) இணை=ஒப்பு. நணுகி=பொருந்தி. அவ்வணியின்=(இளவல தேயமெனும் பூமிதேவியது) அப்பக்கத்தின். நாப்பண்=நடுவில். மணியின்=நாயகமணிபோல. (6)

படிக்கு ளீரப் பலாப்பழுத் தொண்புவி
வெடித்த வாயி னனந்தன் மணிவெயில்
அடுத்து வானத் தமர்மதி யைத்தொடாக்
கடுத்த வேள்குடைக் காம்பெனத் தோன்றுமால்.

(கு - ரை.) படிக்குள்=நிலத்தினுள். ஈரப்பலா=குளிர்ந்த வேர்ப்பலா. புவி=பூமி. வாயில்=வழியில். அநந்தன் மணிவெயில்=ஆதிசேடன் (உச்சியிலுள்ள) மாணிக்க ஒளி. 'வானத்து அமர் மதியை அடுத்து' என்க. தொடா=(அத்திங்களைத்) தொட்டு. கடுத்த=(விரகமுடையார்மேல்) சினந்த. வேள்=காமன். (7)

நறவ விழ்ந்த நறுமலர் தோறும்வண்
டுறவ ருந்தி யிருலுற் றொடுங்குமால்
அறவர் தங்க ளகந்தொறு மையமுண்
டுறவர் தங்குகை துன்னுதல் போலவே.

(கு - ரை.) அவிழ்ந்த=மலர்ந்த. நறவு=தேனை. உற=மிகுதியாக. இருல் உற்று=தம் தேன் கூடுகளைச் சேர்ந்து. ஒடுங்கும்=அடங்கும். அறவர்=இல்லறத்தோர். அகந்தோறும்=வீடுகள்தோறும். துன்

னுதல்=பொருந்துதல். ஐயம் ஏற்று உண்ட துறவிகள் பின் தம் குகை யில் தங்குதல்போல, தேன் குடித்த வண்டுகள் பின் தம் கூட்டில் தங்கின என்க. (8)

வாவிச் செக்கம லங்களில் வல்லிருள்
மேவித் துஞ்சி விடிகரு காலையில்
காவிற் சென்று களிவண் டினக்குயில்
கூவத் தண்மதுக் கொள்ளைகொண் டென்னுமால்.

(கு - ரை.) வல் இருள்=மிக்க இராக்காலத்தில். துஞ்சி=துயின்று. மது=தேன். (ஓர் ஊரில் பிறர்புக்கு கொள்ளை கொள்ளுங்கால் அவ் வூரார் கூவுமாறுபோல,) வண்டுகள் சோலையில் தேனுண்ணக் குயில்கள் கூவுகின்றன என்க. (9)

பெடையொ டுற்றுப் பிரிவில்பைங் கிள்ளைகள்
குடியி ருக்குங் குளிர்பொழில் வாய்மலர்ப்
பொடியு திர்க்கில வேலளி போய்வயல்
மடையு டைக்கு மதுப்பெரு வெள்ளமே.

(கு - ரை.) பெடையொடு உற்று=பெண் கிளிகளுடன் சேர்ந்து. கிள்ளைகள்=ஆண் கிளிகள். பொழில்வாய்=சோலையிடத்து. மலர்ப் பொடி=மகரந்தங்களை. அளிபோய் உதிர்க்கிலவேல்=வண்டுகள் சென்று உதிர்க்கவில்லையானால். வண்டுகள் மலர்களினின்று மகரந்தத்தை யுதிர்த்து அம்மலரினின்று பெருகிய தேனால் சேறுக்காவிடல், அத் தேன் பெருக்கெடுத்தோடி வயல்மடைகளை யுடைத்துவிடும் என்னும் இது, உயர்வு நவிற்சி. (10)

சேலு லாவித் திரியு நதிப்புனல்
மாலி யானை மறையக் கதிர்த்தலைச்
சாலி நீடித் தழைத்து விளைவயல்
காலி னோடிக் கடிது விழுமரோ.

(கு - ரை.) கதிர்த்தலைச்சாலி=உச்சியில் கதிர்களையுடைய நெற் பயிர். நீடி=ஓங்கி. காலில்=வாய்க்கால் வழியாக. (11)

வரிக்க யல்செங் கமலம் வரிவளை
யிருக்கை யான்மல ரம்பினை யேந்தலால்
விரிக்கு மஞ்சிறை மென்னடைப் புள்வயல்
செருக்கு மின்மதன் செங்கை நிகர்க்குமால்.

(கு - ரை.) வயல்கள் மீன்களையும், தாமரையையும், சங்குகளையும், மலர்களையுடைய நீரையும் கொண்டிருத்தலின், மச்ச ரேகையும், பதும ரேகையும், சங்க ரேகையும் கொண்டு மலர்களாகிய கணைகளை யேந்தும் காமன் செவ்விய கரங்களை ஒத்திருக்கின்றன என்க. புள்=பறவை. (12)

நளிர்க டற்றுயி லோனன் றன்னுருக்
கொளவ ளிப்பவர் கையிற் கொடுத்திடும்

வளைபி றக்கு மிடமென வண்புனல்
குளம னைத்துங் குடவளை மொய்க்குமால்.

(கு - ரை.) களிர்=குளிர்ந்த. தன்னுருக்கொள=தன் சாரூபத்தைப் பெற. அளிப்பவர் கையில்=(தன்னால்) கொடுக்கப்படுமவர் கையில். வளை=பாஞ்சசந்யம். குடவளை=வளைந்த சங்குகள். (13)

## வேறு

தாழ்ந்தோ ருயர்வ ரென்றுமிக வுயர்ந்தோர் தாழ்வ ரென்றுமறஞ், சூழ்ந்தோ ருரைக்கு முறைகண்டா மதில்சூழ் கிடந்த தொல்லகழி, தாழ்ந்தோ ரனந்தன் மணிமுடிமே னின்றன் றுயர்ந்து தடவரையைச், சூழ்ந்தோர் வரையி னுதிப்பவன்றாட் கீழ்சின் றது மேபோய்ச் சூழெயிலே.

(கு - ரை.) அறஞ் சூழ்ந்தோர் = நீதிநூற்களை ஆய்ந்தவர். தாழ்ந்து=கீழ்நோக்கிச் சென்று. நின்றன்று=நின்றது. தடவரை=மேருமலை. சூழ்ந்து=வலம்வந்து. ஓர் வரையின்=உதயகிரியினின்றும். உதிப்பவன்=தோன்றும் சூரியனது. தாள்கீழ்=அடிக்கீழ். அச் சூழெயில்=அந் நகரைச் சூழ்ந்த மதில். (14)

சொற்போர் புரிவர் நான்மறையா றங்க முணர்ந்ததொழுகுலத்தோர்
விற்போர் புரிவர் நெடியசிலை யிராம னனைய விறல்வேந்தர்
பொற்போர் புரிவர் பிறர்பொருளுந் தமபோற் பேணிப் புரிவணிகர்
நெற்போர் புரிவ ரந்நகரில் வேளாண் குலத்து நெறியினரே.

(கு - ரை.) தொழுகுலத்தோர்=அந்தணர். பொன் போர்=பொன் குவியல். தமபோல் பேணி=தம்முடையவைபோலக் காத்து. இந்து சொற்பொருள் பின்வரு நிலையணி என்க. (15)

உடுப்போர்க் குடுக்குந் துகில்களா லுண்போர்க் குண்ணும் பொருள்களால், தொடுப்போர்க் கெடுக்கு மலர்களா லணிவோர்க் கணியுஞ் சுடரிழையால், அடுப்போர்க் கடுக்கு மனைகளாற் குறைபாடுடைய தன்றதுதான், கொடுப்போர்க் கிரப்பா ரில்லாத குறையொன் றுளது கூறுங்கால். (16)

ஈச னளித்த வொருகோட் டியானைக் கியாங்க ளிணையாயின்
வாச வனைத்தாங் கீரிருகோட் டியானை யெம்மை மானுமெனும்
பாச வுரற்கால் யானையொடு பாண்டி லிழுக்கும் பகடுயரின்
தேசி னிரதப் பரிசிறந்த வென்னும் பரிக டெருவகலா.

(கு - ரை.) யானைக்கு=விநாயகருக்கு. யாங்கள்=(இரு கொம்புடைய) யாங்கள். வாசவனை=இந்திரனை. ஈரிரு கோட்டியானை=ஐராவதம்; நான்கு தந்தங்களையுடைய வெள்ளையானை. ஒக்கும் எனும்=ஒக்குமெனச் செருக்கிநிற்கும். பாச உரற்கால்=இரும்புச் சங்கிலிகள் பூட்

டிய உரல்போன்ற கால்களையுடைய. பாண்டில்=வண்டி. பகடு=எருமைக்கடாக்கள். உயரில்=உயர்வு பெறுமானல். இரதப் பரி=தேர் இழுக்கும் குதிரைகள். (17)

மறையுங் கலைகள் பற்பலவு முழங்கு மொலியு மங்கலஞ்செய்
பறையுங் குழலும் யாழுமியம் பொலியுங் கரியும் பரிமாவும்
நிறையுந் தெருவி லோடுமண்ணித் தேரி ஜொலியு நிறைகடலின்
அறையுந் திரையிற் சென்றுவிசும் பமரர் செவியி னடைந்திடுமால்.

(கு - ரை.) அறையும்=(கரையில்) மோதுகின்ற. திரையில் சென்று=அலைகள்போல் ஒன்றேடொன்று தொடர்ந்து போய். ஆல்= அசை. (18)

வேயை நகுமென் சுடர்த்தொடிய தோண்மா துமையை விடைகொண்டு
பேயு மகன்று வரற்கரிய கைலை மலையைப் பிரிந்தெய்தித்
தூய மனமுங் கலங்கவருந் தவர்வேள் குவவுத் தோள்வீங்க
மாயை பிறந்த வனவசைமா நகரின் வளத்தை யார்சொல்வார்.

(கு - ரை.) வேயை=மூங்கிலை. நகும்=பழிக்கும். தொடிய= பொன் வளையலை யணிந்த. எய்தி=(இப் பூமியை) அடைந்து. 'அருந் தவர் தூய மனமுங் கலங்க' என்றியைக்க. குவவு=குவிந்த. வீங்க= (மகிழ்ச்சியால்) பூரிக்க. (19)

## 3 - பாட்டுகள் அங்நகரரசன் சிறப்பு

இம்மா நகரிற் கரசாகி யிருந்து வாழ்வோன்
அம்மால் புணருஞ் செயன்மா தரையா கம்வைத்தல்
சும்மா புகழன்றென விந்தையைத் தோளில் வைத்தோன்
கைம்மாறு வேண்டா மழைபோன் மமகார னென்பான்.

(கு - ரை.) அம் மால்=அந்த நாரணன். மாதரை=திருமகளை. ஆகம்=மார்பில். சும்மா=வீண். விந்தையை=வீர லட்சுமியை. கைம் மாறு=எதிர் உதவி. மழை=மேகம். (20)

திறைதா னளக்குந் திறல்வேந்தர்க் கரிய சீரான்
குறைதா னிரக்கு மவர்க்கோடிக் குறுக நிற்பான்
நிறைதான வெற்பு மணிநாகமு நின்று தாங்கும்
பொறைதா னெடுக்கு மிகுமாற்றல் பொருந்து தோளான்.

(கு - ரை.) திறை=பகுதி. தானமதவெற்பும்=மதமுடைய மலையொத்த எண்திசை யானைகளும். பொறை=(பூமி) பாரத்தை. (21)

இரப்பார் வரினே ரடிஞால மெளிய தன்றிக்
கரப்பார் கரக்கும் பொருளன் றெனவீகை கற்றே
உரைப்பா ருரைக்கு முரையாவும் புகழில் வைத்தோன்
தரைப்பா லுவமை யிலையாகத் தருக்கி வாழ்வோன்.

(கு - ரை.) ஓர்அடிஞாலம்=(திருமாலின்) ஓரடியில் அடங்கிய உலகம். எளியது=(கொடுத்தற்கு) எளியது. கரப்பார்=மறைத்து வைக்கும் உலோபிகள். (22)

## 2 - பாட்டுகள் அவன் மனைவி சிறப்பு

அன்னான் மனைவி வணர்வார்குழ லையவேற்கண்
மின்னார் மருங்கு றளர்ந்தொல்கி மெலிய விம்மிப்
பொன்னார் சுணங்குவிரி பூண்முலைப் பூங்கொம் பன்னாள்
இன்னா ரமுதமொழி மோகினி யென் னும் பேரான்.

(கு - ரை.) வணர் = வணங்கிய. வார்குழல்=நீண்ட கூந்தல். ஒல்கி=துவண்டு. (23)

ஒன்றான நம்பன் மருங்காயிழை யுய்த்த மாயை
குன்றாத வாற்றன் முனிவோருளங் குன்று மாறு
பொன்றாத பொற்பிங் கிவள்பூங்கருப் போந்து பெற்றாள்
என்றா லிவளுக் கிணையாவினி யாரைச் சொல்வாம்.

(கு - ரை.) ஆயிழை = உமாதேவி. பொன்றாத=அழிவில்லாத. இவள்பூங்கரு=பொலிவுடைய இவள் கர்ப்பத்தில். போந்து=வந்து. (24)

## அவ்விருவரும் மகவுக்காக நோற்றமை

இம்மம காரனு மோகினி யென்னும்
மைம்மலி மென்குழல் வாள்விழி மாதும்
அம்மக வின்மையி னாரஞ ரெய்தி
மெய்ம்மெலி நோன்பு விளைத்தன ரன்றே.

(கு - ரை.) அஞர்=துன்பம். மெய்ம்மெலி=உடல் நலிதற்கேதுவான; மெய்ம்மலி என்னும் பாடத்திற்கு உண்மை நிறைந்த என்க. விளைத்தனர்=அநுட்டித்தனர். தனதல்லாததைத் தனதாகக் கோடலை மமகாரனெனவும், விருப்பமற்றதை விருப்பமாகக் கோடலை மோகினி எனவும் ஆண் பெண் பெயர் கொடுத்தார் வரலாறு அமைக்கக் கருதி யென்க. (25)

## அவள்கருவில் மாயையுற்றமை

முன்னிய நோன்புசெய் மோகினி மாதின்
தன்னுத ரத்துமை தண்ணரு ளாலே
மன்னியன் மாரன் வலப்புய மாடக்
கன்னிகை மாயை கருப்ப மடைந்தாள்.

(கு - ரை.) முன்னிய=(பயன்) கருதிய. உதரத்து=வயிற்றில். உமை அருளாலென்க. மன்னியல்=நிலைபெற்ற இயல்புடைய அல்லது அரசியல்புடைய. ஆட=துடிக்க. மாயை மோகினி கர்ப்பத்தில் சேர்ந்தா

னென்க. பொருளல்லவற்றைப் பொருளாகக்கோடும் மயக்கமே மாயை எனப்படும். (26)

## கருப்பகாலக்குறி

முத்தணி கொங்கை முகங்கள் கறுத்தன
மெய்த்திரு மேனி விளர்த்தது நரம்பு
பைத்தன மீது பரப்ப விருந்தாள்
பொய்த்துயில் கொண்டு புளிக்கு முவந்தாள்.

(கு-ரை.) முத்து=முத்தாலாகிய மாலையை யுணர்த்திற்று. மெய்த்திருமேனி=உடலின் செம்மையை உணர்த்திற்று. நரம்பு பைத்தனமீது பரப்ப=பசுமையான நரம்பு உடல் மேல் பரவ. (27)

## கருவுயிர்த்தமை

இன்னண மையிரு திங்க ளிருந்து
பின்னரு மோகினி பெண்மக வின்றாள்
தன்னிகர் கின்ற சலஞ்சல மொன்றிங்
கின்னொளி முத்தினை யீன்றதை யொத்தே.

(கு-ரை.) 'பின் அரும் மோகினி' என்க. சலஞ்சலம்=சங்கின் சாதிப் பெயர். மமகாரமும் மோகமும் அதிகரித்த காலத்தெழுவது மாயை என்க. (28)

## பிறந்துழிவிழா வெடுத்தமை

சங்கொடு தண்ணுமை சச்சரி தாளம்
வங்கியம் வெந்துடி வார்முர சங்கள்
மங்கல மங்கை மகப்பெறு நாளில்
அங்கசன் வெம்முர சென்ன வதிர்ந்த.

(கு-ரை.) தண்ணுமை=மத்தளம். சச்சரி=பிரமதாளம். வங்கியம்=ஊதுகொம்பு. துடி=உடுக்கை. வார்முரசங்கள்=வார்கட்டிய முரசங்கள். மங்கை=மோகினி. அங்கசன்=காமன். (29)

## இதுவுமது

தூண்டொளி போன்மக டோன்ற வுவப்புற்
றாண்டகை மன்னவ னந்தணர் கொள்ளப்
பூண்டுகின் மாமணி பொன்னில மற்றும்
வேண்டின யாவும் வெறுப்ப வளித்தான்.

(கு-ரை.) தூண்டொளி=தூண்டப்பட்ட விளக்கு. பூண்துகில் என்க. நிலம்=பூமி. (30)

### அப்போது மன்மதன் செயல்

இங்கொரு மாயை யென்னு மெழின்முளை தோன்ற லோடும்
பொங்குறு முவகை நெஞ்சம் பொறுக்கல ளாகி யெய்யும்
வெங்கணை மழையுந் தூவு மென்மலர் மழையு மொன்று
எங்கணு மதன வேளின் றிடையறச் சொரிந்தா னம்மா.

(கு - ரை.) உவகை=மகிழ்ச்சி. இடையற=இடைவிடாது. (31)

### அப்போது தவஞ்செய்வோர்க்கு நேரிட்ட இடையூறு

கண்ணக னிலத்த கங்கைக் கரையிலு முழையி டத்தும்
புண்ணிய வனத்து மெய்திப் பற்றுமாய் மரமா யுற்றுந்
தண்ணிய புனலிற் றீயிற் சார்ந்துமூண் டுயிறு றந்து
பண்ணிய தவத்தோர் நெஞ்சும் பதைத்தன மயலின் மூழ்கி.

(கு - ரை.) கண்ணகல்=இடமகன்ற. முழை=மலைக்குகை. புண்ணிய வனம்=(நைமிசம் முதலிய) புநிதமான காடு. (32)

### அவர் அதற்குக் காரணமாராய்ந்திருந்தமை

ஐம்பெரும் பூத மெல்லா மடுக்கழிங் கொழியும் போதுங்
கம்பமி னமது நெஞ்சங் கலங்கிய தென்னை கொல்லோ
வம்புறு செயலிஃ தீங்கு வந்தவா றெவ்வா றென்னுச்
செய்பொரு ளுணர்ந்த சீர்சால் செய்தவ ரிருந்த காலை.

(கு - ரை.) அடுக்கு=நிற்கும் நிலை. அழியும்போதும்=முடியுங் காலத்தும். கம்பம்=நடுக்கம். வம்பு=புதுமை; 'வம்பே புதுமை' என்பது தொல்காப்பியம். செய்தவர்=தவம் செய் முனிவரர். (33)

### அப்போது தூர்வாசர் வந்தமை

தளர்ந்துழி யுதவுங் கல்வி தானெனத் துருவா சப்பேர்
கொளுந்தனி முனிவர் கோமான் குறுகலு முனிவ ரெல்லாம்
உளங்கனி வரநின் றேத்தி யுயர்தவி சிடையி ருத்தி
வளங்கெழு மலர்க டூவி வந்தனை செய்து சொல்வார்.

(கு - ரை.) தனி=ஒப்பற்ற. உளங்கனிவர=மனம் மகிழ்வுற. (34)

### முனிவர்கள் வினா

என்றுமெம் முள்ள மெல்லா மெழுதிய விளக்குப் போல
நின்றிடு மின்றென் கொல்லோ நிலைதடு மாறு நின்ற
தென்றன்மு னிருந்த செய்ய சிறுசுடர் போல வைய
நன்றிதை யுணரு மாறு நவின்றருள் செய்தி யென்றார்.

(கு - ரை.) எழுதிய விளக்கு=சித்திரத் தீபம். சிறு சுடர்=சிறிய விளக்கு. 'தென்றல் முன் இருந்த செய்ய சிறு சுடர்போல இன்று என்

கொல் லிலதுமொருகின்ற' என்க. மென்மையாக வீசி நீபத்தை யிணக்காமல் அலைதல் மாத்திரஞ் செய்வது கருதி தென்றல் கூறப்பட்டது. நன்று=நன்றாக. 'கொல்லோ' என்றது=வினா; "கொல்லே ஐயம் அசைநிலை" என்பதுவிதி. (35)

## அதற்கு அவருத்தரம்

சங்கரி யொருகு லாற்றன் றமோகுண வடிவ மாயை
மங்கையை விடுப்ப வன்னாள் வனவரை நகரிற் பின்னைத்
திங்களி னுதித்தா ளின்று செய்தவக் கிழமை பூண்டர்
உங்கணொஞ் சதனு லாற்ற லுடைச்சதென் றவனுரைத்தான்.

(கு-ரை.) வடிவமாயை=உருவமாகிய மாயை. தவக்கிழமை=தவ உரிமை. (36)

## அதனை அங்கீகரித்தமை

அருந்தவ முனிநீ கூறிற் றுண்மையே யன்றி யெங்கள்
பெருந்தவ முயனு நெஞ்சம் பிறழ்தரற் கேது வில்லை
இருந்துளம் வருந்தி யார்த்த வெம்மிடை யைய மெல்லாம்
பரிந்தன வருளா னீயெம் பால்வரு கையினு லென்று.

(கு-ரை.) 'நீ எம்பால் வருகையினால் பரிந்தன' என்க. பரிதல்=நீங்குதல். (37)

## அதனை விரித்துரையென்றமை

முனிவரர் துருவா சப்பேர் முனிவர்கோன் றினைவ முத்திப்
பனிமலை வல்லி யேவப் பட்டெழின் மாயை யென்னும்
வனிதையிவ் வுலகில் வந்த வாறுநீ விரித்தி யாங்கள்
இனிதுணர் வுறுமா றோது கென்றனு மவனு ரைப்பான். (38)

## அவ்வாறுரைத்தமை

கயிலையோ லக்கத் தற்ற கண்ணுத லல்ல மன்ற
லியல்பினை யறிக நேற்று பெண்ணுமை புடனு ரைப்ப
மயிலிய லறிவ லென்று மாயவளை விளக்கைக் காண்பான்
பயிலிரு வினைவி டுத்த பரிசென விடுத்தா ளன்றே.

(கு-ரை.) ஓலக்கம்=சிறப்புடையார் கூட்டம். மயிலியல்=மயிலின் சாயலுடைய பார்வதி. பயில்=நெருங்கிய. பரிசு=தன்மை. (39)

## அவ்விடையூறு நீக்குமாறு கூறினமை

காரண மிதுவே யெங்கோன் கைலையை விடுத்து மாயை
தாரணி தனில்வ ரற்குத் தக்கவம் மாயை யென்னும்
மாரண விடங்க லந்த மயக்கமல் லமனென் றிட்ட
பேரணி சனுழன் றன்னை நீக்கிடிற் பெயரு மன்றே.

(கு - ரை.) மாரணவிடம்=மரணஞ் செய்யும் நஞ்சு. பேரணி= ...பரைத்தாங்கிய. கலுழன்=கருடன்; கருட மந்திரத்தால் விடம் நீங்கு ...ல் வெளிப்படை. (40)

## இதுவுமது

பிணிதப வேண்டில் வாழ்நாள் பெரிதுற வேண்டிற் செல்வம்
அணிதர வேண்டிற் கல்வி யறிதர வேண்டில் வானம்
பணிதர வேண்டின் முத்திப் பயன்பெற வேண்டி லென்றும்
இணையறு மல்ல மப்பே ரெந்தையை நினைப்ப ரென்று.

(கு - ரை.) தப = அழிய. அணிதர=நெருங்க. வானம்=இட ...ாகு பெயராய்த் தேவரை யுணர்த்திற்று. (41)

புகன்றவ ருளத்திற் றுன்பம் போக்குபு தாருவா சன்றான்
அகன்றுதன் னிடத்தை டைந்தா னன்றுகொட் டருந்த வத்தோ
மகிழ்ந்தரு ளல்ல மன்றன் மலரடி மனத்திற் றாங்கி [ர்
உகந்தவன் புகழாய் வந்த வாறெலா முரைக்க லுற்றார். (42)

## அது நீங்கினமை

நெஞ்செனு மகலி லன்பா நெய்நிறைத் துள்ள மென்னும்
பஞ்சுறு திரியி னுச்சி பற்றிட வல்ல மப்பேர்
அஞ்சுட ரிலக வேற்றி யருந்தவர் மாயை யென்னுந்
துஞ்சிரு ளகன்றி ருந்தார் தொல்லைமா தவங்கள் செய்து.

(கு - ரை.) பஞ்சுறுதிரியின்=பஞ்சாலாயதிரியின். சுடர்=விளக்கு. துஞ்சுஇருள்=அழிவைத்தரும் இருள். (43)

மந்தர கிரிப்போர் பெற்ற மத்தெறி கடல்போ லையர்
சிந்தனை கலங்கி மெல்லத் தெளிந்தமை தெரிந்து ரைத்தாம்
வந்துமண் பிறந்த வன்றே மாதவர் மனங்க லக்கும்
வெந்திறன் மமகா ரன்றன் மகடிறம் விளம்ப லுற்றாம்.

(கு ரை.) மத்துஎறி=மத்தினால் கலக்குண்ட. ஐயர்=முனிவர்கள். மண்வந்து=நில உலகில் வந்து. வெந்திறல்=கொடிய ஆற்றல். (44)

## தந்தை நாமகரண முதலிய செய்தமை

காந்தம் வலியு மிரும்புபோற் கண்க டன்னோ டுறப்பிணித்து
நேர்ந்த மனமோ ரணுவென்ன னியாய மனமென் றம்மனத்திற்
போந்த வாசைப் பெருங்கடலைப் புகட்டு மகளைக் கண்டுவந்து
வேந்தன் மாயை யெனுநாமம் விளம்பிச் சிறப்புப் பலசெய்தான்.

(கு - ரை.) வலியும்=இழுக்கும். கண்கள் தன்னோடு=இதில்'தன்' சாரியை. நேர்ந்த மனம்=இயைந்த மனத்தை. அணு எனல்=(நியாய நூலார்) பரமாணு வடிவம் எனல். நியாயம் அன்று எனக் கருதி எனக.

## 4 - பாட்டுகள் மோகினி மகளை வளர்த்தமை

மாயைப் பெயர்கொண் மகளைநறு மஞ்சடிமிர்ந்து கணைக்காலின்
ஏயக் கிடத்தி நீராட்டி யிணைக்க ணுந்தி நீரூதி
நேயத் துகிலின் மெய்துடைத்து நெகிழ்மென் முலையோ டுறத்தழுவி
வாயிற் றிவலை கொடுதேய்த்து மண்பொட் டணிந்து நீறிட்டு.

(கு - ரை.) திமிர்ந்து=பூசி. ஏய=பொருந்த. இணைக்கண் உந்தி= இரு கண்களிலும் (மஞ்சட்பொடி நீர் முதலிய படாமல்) ஒதுக்கி. நீர் ஊதி=உச்சி நீரை ஊதி. நேயம்=விருப்பம். நெகிழ்வு=குழைவு. திவலை=எச்சில் துளி. (46)

கண்ணிற் கமைய மையெழுதிக் காற்குச் சதங்கை பொற்றண்டை, நண்ணப் புனைந்து பொன்னரைஞா ணடுவிற் பூட்டிப் புலியுகிர்சேர், வண்ணப் பசும்பொ னணிமார்பில் வனைந்து சிறுமென் றொடிசேர்த்திப், பெண்ணிற் கரசி திருநுதற்பொற் பிறைமேற் சுட்டி யொன்றணிந்து.

(கு - ரை.) அமைய=பொருந்த. நண்ண=சேர. உகிர்=நகம். வண்ணம்=அழகு. வனைந்து=தரித்து. தொடி=வளையல். அரசி=அரசியாகிய அம் மாயையின். (47)

போக்கும் பொருளாற் கண்மிச்சில் போக்கி யன்பான் முலையூட்டித்
தூக்கும் பவளக் காற்பசும்பொற் றொட்டின் மலியக் கிடத்தியே
பார்க்குஞ் சுவைவா னமுதமே பார்வேந் தணியே யென்றுயரந்
தீர்க்குங் கரும்பே கண்மணியே திருவே யென்று சீராட்டி

(கு - ரை.) போக்கும்=கழிவு செய்யும். கண் மிச்சில்=திருஷ்டி தோஷம். தூக்கும்=உயர்ந்த. கிடத்தி=படுக்க வைத்து. (48)

மிடிய ஞெருசெய் யாளனச்செய் விளையக் காக்குஞ் செயல்போலப்
படியில் கல்வி விரும்பினோன் பாடம் போற்று மதுபோல
ஒடிவில் செங்கோன் மனுவேந்த னுலகம் புரக்கு முறைபோலக்
கொடிய நோன்பு செய்தீன்ற கொடியை வளர்த்தாண் மோகினியே.

(கு - ரை.) செய்யாளன்=வயலை யுடையவன். ஒடிவில்=கெடுதலில்லாத. புரக்கும்=காக்கும். கொடிய= (உடலை) வருத்துதற்கேதுவான. கொடியை=பூங்கொடி போன்ற மாயையை. (49)

## 4 - பாட்டுகள் மாயை வளர்தற்சிறப்பு

கள்ள மாயை தன்னெழில்போற் கண்ட தில்லை யென்னமிக
உள்ளம் வியந்து தலையசைப்ப தொப்ப வசையுஞ் சுடர்பார்த்து
மெள்ள விரலொன் றனைச்சுவைத்து மிளிர்பூஞ் சதங்கைத் தாளுதைத்து
விள்ளு மலர்வாய் குவித்தழுது மீள நகைத்துங் கிடக்குமால். [த்து

(கு - ரை.) மிளிர்=பிரகாசிக்கும். கள்ளம்=வஞ்சகமுடைய. அசை ரம் சுடர்=அசைகின்ற விளக்கை. விள்ளும்=விரிந்த. ஆல்=அசை. விளக்கை நோக்கல் குழந்தைகளுக்கு இயல்பு. (50)

மாயை கவிழ முகங்கவிழ்ந்த மதன னிருந்தா னவளிருப்பப்
போய சிலையொன் றெடுத்தெழுந்தான் பொன்னு லியன்ற பாவையெ
மேய வனங்க வேணடந்தான் வேந்தன் ப்யந்த மகணடப்பத் [ழ
தூய தவஞ்செய் தைந்தவித்த துறவி ஞோர்பா லோடினன்.

(கு - ரை.) முகங் கவிழ்ந்த=(நாணத்தால்) தலை கவிழ்ந்த. இருந் தான்=உட்கார்ந்தான். போய=(முன் நாணத்தால்) கை விட்டுப் போன. பாவை=பதுமை போன்ற மாயை. அநங்கவேள்=காமன். ஐந்து=(தீய வழிச் செல்லும்) பொறி ஐந்து. அவித்த=அடக்கிய. கவிழ் தல், இருத்தல், நிற்றல், நடத்தலாதிய பருவ வேற்றுமை கூறப்பட்டது. ()

குழலும் யாழு மினியவெனக் கூறு வண்ண மென்கனிவாய்
மழலை மொழிந்து முடற்கின்ப மருவ வோடி மேல்விழுந்தும்
விழையு மமிழ்தின் மிகவினிமை விளைய நுகருஞ் சுவையடிசில்
செழிய சிறுகை யாலளைந்துஞ் செய்தாண் மோக மீன்றோரை.

(கு - ரை.) கனி=கொவ்வைக் கனிபோன்ற. விழையும்=விரும் பும். அடிசில்=சோறு. செழிய=செழுமை மிக்க. அளைந்தும்=பிசைந் தும். மோகம் செய்தாள்=ஆசை விளைவித்தாள். மழலைமொழி பேசல், ஓடித் தாய் தந்தையர்மேல் விழல், செய்யுடை அடிசில் இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும் உண்ணலாதிய பருவம் கூறப்பட்டது. (52)

பரவு பெருஞ்சீ ரல்லமனைப் பற்ற வந்த மதியாற்றன்
உருவ நிழலைப் பற்றநினைந் தோடி யோடிக் கலுழ்ந்திடுவாள்
பொருவின் மதிய மேன்முனிந்து பொங்கு மழலை வீசாமல்
மருவி யுறவு கொள்வாள்போல் வாவா வென்ன வழைத்திடுவாள்.

(கு - ரை.) பரவும்=(உலகனைத்தும்) போற்றும். பற்ற=பிடிக்க. மதியால்=(பேதைமை) அறிவால். கலுழ்ந்திடுவாள்=(தன்னிழல் தனக்ககப்படாமையால்) அழுவாள். மேல்=பிற்காலத்தில். வீசாமல்= வீசாதிருக்கும்படி. நிலாவழைக்கும் பருவமிது. (53)

## அவள் பெதும்பைப்பருவ மடைந்தமை

மாதிப் பரிசு தந்தைதாய் மகிழவளர்வுற் றரசிருந்த
நீதிக் கிழவ னிறப்பவவ னெறிசே ரிளஞ்சே யவன்றவிசின்
மீதுற் றதுபோன் முன்முளைத்த வெண்பல் விழவே றெயிறுதிப்பப்
பேதைப் பருவங் கடந்துமேற் பெதும்பைப் பருவ நண்ணினாள்.

(கு - ரை.) இப்பரிசு=இத்தன்மையாக. நீதிக் கிழவன்=மன்னன். அவன் நெறி சேர்=அவன் வழியில் தோன்றிய. இளம் சேய்=இளம்

புதல்வன். தவிசின்=சிங்காதனத்தில். எயிறு=பல். தந்தை இறக்க மைந்தன் சிங்காதன மேறல்போல், முன் முளைத்த பற்கள் விழ அவ்விடத்தே பின் முளைத்த பற்கள் காட்சி தரும் பருவமுற்றனள் என்க. இது ஒப்பணி. பேதை எழு வயதும், பெதும்பை பன்னிரண்டு வயது வரைக்குமாம். (54)

## அப் பருவச்சிறப்பு

செய்ய வல்ல கம்மியன்செய் சிங்கஞ் சுமந்த மணியணைமேல்
பைய வந்து மணிமௌலிப் பார்வேந் திருக்கும் பரிசுபோல்
வெய்ய குதம்பை வளர்த்தகல விழுநீர் வள்ளைக் காதினிடைத் [ள்.
துய்ய பசும்பொன் மணிகுயின்ற துணைத்தோ டமைபத் தோன்றினா

(கு-ரை.) கம்மியன்=சிற்பி. குதம்பை=தக்கை. விழுநீர்=சிறந்த நீர்மையுடைய. வள்ளைக் காதினிடை=வள்ளை இலை போன்ற செவியில். மணி குயின்ற=மணி பதித்துச் செய்த. துணைத்தோடு=இரண்டு காதணிகள். இது செவியணி காட்சி. (55)

## 3 - பாட்டுகள் அப் பருவத்தின் வளர்ச்சி

மட்டுக் கணைவே ளரணாக வளர்த்த குழற்கா டலர்விரவிக்
கட்டுற் றதுநம் பரன்களத்திற் கடுவும் விழிகள் சிறிதுற்ற
முட்டித் துறவாம் பறவைமயன் முடியிற் படுதன் மெல்லமறைந்
தெட்டிப் பார்ப்ப வெனமுகங்கொண் டெழுந்த மார்பி லிளமுலைகள்.

(கு-ரை.) மட்டுக்கணை=தேனையுடைய மலரம்புகள்; மட்டு=வாசனையுமாம். அரண்=காப்புத் தலமான கோட்டை. குழல் காடு=கூந்தல் காடு; காடு=மிகுதி மேற்று. மலை, காடு, மதிள், அகழி என்பவற்றில் காட்டரண்மட்டும் குறித்தார். அலர் விரவி=பழியொடு கலந்து; மலரொடு கலந்து. கட்டுற்றது=காவல் உற்றது; கட்டுப்பட்டது. நம் பரன்=நமது இறைவன். களத்தில் கடுவும்=கண்டத்தில் உள்ள விடத்தின் குணத்தையும். சிறிது உற்ற=சிறிது பொருந்தின. துறவாம் பறவை=துறந்தோராகிய பறவைகள். மயல் முடியில் படுதல்=மயக்கமாகிய வலையில் அகப்படுதல். கூந்தல் பெருக்கும், கண்கள் மலர்வும், குயங்கள் வளர்வும் இதில் காண்க. இது சிலேடை. (56)

அன்ன நடையு மன்னமிலா வையர் நடையுந் தளர்வெய்தக்
கன்னி நடக்கு நடைகற்றாள் கரும்பு கசக்கு மொழிபெற்றாள்
மன்னு மலர்வீழ் சுரும்பனைய மைந்தர் பார்வைக் குறிப்புணர்ந்தாள்
தன்னை யரிய ளெனவறிந்து தானே மனத்திற் றருக்குற்றாள்.

(கு-ரை.) முதல் அன்னம்=பறவையையும், அடுத்த அன்னம்=உணவையும் உணர்த்தின. ஐயர் நடையும்=முனிவர்கள் ஒழுக்கமும். சுரும்பு=வண்டு. செருக்கு=(பிறமகளிர் தன்னில் தாழ்ந்தார் என்னும்) தருக்கு. (57)

இந்தக் கன்னி மதிமுழுநோக் கெய்திச் செவ்வாய் வலியடைந்து
சந்தச் சிங்கந் தனையடுத்த தக்க வரவின் வலிசார்ந்து
முந்தைக் கொடிமீ னத்தலைவன் முனிவ ராகும் பகைவெல்லக்
கந்தப் பகழி பலவேழக் கருப்புச் சிலையிற் றொடுத்தனனால்.

(கு - ரை.) சிங்கம்=சிங்கம் போன்ற இடையையும். அரவு=பாம்பின் படம்போன்ற அல்குலையும் உணர்த்திற்று. 'முந்தை மீனக் கொடி' என ஒட்டுக. முந்தை=முதன்மை. தலைவன்=மன்மதன். கந்தப்பகழி பல=மணத்தையுடைய மலர்க்கணைகள் பலவற்றை. வேழக் கரும்பு=இரு பெயர் ஒட்டு; கரும்பு=கருப்பு என வலித்தது. கன்னியா ராசியிலிருக்கும் சந்திரனது முழுப் பார்வையும், செவ்வாயாகிய அங்காரக பலமும், சிங்கத்தில் இருக்கும் இராகு வலியும் ஆகிய கோசார பலமும் நோக்கிப் போர்க்குப் புறப்படும் மன்னர் செய்தியை மன்மதன் மேலேற் றிச் சிலேடித்தார். இஃது சிலேடை யணி. எய்தி, அடைந்து, சார்ந்து, தொடுத்தனன் என முடிக்க. (58)

## மங்கைப்பருவ மடைந்தமை

பாக மாகப் பொங்கியெழும் பதமே போலப் பொங்குமெழின்
மோக மாயை தன்பருவ முன்னி முடிவேந் தயனுமால்
ஆகு மாட மொன்றுபுரிந் ததன்கட் கல்வி பற்பலவும்
போகு மாதர் பலர்சூழப் போற்றி யிருப்பச் செய்தனனால்.

(கு - ரை.) பாகம்=பக்குவம். பதம்=சோறு. எழில்=அழகு; வளர்ச்சியுமாம். வேந்து=மமகாரன். மாடம்=கன்னியா மாடம். போகும்=தேர்ந்த. போற்றி=காவல்செய்து. (59)

## 5 - பாட்டுகள் அவள் பொழுதுபோக்கு

வாய்த்துள வம்மணி மாட நண்ணுபு
பாத்தொடை பற்பல பயின்றுந் தந்திரி
நாத்தனி யாழைமா ணுக்க னென்றுதான்
பேர்த்துளர் விரல்களாற் பேசு வித்துமே.

(கு - ரை.) பாத்தொடை=பாமாலைகளை. பயின்றும்=(பாடிப்) பழகியும். தந்திரிநா=நரம்பாகிய நாவையுடைய. பேர்த்து உளர்=அசையும்படி வருடும். (60)

அங்கொரு மடவர லதிர்ப்பத் தண்ணுமை
மங்கையர் சிலரிசை மரபிற் பாடுறக்
கொங்கவிழ் மலரளி குமுறத் தென்றலால்
பைங்கொடி யசைதல்போற் பாடி யாடியும்.

(கு - ரை.) 'தண்ணுமை அதிர்ப்ப' என்க. மரபில்=முறைமைப் படி. கொங்கு அவிழ் மலர் அளி=மணம் வீசும் மலர்களிலுள்ள வண்டுகள். குமுற=ஒலிக்க. (61)

வருமுலை யிறைக்கிணை யாக வந்துறக்
கரமெனு மேவலன் புடைக்குங் காட்சிபோல்
விரைமல ரோதிமேன் மிஞிறி ரைந்தெழப்
பருமணி குயின்றமென் பந்த டித்துமே.

(கு - ரை.) வருமுலை. இறைக்கு=வளரும் முலையாகிய மன்னனுக்கு. இணை=ஒப்பு. கரம் எனும் ஏவலன்=கையாகிய சேவகன். புடைக்கும்=அடிக்கும். மிஞிறு=வண்டு. இது உருவகத்தை அங்கமாகக் கொண்ட தற்குறிப்பேற்ற வணி. (62)

பூந்தொடை வார்குழல் புனைந்து நல்விரைச்
சாந்தமு நானமுந் தயங்கப் பூசியும்
ஏந்திழை பலவுறுப் பிசையத் தாங்கியும்
மாந்துறு சுவைபல வகைய மாந்தியும்.

(கு - ரை.) விரை=மணம். நானமும்=கஸ்தூரியும். தயங்க=விளங்கும்படி. 'பல உறுப்பு இசைய ஏந்திழை தாங்கியும்' என இயைக்க. ஏந்திழை=சிறந்த ஆபரணங்கள். மாந்துறு=குடிப்பதற்குத் தகுதியான. சுவை=சுவையுள்ள பானங்களை யுணர்த்திற்று. (63)

தீங்கனி பாலொடு செம்பொற் பஞ்சரம்
தாங்குறு பைங்கிளி யூட்டித் தன்மொழி
ஆங்கது பயில்வுற வளித்துங் கற்பகப்
பூங்கொடி யனையவள் பொழுது போக்குநாள்.

(கு - ரை.) பஞ்சரம்=கூடு. தாங்குறு=கையில் ஏந்திய. ஆங்கு=அசை. அளித்தும்=கற்பித்தும். (64)

## 8 - பாட்டுகள் மணத்தலைவனைத் தேர்தல்

தென்னவன் செம்பியன் சேரன் கொங்கண
மன்னவன் மாளுவன் மகத நாட்டிறை
என்னுமிங் கிவர்தமுள் யாவர் கண்ணதோ
கன்னிதன் மணவினைக் கடனென் றுன்னியே.

(கு - ரை.) செம்பியன்=சோழன். இங்கு=இவ்வுலகத்து. (65)

ஆய்ந்திருந் தனன்மம கார னயிடைப்
போந்தன னவன்குரு வாகப் போற்றுறும்
சாந்தவாங் காரனுந் தகுதிப் பேரினோன்
வேந்தனு மெதிர்கொளீஇ விதியிற் றாழ்ந்தனன்.

(கு - ரை.) ஆங்காரன் = அகங்காரன். தாழ்ந்தனன் = வணங்கினான். மமகாரம் அகங்கார நெறியினிற்றலின், ஆங்காரத்தை ஈண்டு குருவாக உபசரித்தார். (66)

மன்னவன் வந்தன மரபிற் கொண்டவன்
கன்னித னெழினலங் காணப் போயினன்
அன்னவ ளெதிர்நடந் தாரி யன்றனைச்
சென்னியின் வணங்குபு சிறப்புச் செய்தனள்.

(கு - ரை.) மரபில் கொண்டு = முறைப்படி ஏற்றுக்கொண்டு. கன்னி = மாயை. எழில் = வளர்ச்சி. நடந்து = வந்து. சிறப்பு = வழிபாடு. ()

மாந்தளி ராலிலை வயங்கு கோங்கரும்
பேந்தெழின் மரைமல ரெய்தி யற்புதப்
பூந்துணர் வல்லிநேர் பொன்னைக் கண்டவன்
ஓர்ந்தனன் காரண மாதென் றுன்னியே.

(கு - ரை.) மரை = தாமரை; முதற்குறை. பூந்துணர்வல்லி நேர் = பூங்கொத்தையுடைய கொடியைப்போன்ற. காரண மாது = காரணம் பற்றி அவதரித்த நங்கை. உன்னி ஓர்ந்தனன் = நினைத்து அறிந்தான். மாந்தளிர், வல்லி முதலியன ஆகு பெயர்; உபமேயத்தைக் குறித்தன. ()

மாதுரு வுறுகுறி மதித்த றிந்தவன்
ஆதர வொடுமுடி யரசை நோக்கிநின்
கோதையை யார்கொலோ தோளிற் கொள்பவர்
ஓதுக வென்றனு முரைத்தன் மேயினன்.

(கு - ரை.) மாது உரு உறு குறி = மாயையின் வடிவ இலக்கணக் குறியை. தோளிற்கொள்பவர் = மணப்பவர்; கோதை என்றதற் கேற்பத் தோளிற்கொள்பவர் என்றார். (69)

உணர்ந்தில னடியனே னொருநங் கோதைதன்
மணந்தனக் குரியவர் மனிதர் வானவர்
கணங்களு ளொருவரைக் கருத்திற் றேர்ந்துநீ
இணங்குற வெனக்கிவ ணியம்பு கென்றனன். (70)

கொங்கவிழ் தொடையினாய் கூன்கொக் கன்றுவான்
கங்கையை யடைவது கடவு ளன்னமே
மங்கையை யணைபவர் மனித ரல்லர்நம்
சங்கர னேயிவ டலைவ னென்றனன். (71)

மாலுநான் முகனுநா டரிய வள்ளலிவ்
ஏலவார் குழலினாட் கெளிய னேயென
ஆலமார் மிடற்றினே னன்பர் வேண்டிய
கோலமாய் நணுகுமீ துண்மைக் கூற்றென்றான்.

(கு - ரை.) ஏலம் = வாசனைச்சாந்து. மிடறு = கழுத்து. கோலமாய் = உருவத் திருமேனியாய். (72)

## அவளுக்கு உபதேசஞ் செய்தமை

இன்னண மரசனே டியம்பி மாயையாம்
கன்னியை விளித்தவள் கருத்தி ணங்குறச்
செந்நிலை தனையுப தேசித் தேகினான்
தன்னிகர் குருப்ரன் றனதி டத்தரோ.

(கு - ரை.) செந்நிலைதனை=செம்மைசேர் பதநிலையை. (73)

குருவருண் மொழிநெறி கொண்டு மாயைதான்
வரவன வசைநகர் மதுகை நாதனைப்
பரவின ளருச்சனை பயின்று பூசனைக்
கருவிகண் முழுவதுங் கடைப்பி டித்தரோ.

(கு - ரை.) நெறிகொண்டு = வழியைக் கடைப்பிடித்து. வர= மேலான. மதுகைநாதன=மதுகேசுரன். கடைப்பிடித்து=முற்றும் சேர்த்து. பரவினள்=வழிபாடு செய்தனள். (74)

மூன்றாவது

மாயையின் உற்பத்திகதி முற்றிற்று.

கதி 3-க்கு திருவிருத்தம் - 157.

நான்காவது

# மாயை பூசைக்கதி

பதியை மேவுறுங் காதலனெஞ் சகத்தினுட் பதித்து
மதுரை நாதனை வரன்முறை வரிவிழி மாயை
உதய காலையிற் பூசைசெய் நாள்களு ளொருநாள்
விதியை யோதுவன் குவிமனத் தவர்கொள விரித்து.

(கு - ரை) வரன்முறை=வேதாகம நெறியின்படி. விதியை= பூசை செய்த நியதியை. (1)

விதுவைச் சேய்மையிற் கண்டலர் குவளைகண் மெலிய
முகிர்விற் பூணிள முலையெழின் மாயைதன் முகமா
மதியைச் சேர்தரு வரிக்கருங் குவளைகண் மலரக்
குதிரைத் தேரவ னெழுந்தனன் குணதிசைக் குன்றில்.

(கு - ரை.) விதுவை=திங்களை. சேய்மையில்=தூரத்தில். முதிர் வில்பூண்=மிக்க ஒளியமைந்த ஆபரணங்கள். குணதிசைக் குன்று=கீழ் திசையிலுள்ள உதயகிரி. (2)

அனைய காலையி லன்னமென் றூவிபெய் யணைமேல்
தனியண் மாமயில் போற்றுயின் றவடியி றணந்து
வினையி னான்மலி மஞ்சனச் சாலையுண் மேவி
இனிய வாசநீ ராடினள் சேடிய ரேந்த.

(கு - ரை.) அன்னமென் தூவிபெய் அணை=அன்னத்தின் மெல்லிய இறகுகள் பரப்பிய படுக்கை. தணந்து=நீங்கி. வினையினால் மலி= சித்திர வேலைப்பாடுகளால் நிறைந்த. மஞ்சனச்சாலை=நீராடும் நிலயம். (3)

விலைவ ரம்பறி யாமணிக் கோவைசூழ் விளிம்பு
கலைய ணிந்தொரு தலைமுலை மேலலங் கரித்தாள்
முலையொ டுந்துகில் கண்டநாண் முதற்றொடர்ந் தன்றோ
இலகு றுங்கலை வல்லவர் கடபடா மென்றல்.

(கு - ரை.) வரம்பு=அளவு. கோவை=வரிசை. கடம்=கும்பம்; இது தனத்தை யுணர்த்தும். படாம்=படிந்த ஆடை எனவும், கடத்தில் படமும் படத்தில் கடமும் என்னும் அந்யோந்யா பாவம் எனவும் பொருள் படுமாறு காண்க. கலைவல்லவர் கலையை முலைமேல் கண்ட நாள்தொடங்கி யன்றோ கடபடாமென்று சொல்லி வழங்கலாயினர் என்றபடி. (4)

மணிய மைந்தபொற் பாதுகை யொருத்திமுன் வைப்பப்
பிணிய விழ்ந்தசெங் தாமரைப் பதங்கொடு பெயர்ந்தே
அணிய ணிந்திடு மண்டபத் தணைமிசை யமர்ந்தாள்
பணிய ணிந்திடு மங்கைய ரடைந்தனர் பலரே.

(கு - ரை.) பிணி அவிழ்ந்த=கட்டவிழ்ந்த; மலர்ந்த. பெயர்ந்து= நடந்து. அணிஅணிந்திடு மண்டபத்து=ஆபரணந் தரிக்கும் அலங்கார மண்டபத்தில். (5)

மார வேள்சிலை வளைந்திடப் பூட்டிய வண்டு
நாரி யோர்தலை நெகிழ்த்துவிட் டெனவொரு நாரி
கார வாமலர்க் குழற்சடை கைபுனைந் தியற்றி
வீர வேனெடுங் கண்ணிதன் முதுகுற விடுத்தாள்.

(கு - ரை.) வண்டுநாரி = வண்டாகிய நாணியின். ஓர்தலை=ஒரு முனையை. நெகிழ்த்து விட்டென=கழற்றி விட்டதுபோல. ஒரு நாரி= ஒரு பணிப் பெண். கார் அவாம்=மேகம் விரும்பும். சடைகைபுனைந் தியற்றி=பின்னி அலங்கரித்திட்டு. (6)

பின்னும் வேணிவார் குழலெனுங் கரியபே ராவம்
முன்ன மார்தரு சுடர்களை யுமிழ்ந்திடு முறைபோல்
கன்னி வாணுதன் மிசைக்கதிர் பிறையொடு கவினப்
பொன்ன வாஞ்சுணங் கவிர்முலை யொருத்திகை புனைந்தாள்.

(கு - ரை.) பின்னும் வேணி = பின்னலிட்ட சடை. கரியபே ராவம்=பெரிய கரும் பாம்பு. ஆர்தரு=விழுங்கிய. சுடர்களை=சூரிய சந் திரர்களை. வாள்நுதல் மிசை=ஒளி பொருந்திய மேல் நெற்றியில். கதிர் பிறையொடு கவின=சூரியப் பிரபை சந்திரப் பிரபை என்னும் அணிகள் ஒத்து விளங்க; 'ஒடு' உடனிகழ்ச்சி யுருபு; அசை நிலை என்பாருமுளர். (7)

ஓதி யாகிய வறன்மிசைச் சுவடுற வூர்ந்து
தீதி லாதவொண் சந்தனத் திலகவெண் மதிக்குப்
போது மோர்சிறு பாம்பென மயிர்வகிர்ப் பொருந்தச்
சோதி மாமணிச் சுட்டியொன் றுருத்தித்தூக் கினளால்.

(கு - ரை.) அறல்=கருமணல். சுவடு=அடையாளம். தீது=களங் கம். மதிக்கு=சந்திரனுக்கு. வகிர்=பகிர்ந்தவடுவில். தூக்கினள்=தொங்க விட்டனள். (8)

வேன லம்பதி கொலைவிட மூட்டிய வெவ்வேல்
மான வஞ்சன மெழுதிய விழிபொர வாலால்
தான தன்பகை தனைத்துணை கொண்டுறுந் தகைபோல்
பான லஞ்செவி மிசையணிந் தனளொரு பாவை.

(கு - ரை.) வேனல் அம்பதி=வேனிற் காலத்து அழகிய தலைவ னாகிய மன்மதன். மான=போல. பொர=(தன்னொடு) போர் செய. அதன் பகைதனைத் தான்துணை கொண்டு உறும்=அக் கண்களின் பகை யான குவளை மலரைத்தான் படைத் துணைக்குச்சேர்த்து வைத்திருக்கும். தகைபோல்=தகைமைபோல். பானல்=குவளை மலர். (9)

அடுத்து மாதவ மழிமினென் றனங்கவே டமக்கு
விடுத்த வோலையைக் கண்கடம் மேற்பழி விளம்பில்
கொடுத்த வெண்பிசை நிந்தைகூ றுதற்குவைத் திருத்தல்
கடுத்து வாழ்தர வொருத்திபொன் னோலைகா தணிந்தாள்.

(கு-ரை.) அடுத்து = துறவிகளை நெருங்கி. அனங்கவேள் = ாமன். விடுத்த=அனுப்பிய. கடுத்து=போல. (10)

தன்னை நிந்தைசெய் வெண்ணகை மேற்பழி சார
மன்னி யங்கது நிகரற வாழ்மனை வாய்தன
முன்னி றந்திடு வேனென ஞான்றுகொண் டுறைமை
என்ன வெண்மணி மூக்கணி யொருத்திநின் றிட்டாள்.

(கு-ரை.) வெண்ணகை=வெண்மையான பற்கள். அங்கது=அப் பற்களானவை. மனைவாய்தன்முன்=பற்களின் வீடாகிய வாயின் முன் னிடத்தே. ஞான்றுகொள் = தூக்கிட்டுக் கொள்ளும். வெண்மணி= வெள்ளை முத்து. மூக்கணி=புல்லாக்கு. (11)

கற்றை யங்குழ னறுமலர்த் தொடையொடு கனமாய்
உற்ற ணங்குமென் றிலகுபூண் பிடித்ததை யொப்ப
விற்ற யங்குவா ணுதலெழின் மாயைதன் மிடற்றில்
பொற்ற டந்தகட் டணியொரு மடவரல் புனைந்தாள்.

(கு-ரை.) கற்றை=அடர்த்தியான. கனமாய்=சுமையாகி. அணங் கும்=வருத்தும். வில்தயங்கும்=வில்போல் வளைந்து விளங்கும். தகட் டணி=தகட்டு வடிவமான அட்டிக்கை யெனும் ஆபரணம். (12)

கன்னி யத்தம்வந் தினமணிக் கற்கட கத்தின்
மன்னி யுற்றதற் புதமென வளைபல காக்க
வின்னு தற்கருங் கண்மட மாதுகை விளங்கப்
பொன்னி னற்கட கம்புனைந் தனளொரு பூவை.

(கு-ரை.) கன்னியான மாயையின் கைகள் ஒரு ஜாதியான மணிக் கற்களையுடைய கடகத்தினுள்ளே வந்து நிலைபெற்றிருக்கிறது எனவும்; கன்னியாராசியிலுள்ள அத்த நட்சத்திரம் தொகுதியான முத்துக் கூட் டம் போன்ற கற்கடக இராசியில் வந்து நிலைபெற்றிருக்கிறது எனவும் முன் னிரண்டடிகளில் சிலேடை காண்க. (13)

ஆயு மின்சுவை தரச்செலுங் கையுட னடுத்து
வாயி னொண்கவின் காணிய மருவுறு மாபோல்
மாயை தன்கையிற் பொற்கட கத்தின்முன் வனைந்தாள்
தூய செம்பவ ளங்களைக் கோத்தொரு தோகை.

(கு-ரை.) அடுத்து=கூடி. பவளங்களை வனைந்தாள் என முடிக்க.

மங்க லத்தொழி லாடவர் மனநடக் கிற்காக்
குங்கு மப்பெருஞ் சேற்றினைக் குறித்திடு கற்போல்

மங்கை யர்க்கொரு திலகமா கியவெழின் மாயை
கொங்கை யிற்புனைந் தனளொரு பெண்மணிக் கோவை.

(கு - ரை.) நடக்கிற்கா=நடத்தல் காரணமாக. ஆடவர் மனம் குங்குமச் சேற்றில் வழுக்காதபடி அதன் மேலிட்ட கற்களைப்போல், தனங்களின் மேல் மாணிக்கக் கோவை புனைந்தனள் என்க. (15)

பாயும் வெண்டிரைக் கருங்கட னிலச்சுவைப் பாம்பின்
ஆயி ரம்படங் களுந்திறை யிட்டன வனைய
மீயி லங்கொளி விரிமணி மேகலை வேய்ந்தாள்
மாயை மங்கைத னல்குலி னொருதிரு மடந்தை.

(கு - ரை.) திறை=கப்பம். மீ=மேலாக. (16)

கறைய டிக்களி யானையின் வரவினைக் கண்டு
மறுகி னுற்றவ ரிரிதர மணிமருங் கிடல்போல்
உறுத வத்தின ரறிந்தன ரோடவொண் ணுதற்கு
நறும லர்ப்பதத் தணிந்தனள் சிலம்பொரு நங்கை.

(கு - ரை.) கறையடி=உரல்போன்ற கால்கள். மறுகின்=வீதியில். இரிதர=சிதைந்து ஓட. மருங்கு = இருபுறத்தும். இடல்=கட்டுதல். பதத்து=பாதங்களில். (17)

கூடை மென்மலர் மணத்தினு லறிந்ததைக் குறுகப்
பாடும் வண்டினஞ் சூழ்தல்போ லிளைஞர்கண் பரப்பத்
தேட ரும்பொரு ளனையவட் குறுநறுந் தேய்வை
பீடு றுங்குவி முலைக்கணிந் தனளொரு பேதை.

(கு - ரை.) கண்பரப்ப=தன் மேல் கண் வைக்க. தேய்வை=சந்தனக் குழம்பை. (18)

நின்றன் விம்பமே நினக்கெதி ரன்றிவே றில்லை
என்று கண்கொளத் தெளிந்தபே ராடியொன் றெடுத்தாள்
குன்றெ னுங்குவி முலையவ ளெதிர்கொடுங் குழைமேல்
சென்று சென்றுபா யரிமதர் மழைக்கணோர் தெரிவை.

(கு - ரை.) விம்பமே=வடிவமே. எதிர்=சமம். ஆடி=கண்ணாடி. கொடும்=வளைந்த. மதர்=கொழுமையான. மழை=குளிர்ந்த. (19)

வீர வேள்வளை யாதசெங் கரும்பவன் வில்லின்
நாரி மேலிடா மலர்மறு விலாநகை மதியம்
காரு றாதமின் கடற்பிற வாதவின் னமுதம்
வேரி லாதபூங் கொடியென விளங்கினண் மாயை.

(கு - ரை.) மறு=களங்கம். (20)

மாத ரிவ்வகை யணியலு மதுகைநா யகன்றன்
பாத தாமரை யருச்சனைப் பொருள்கள்பற் பலவு

நீதி யாலமைந் தனனினி நிகரிலெம் பிராட்டிப்
போது வாயென வொருமட மாதெதிர் புகன்றாள். (21)

மயிலெ ழுந்தென வெழுந்தனள் கோமகள் வாழ்த்திக்
குயிலெ ழுந்தென வெழுந்தன மடந்தையர் குழாங்கள்
துயிலெ ழுந்தென வெழுந்தன நூபுரத் துழனி
வெயிலெ ழுந்தென வெழுந்தன மணியணி விளக்கம்.

(கு - ரை.) கோமகள்=மாயையை. துழனி=ஒலி. மணியணி விளக்கம்=மணிகள் பதித்த ஆபரண ஒளிகள். (22)

பொன்னி லங்கிய சிவிகைமுன் கொணர்ந்தனர் பொறுப்போர்
மன்னி யங்கதை யேறினண் மதர்விழி மாயை
சின்னம் வெண்பணி லம்பணே தண்ணுமை திமிலை
முன்னி ரைந்தன மதியெழக் கடன்முழங் குதல்போல்.

(கு - ரை.) பொறுப்போர்=தாங்குபவர். பணிலம்=தவளச் சங்கம். பணே=பேரி. திமிலை=பம்பை. இரைந்தன=ஒலித்தன. (23)

ஆன்றி ரட்டுறுங் கண்ணன்வாய்க் குழலிஃ தணிபூண்
மான்றி ரட்டுறு மெனக்குழ லூதினர் மலர்வில்
கோன்றி ரட்டிய வமுதனே யாண்முனங் குறுகி
மூன்றி ரட்டிய முகமுடை முருகனு முருக. (24)

வயங்கு மாயையங் கரும்பினிற் ருழ்ந்தவர் மாவின்
உயர்ந்த மாதரா ரூற்றிருந் தொழுகுகண் மலரை
நயந்து சூழ்தரு மளியினண் ணினர்பிறர் காலால்
இயங்கு மாதிரு புடையினு மிடையற வீண்டி.

(கு - ரை.) மாவின்=திருமகளேக் காட்டிலும். கள்=தேனேயுடைய. அளியின்=வண்டுகள்போல். பிறர்காலால்=சிவிகை சுமப்போரால். இயங்கும்=செல்லும். 'ஈண்டி நண்ணினர்' என்க. (25)

வேள ளித்தனன் றன்குடை யெனக்குடை விதிர்க்கும்
வாளெ னப்பிறழ் மதர்நெடுங் கண்ணிபான் மருவக்
காள மொத்தகண் மடந்தையர் பலரிளங் கமுகின்
பாளே யொத்தவெண் கவரிவீ சினரிரு பாலும்.

(கு - ரை.) மாயையின் குடையினே வேள் எடுத்த குடையெனக் கண்டோர் கூற என்க. விதிர்க்கும்=அசைக்கும். காளம்=விஷம். (26)

காம வெந்தழன் மூட்டல்போற் கடிமலர்ச் சிவிறி
தாம சைந்தன பொய்க்கணே சொரிந்துவிற் றடக்கைக்
கோம கன்றிருந் திழையுள மறிதல்போற் குறுகிப்
பூம டந்தையை வென்றவர் பூமழை பொழிந்தார்.

(கு - ரை.) சிவிறி=விசிறி. கோமகன்=மதன். வென்றவர்=வென்றதாதியர். (27)

பாகு வெள்ளிலை சந்தனங் குங்குமம் பளிதம்
ஓகை மான்மதம் வண்டிமிர் நறுமல ரொலியல்
பேர்கெ ழும்பணிப் பெட்டிமென் றுகிலுடைப் பேழை
தோகை மார்பலர் மருங்கினிற் சுமந்துபோ யினரால்.

(கு - ரை.) பாகு=பாக்கு. வெள்ளிலை=வெற்றிலை. பளிதம்=பச்சை கற்பூரம். ஓகை=உவகை. மான்மதம்=கஸ்தூரி. ஒலியல்=மாலை. பணிப் பெட்டி=ஆபரணப் பெட்டி. துகிலுடைப்பேழை=வஸ்திரப் பெட்டி. (28)

கொங்கை யங்குவி முகிழ்விழிக் கயலிதழ்க் குமுத
மங்கை யம்புய முந்தியஞ் சுழியிவை யடுத்துப்
பொங்கு றுங்கவி னீர்பெரு காற்றினைப் புரையும்
மங்க லந்திகழ் வுறுமணி மாளிகை மறுகு.

(கு - ரை.) அரிவையரது கொங்கைகளாம் அரும்பும், கண்களாம் கயலும், வாயாம் குமுதமும், கைகளாம் கமலமும், உந்தியாம் நீர்ச்சுழிகளும் நிறைந்த ஆறுபோலுளது மாயை செல்லும் வீதி என்க. (29)

திங்கள் வாணுதன் மடந்தையர் செஞ்சிலம் பொலியும்
சங்கி னோடணி கலன்களின் சிற்றொலி தாமும்
கொங்கு லாமலர்த் தொடையளி யிசைகளுங் குழுமிப்
பொங்கு மாழியிற் பஃறுளி பெருகுதல் போன்று.

(கு - ரை.) பல துளி பெரு வெள்ளமாதல் போல, இசையெலாங் கூடிக் கடல் போல் ஒலிக்கும் என்க. (30)

துன்று பெண்படை சூழ்வர மாயையந் தோகை
வென்றி யங்கனன் மழுவினோன் விழியினால் வேளைக்
கொன்ற தென்னெனக் கேட்பமென் றுளவலி கொண்டு
சென்று றுஞ்செய லென்னவத் தெருவிடைச் சென்றாள்.

(கு - ரை.) உளவலி=மனவுறதி. சென்றுறும்=செல்லும். (31)

## வேறு

அரிமதர் மழைக்கணல் லரிவை தன்புடை
வருமட வரலியர் வனப்புக் காண்டலும்
எரிபுரை விழியரி யேறு போல்பவர்
கரிநுகர் வெள்ளிலங் கனியை யொத்தனர்.

(கு - ரை.) புரை=ஒத்த. அரியேறு போல்பவர்=ஆண் சிங்கம் போன்ற காளையர்கள். யானையுண்ட விளங்கனியானார்கள் என்க. (32)

இடையொரு சற்றுவா ணுதல்சற் றேழையர்
படைவிழி சற்றுவாய்ப் பவளஞ் சற்றிணைக்
குடமொரு சற்றிவண் கொள்ளை கொள்ளநம்
புடைபெய ரறிவெலாம் போயிற்றே யென்பார்.

(கு ரை.) ஏழையர்=இப் பெண்களது. படை=வாள்போன்ற. இணைக்குடம்=இரண்டு குடம்போன்ற தனங்கள். நம்புடை பெயர்=நம் மிடம் வளரும். (33)

இனத்தியல் பாமறி வென்ப துண்மையே
மனத்துயர் செயுமயன் மாற்று நீறுதான்
அனிச்சமெல் லடியினர் நுதல டுத்தலும்
டனித்துடல் வெதும்புமால் படுத்தலா லென்பார்.

(கு - ரை.) நீறு=விபூதி. அனிச்சம்=அனிச்ச மலர்போன்ற. மால் படுத்தலால் உடல் பனித்து வெதும்பும்=காம மயக்கை விளைவித்த லால் எம் உடம்பு வெயர்த்து வேகின்றன. (34)

தொல்லைநஞ் சடர்துயர் சொல்லக் காத்தவன்
வல்லிபங் குடையருண் மதுகை நாயகன்
செல்லுமங் கையர்விழி நஞ்சு செய்வதும்
சொல்லுது மவனொடு தொழுதுநா மென்பார்.

(கு - ரை.) செல்லும்=மாயையொடு செல்கின்ற. விழி நஞ்சு செய்வதும்=கண்களாகிய விஷம் செய்யும் வேதனையையும். (35)

இக்குழு மகளிருள் யார்வ னப்பினல்
மிக்கவ ளெனத்தமை வினவி னேரெதிர்
முக்கனி களுட்சுவை முதிர்ச்சி பெற்றுள
தெக்கனி யதனைநீ ரியம்புவீ ரென்பார். (36)

கரும்பினு மினியசெங் கயற்க ணரிளம்
குரும்பையும் பயன்படாக் கோவை தன்னையும்
விரும்பின முலகர்முன் வீணி னெஞ்சகம்
வருந்துத னகைதரு மடமையே யென்பார்.

(கு - ரை.) குரும்பை=தனங்களையும், கோவை=அதரத்தையும் உணர்த்திற்று. (37)

விடங்குலா மதர்விழி விரைத்தண் பூங்குழல்
நுடங்குநூ லிடைப்பிறை நுதற்பொற் கொம்பனர்
குடங்கணு ணுறுமிளங் குவவுக் கொங்கைபோல்
உடம்பெலா மூடினு முய்யலா மென்பார்.

(கு - ரை.) குலாம்=குலாவும். மதர்விழி=கொழுமையான கண்கள். நுடங்கு=துவளும். குடங்கள் நாணுறும் என்க. (38)

இவ்வணங் கருத்தழிந் திளைஞர் மாழ்குறக்
கொவ்வையங் கனியிதழ்க் கோதை மாரொடு
மெளவலங் குழலெழின் மாயை யென்பவள்
அவ்வரன் கோயிலி னருகு போயினாள்.

(கு-ரை.) மாழ்குற=அறிவுமயங்க. மௌவல்=முல்லை. (39)

சிவிகையி னிழிந்துதன் சென்னி தாங்கிய
குவிகையி னெடுபுகாக் கோபு ரத்துள்வெண்
கவிகைய னெனுமம காரன் கண்ணிகண்
செவிகையி னணிபர னெதிர்சென் றுளரோ.

(கு-ரை.) வெண்கவிகையன் = வெள்ளிய கொற்றக்குடையை யுடைய மமகாரன். கட்செவி=கண்ணையே காதாகவுடைய பாம்பு. (40)

வேண்டிய வனைத்தையு மேவன் மெல்லியர்
ஆண்டரு குறவமைத் தளிப்ப மாயைதான்
காண்டகு நுதல்விழிக் கடவுட் கன்புளம்
பூண்டன ளருச்சனை புரிதன் மேயினாள். (41)

ஆதிய வரன்முறை செய்த ருக்கியம்
ஆதிய கொடுபர னணிந்தி ருந்தபூ
ஆதிய களைந்துமந் திரம றைந்துநம்
ஆதியை மஞ்சன மாட்டன் மேயினாள். (42)

## வேறு

தயிலமுட னானிடத்தைந் தையமுத நறுநெய்பா றயிர்செ ழுந்தேன், வயலினெழு கரும்புடைத்துக் கொள்சாறு பழம்பிழிந்த மதுரச் சாறு, புயலளவு தாழையிள நீர்நறுஞ்சந் தனக்குழம்பு போற்று நூலின், இயலினமை தபனமிவை யொன்றன்பி னொன்று முறை யிறைவற் காட்டி.

(கு-ரை.) ஆனிடத்தைந்து=பஞ்ச கவ்யம். ஐயமுதம்=பஞ்சாமிர்தம். புயலளவு = மேகமண்டலத்தை யளாவிய. தாழை = தெங்கு. தபனம்=ஸ்தாபன கலச நீர். (43)

சங்குலவு மென்கைநெடுஞ் சுடரிலைவேல் விழிமாயை சாம்பற் பூத்து, மங்கலமா கியமேனி முழுவதுஞ்சந் தனத்திரளை மலியச் சாத்தித், திங்களெனு மொருசிறுகூன் முதுகிப்பி யீன்றதெனச் சினவெள் ளேற்றான், கங்கைமுடி மீதினில்வெண் ணிலவெறிக்கு நித்திலவக் கதையு மிட்டாள்.

(கு-ரை.) பிறைத்திங்களாகிய இப்பி ஈன்ற முத்தெனுமாறு இறை திருமுடியில் முத்துக்களால் அட்சதையிட்டாள் என்க. (44)

பிறைதவழு நெடுஞ்சடையெம் பெருமானைச் சார்ந்துசர்ப்ப பிராந்தி மேவ, நறுமலர்மென் றொடைமாலை பலவணைந்து கூர்ங் கோட்டு நால்வாய்ச் சீறக், கறையடியீ னுரிசுமந்த திருமேனி யழ கறநுண் கலைபு னைந்திட், டிறைவனெனும் பணிநாண வயிர்மணிப் பூண் பற்பலவு மெடுத்த ணிந்தாள்.

(கு - ரை.) சர்ப்பப்ராந்தி=கயிற்றைப் பாம்பு என்ற மயக்கம். கூர்ங்கோடு=கூரிய தந்தம். நால்வாய்=தொங்கிய துதிக்கை. உரி= உரிக்கப்பட்ட தோல். நுண்கலை=நுண்ணிய நூலாலாகிய பட்டாடை. ()

நற்றாமங் கமழ்நித்ய கலியாணி மஞ்ஞளர்க்கு நானஞ் சாத் திப், பெற்றானங் கடிதலிலாக் கறிமருவு போனகங்கள் பிச்சை யல்லால், மற்றொன்று மில்லாத பெருந்தகைக்கு நிவேதித்து வண்டு கிண்டி, உற்றாதுங் கடிமலர்மென் குழன்மடவாள் வெள் ளிலையு முவந்த ளித்தாள்

(கு - ரை.) தாமம்=புகை. நானம்=கஸ்தூரி. 'ஊனம் பெற் றக் கடிதலில்லா' என்க. ஊனம்=பழுது. கடிதல்=நீக்கல். போன கங்கள்=உண்டிகள். ஊண்=உணவு. (46)

நறியபுகை செழுஞ்சுடர்மென் சிவிறியொடு வெண்கவரி நாடு மாடி, நெறிமுறையி னெடுங்கடல்போ லியமுழங்க நின்றுதவி நிம லன் றன்னைப், பிறைநுதலிவ் வகைபூசை புரிந்துதுதி பலசெய்து பெருகு மன்பால், மறைபுகலு மஞ்செழுத்து மறைந்துவலம் வந்து முனம் வணங்கிப் பின்னர்.

(கு - ரை.) சுடர்=தீபம். நாடும் ஆடி=விரும்பிப் பார்க்கும் கண் ணாடி. இயம்=வாத்தியம். (47)

அன்பினுள முருகிவிழி சொரிநீரா லெழுதியமை யழிந் திருப் பப், பொன்புரையும் வடிவமயிர் பொடிப்பவெயர் வாணுதலின் பொட்ட ழிந்து, மின்புரையு நெடுஞ்சடிலப் பொன்மலையி னனந்த வெள்ள மூழ்கி, இன்பினடிப் பவளென்ன வந்துநட நவிலரங்கி லெய்தி னாளால்.

(கு - ரை.) நடநவில் அரங்கு=நிருத்த மண்டபம். (48)

அரங்கினிடை நடநவிலுஞ் செயற்கேற்ப வுடையணிந்திட் டரும்பை வென்ற, குரும்பைமுலை யிணைவம்பு கொண்டணிந்து தவங்களெல்லாங் கொள்ளை கொள்ளும், கருந்தடங்கண் மலர்க் கோதை சிற்றடியிற் கைபுனையக் கற்ற மாதர், சுரும்புமுரன் மல் லிகைமென் போதனைய சிறுசதங்கை துளங்க வார்த்தார்.

(கு - ரை.) வம்பு=கச்சு. (49)

மாயைமூலைக் கிணையெனவென் முன்றுனும் வந்ததென வலக் கைத் தாளம், போயிடக்கைத் தாளமதைப் பொருமையினுற் ருக்கு தல்போற் புடைத்தொ லிப்ப, வாயுரைக்கு மொழிபோலத் தண் ணுமைசெங் கைகளால் வார்த்தை சொல்ல, மேயகலைப் பெண் விளர்ப்ப வெழின்மாத ரிசைபாட வீணை கொண்டு.

(கு - ரை.) கலைப் பெண்=கலை மாது. விளர்ப்ப=நாணத்தால் உடல் வெளுக்க. 'வீணைகொண்டு இசைபாட' என்க. (50)

என்னொருகை யொடுமற்போர் புரிகவென நிற்பவள்போ லிடையி ஞெர்கை, மன்னியுற வைத்தொருகை நீட்டியர னெதிர் நின்று மாயை வல்லி, கன்னன்மதன் றனைவருக வெனவிளித்தல் போற்றழங்கக் காற்ச தங்கை, பொன்னினிய லொருபாவை நடிக் கின்ற தென்ன நடம் புரிய லுற்ருள்.

(கு - ரை.) கன்னல்=கரும்பு வில். தழங்க=ஒலிக்க. (51)

## வேறு

தண் ணுமை விளங்கலுறு தாளமிசை யெல்லாம்
வண்ணமலர் மெல்லடி வழிச்சதியி னிற்பக்
கண்ணிணைகொள் பல்வளைய கைவழி நடப்பப்
பெண்ணமுத மன்னவள் பெயர்ந்தன ணடித்தாள்.

(கு - ரை.) 'கண் பார்வை கைவழி நடப்ப' என்க. (52)

வாயுரைசெய் சொற்பொருண் மலர்க்கர முரைப்ப
மீயுயர் விசும்பினெழு மென்புளொலி யெல்லாம்
பாயொளிய பஞ்சுறு பதத்துற மிதித்துப்
பேயொடு நடித்தவிறை பித்துற நடித்தாள். (53)

அந்தணனி ருங்கலை யணங்கினை யுமிழ்ந்தான்
செந்திருவை நேமியிறை சீயென வெறுத்தான்
இந்திர னருஞ்சசியை யெண்ணிலன் மறந்தான்
பைந்தொடி நடிப்பநரர் பட்டதெ னுரைப்பாம்.

(கு - ரை.) அந்தணன்=பிரமன். இருங்கலை யணங்கினை=கலை மகளை. நேமி இறை=திருமால். நரர் பட்டது=மனிதர்கள் பட்டபாடு. ()

பொன்னெயிலி னென்றிய புழைக்குண் முகம்வைத்தும்
துன்னிமுனர் நின்றவவர் தோளிடை யிவர்ந்தும்
மின்னென நடம்புரியு மெல்லியன் மருங்குல்
என்னும்வெளி காணிய விடர்ப்படுவர் மைந்தர்.

(கு - ரை.) எயிலின்=மதிலின். புழைக்குள்=துவாரங்களுக்குள். துன்னி=நெருங்கி. இவர்ந்தும்=ஏறியும். வெளி=ஆகாயம். காணிய= காணுதற் பொருட்டு. (55)

பற்றுமன மோடியிரு பார்வையினு மெய்தி
மற்றைய புலன்களை மறந்து நடமாடும்
பொற்றொடியை நண்ணவுயர் பொன்மதி லுறுப்பின்
உற்றபொறி போலசைவொ ழிந்திளைஞர் நின்றார்.

(கு - ரை.) பற்றும் = விடயாதிகளைப் பற்றுகின்ற. எய்தி= அடைந்து. பொறி= இயந்திரப் பதுமைகள். (56)

இளங்கொடி மருங்குலவ ளின்னண நடிப்பக்
களங்கனியை வென்றமணி கண்டனை யருச்சித்
துளங்குளி ரருந்தவ னுவந்திறை யணிந்த
வளங்கெழுமு சந்தமலர் மாலையொ டளித்தான்.

(கு - ரை.) மணிகண்டனை = நீலகண்டப்பிரானை. அருந்தவன்= கோயிலருச்சகன். கெழுமு=பொருந்திய. சந்தம்=அழகு. (57)

வணங்கிமது கேசனிரு மாலியம தேற்றங்
கணங்குமட வாருட னரங்கிடை யிருந்தாள்
நுணங்கிழை மருங்குன்மிக நோமென விரைந்து
பிணங்குறு சதங்கையமு பிள்ளையி னடங்க.

(கு - ரை.) அணங்கு=மாயை. பிணங்குறு=விராய் ஒலிக்கின்ற. விரைந்து பிணங்குறு சதங்கை அழுத பிள்ளை அடங்கிற்றென அடங்க இருந்தாள் என்க. நுணங்கிழை மருங்குல்=துவண்ட நூல்போல் இடை.

மைத்தட நெடுங்கணிள வல்லிநிகர் மாயை
பத்தியொ டருச்சனை பயின்றதை யறிந்தான்
நித்தனுல கெங்கணு நிறைந்தவ னனாதி
முத்தனரு ளல்லம முதற்பெயரி னானே. (58)

நான்காவது

மாயை பூசைகதி முற்றிற்று.

கதி 4-க்கு திருவிருத்தங்கள் - 216.

ஐந்தாவது

# பிரபுதேவர் வந்தகதி

நிரந்தர மடியார் வேண்டு நினைவெலா நிரப்பா நின்ற
பெருந்தகை யல்ல மையன் பெயர்ந்தொரு மனித னாகி
வருந்துறு மயன்ம னத்தால் வந்தனை புரிந்தா டன்பால் [ம்.
பொருந்துறு பவன்போற் செய்த புணர்ப்பினைப் புகன்று ரைப்பா

(கு - ரை.) நிரந்தரம் = எக்காலத்தும். நிரப்பா நின்ற = நிறைவேற்றுகிற. பெயர்ந்து = நடந்து. பொருந்துறுபவன் = உடன்படுபவன். புணர்ப்பினை = சூழ்ச்சியை. (1)

தாமுறு நுகர்வும் வீடுந் தந்திட வல்லன் றானே
யாமென வியம்ப லாலே யல்லம தேவ னுண்மை
நாமமு மறைய வேறோர் நாமமுற் றம்மா யைக்குக்
காமிய வினைப்ப யன்றான் கடைப்பிடித் தருள வெண்ணி.

(கு - ரை.) தாம் உறும் = உயிர்கள் தாம் அனுபவிக்கும். நுகர்வும் = போகத்தையும். காமிய வினை = பயன் கருதிய வழிபாடு. காமிய வழிபாட்டால் போக நுகர்வும், அதன் எதிர் மறையாகிய நிட்காமிய வழிபாட்டால் வீடு பேறும் உண்டாம் என்பது மரபு. (2)

கதந்தரு திருநு தற்றீக் கண்ணினு ணீறு பட்ட
மதன்செயல் செய்ய வன்றோன் வடிவுதான் கொண்ட தென்ன
முதிர்ந்தழ கொழுகு மாறு முகங்களுட் சிறந்த வொன்றோ
டெதிர்ந்துள முருக னென்ன விளமையோ டழகு வாய்ப்ப. (3)

அவிர்சடை முனிவர் மாத ரழுங்குறக் கொண்ட கோலம்
கவினுமிவ் வடிவங் கொள்ளக் கற்றுமுன் விட்ட தென்னக்
குவிமுலை மகளி ராவி கூட்டுணுங் கோல மென்னப்
புவியுறு மிரவி யென்னப் பொங்கொளி யுருவொன் றுற்றான். (4)

விளிம்புற நடுக்க ளங்கம் வீழ்ந்துசூழ் மதியொன் றுண்டேல்
வளங்கெழு மயிரொ ழுங்கு வள்ளல்வாண் முகநி கர்க்குந்
துளங்குறு முந்தி மேற்போய் மார்பிடைத் தோன்று ரோமம்
இளங்கரு நளின முண்டே லேய்க்குமென் றியம்ப நின்றான்.

(கு - ரை.) 'நடுக்களங்கம் விளிம்பு உற' என்றியைக்க. விளிம்பு = ஓரம். துளங்குறும் = ஒளி பொருந்திய. கரு நளினம் = கருமையான தாமரை. ஏய்க்கும் = ஒக்கும். 'நளினம் உண்டேல் ஏய்க்கும்' என்க. நடுவிலின்றி ஓரத்தில் மாத்திரம் கறையுற்ற மதியும், கருந் தாமரையும் இல் பொருளுவமை. (5)

லேவரம் பறியா வாடை விரித்துடுத் தரையி லங்க
லேவரும் புதிய சந்த மான்மதங் காத நாறக்
லேவரம் பறிந்து ளோர்தங் கருத்தினுக் கரிதா யென்புன்
லேவருங் கமலப் பொற்று டம்பிரான் மலியச் சாத்தி.

(கு - ரை.) 'தம்பிரான் ஆடை யுடுத்து சாந்தம் மான் மதம் சாத்தி' ன முடிக்க. மான்மதம்=கஸ்தூரி. (6)

தளிர்த்ததண் பொழிலிற் றேமாந் தடஞ்சினைக் குயின்மு கம் பால், துளித்தலை முகில்க வற்றுஞ் சுரிகுழற் சிகழி யார்த்கிட், ளித்தொடர் மாலை வேய்ந்தவ் வலங்கலைக் குறுவோர்க் கெல் ரம், வெளிற்றுரைப் பொருள்போற் றேன்ற மென்றலைச் சாத்த னிந்து.

(கு - ரை.) சினை=கிளை. துளித்தலை முகில்=கார்கால மேகம். வற்றும்=ஏய்க்கும். சுரிகுழல் சிகழி=சுருண்ட மயிர்முடி. அலங்கல்= ாலை. வெளிற்றுரைப் பொருள்=வெளிப்படையான சொல்லிலுள்ள பாருள். சாத்து=பாகை. கொண்டை முடிச்சு குயில் முகம்போ லுள் து என்க. (7)

ளத்திடை யிருப்பி னுண்மை காண்குவ ரென்ன வாலம்
குளத்திடை வாங்கி வைத்த கொள்கைபோற் றிலதந் தீட்டி
ளித்தனி மதிதன் பாங்க ருரோணியோ டொருபெண் கூட்டி
வுளித்துற வைத்த தென்ன வணிமணி செவிக்க ணிந்து.

(கு - ரை.) களம்=கழுத்து. ஆலம்=விடம், குளத்திடை=நெற்றி ல். வாங்கி=எடுத்து. பாங்கர்=இரு பக்கத்திலும். உரோணி=உரோ ணி என்பதன் மரூஉ. அளித்து=காத்து. மணி=மணிக் குண்டலத்தை.

லேயில்வெண் டரளக் கோவை வீரசங் கிலிகே யூரம்
லைகுசெம் மணிப்பொன் னாழி யிவைமுத லாய வெல்லாக்
லனுமொண் கவினை னுஞ்செங் கனலிற்பெய் நறுநெ யென்ன
லேவினங் குருகு கேசன் வயங்குறுப் பெலாம ணிந்து.

(கு - ரை.) கேயூரம்=வாகுவலயம். ஆழி=மோதிரம். (9)

ந்திர திருவிற் கேற்ற விலக்கண முழுதும் வாய்த்த
ந்தர குமாரற் காவா விதனைத்தான் சுமப்ப தாக
ந்துள தெதுகொ லோவென் றெண்ணிமா னிடர்ம யங்க
ந்தையின் முதுகின் பாற்றண் ணுமையொன்று நிகழத் தாங்கி.

(கு - ரை.) நிகழ=தோன்ற. இச்செய்யுளில் தகாமையணி காண்க.

சன்றருண் மதுகை நாதன் றிருமுன்வான் சுடர்வ லஞ்சூழ்
ன் றுறழ் கொடிநெ டும்பொற் கோபுரத் தெதிர்போய் நின்று

மன்றிடை நவில்கூத் தாடி மத்தளத் தொழில்கைக் கொண்டான்
என்றுள மருள வெங்கோ னெறிந்துதண் ணுமைய திர்த்தான்.

(கு - ரை.) வான்சுடர்=சூரியன், சந்திரன். குன்று உறழ்=மேரு மலைபோன்ற. மன்றிடை=அம்பலத்தில். நவில்=புகழ்கின்ற. கூத்தாடி=நடனம் செய்தவன்; பெயர்ச்சொல். (11)

உரலசைந் திடாத டுக்கி யுறியினெய் யெடுக்க யின்றோன்
குரலசைந் தூது மோர்வேய்ங் குழன்மொழி மாதர் மாழ்கச்
சிரலசைந் தாடா நின்ற சிறகர்போன் மத்த ளத்தை
விரலசைந் தறைத லன்றி மெய்யசை யாம னின்றான்.

(கு - ரை.) குரல்=கண்டம். சிரல்=மீன்குத்திப்பறவை. சிறகர்=இறக்கைகள். பின்னிரண்டடியில் வியப்பணி காண்க. (12)

சுத்தமெய்ஞ் ஞான னந்த சூரியன் கரத்தா லார்க்கும்
மத்தள முகின்மு ழக்க நடித்துறு மயில்கேட் டம்மா
இத்தரை மனிதர் கையா லெஞ்செவிப் படாதி ருந்த
புத்தொலி யிதுவென் றுள்ளம் வியந்திது புகலு மன்றே.

(கு - ரை.) மயில்=மாயை; உவம ஆகுபெயர். (13)

மோட்டிள முலையி ரின்ன தண்ணுமை முழக்கங் காதால்
கேட்டில மிவ்வா றுண்டென் றுரைப்பவுங் கேட்டி லேமால்
வேட்டுல கனைத்து நின்று வியக்குமிவ் விஞ்சை கற்றுக்
காட்டிய வவன்யார் கொல்லோ காண்கவென் றணங்கு ரைத்தாள்.

(கு - ரை.) மோடு=உயர்வு. 'உலகனைத்தும் வேட்டு நின்று' என்க. வேட்டு=விரும்பி. அணங்கு=மாயை. (14)

மாதர்வல் விரைந்து சென்று மத்தள முழக்கி நின்ற
சோதியை விழியாற் றுஞ்செய் தொல்லைமா தவத்தாற் கண்டு
காதொடு பொருது மீளுங் கயனெடுங் கருங்கட் செவ்வாய்க்
கோதைதன் மருங்கின் மீண்டு வந்திது கூற லுற்றார். (15)

கற்றதன் விஞ்சைபோலக் கவினுநாங் கண்ட தில்லை
விற்றொழி லனங்க வேளே மேனிகொண் டடைந்தா னென்ன
உற்றன னொருவ னென்ன வொண்டொடி விளிமி னென்றாள்
மற்றவர் விளித்து வந்து மாயைமா தெதிர்வி டுத்தார்.

(கு - ரை.) கவினும்=அழகும். (16)

அந்நிலை யலம னுமத் தண்ணலைக் கண்ட போதே
செந்நில முகுநீர் போலச் செல்விமான் மயமே யாகிப்
பொன்னவி ரொருபூம் பாவை போன்றசை வறவி ருந்தாள்
கன்னல்வின் மதவே ளெய்து கையிளைத் தருகு நின்றான்.

(கு - ரை.) அலமன்=அல்லமன்; இடைக்குறை. செம்நிலம் உரும்=
ம்மண் நிலத்தில் விழுந்த. செல்வி=மாயை. பாவை=பதுமை. (17)

பக்குமென் பதுபோய் மாயை மயங்குமென் றிடனி ருப்ப
யக்குநின் றேயம் யாது வீரவே ளனையா யின்பம்
பக்குநின் பெயர்யா தெங்குப் பயின்றுறை குவைசொல் லென்று
பக்குமென் மொழியார் கேட்ப ஞானவா ரிதியு ரைக்கும்.

(கு - ரை.) வாரிதி=கடலையொத்த அல்லமன். (18)

சல்லுறழ் குழலீர் தேய மோபர தேயஞ் சூளால்
ல்லவ ரென்ன வந்தோர் வலிநிலை யல்ல வென்னும்
ல்லம னென்பே ரென்று மன்புசெய் பவரி டத்தில்
ல்லுவன் றொடர்பி லாம லென்றனன் பொய்ம்மை யில்லான்.

(கு - ரை.) செல் உறழ்=மேகம் ஒத்த. பர தேயம்=மேலான
தசம்; முத்தியுலகம். சூளால் = சபதத்தால். தொடர்பு = பற்றுக்
காடு. அன்பு செய்பவரிடத்தில் எந்த சம்பந்தமும் நேராவண்ணம் தழு
க்கொள்வன் என்றபடி. (19)

லகுள விஞ்சை யெல்லா முணர்ந்தவெம் பிராட்டி தன்பால்
லைவற விஞ்சை கற்றோர் தம்மொடு மருவி யப்பால்
சலவினை யொழிந்தி ருத்தி செல்வமோ டைய வென்று
லவித ழமுத மன்று ரியம்பின ரிணங்கும் வண்ணம்.

(கு - ரை.) மலைவு அற=மலைப்பு நீங்க; ஐயம், திரிபு, அறியாமை
ிய. செலவினை=போதலை. இலவிதழ்=இலவ மலர்போலும் அதர
டைய. (20)

ன்கனி வாய்தி றந்து சாற்றவேண் டியசொல் லெல்லாம்
ன்குழு வனைய மாதர் விளம்பலு மகிழ்வுற் றீது
ன்சடை மதுகை நாதன் பூசனைப் பயனென் றெண்ணி
ன்குழன் மொழிம டந்தை யிருந்தன ளுரையா டாமல். (21)

மாகினி தவஞ்செய் தீன்ற முகிழ்முலை மாயை தன்கைப்
குவெள் ளிலைய ளித்துப் பரிந்தரு குறும டைப்பைப்
பாகியென் பவள்சி றந்த போகிபோ னடித்து நின்ற
பாகிதன் கரத்த ளிப்பித் துரியன பலவுஞ் செய்தாள்.

(கு - ரை.) அடைப்பை = வெற்றிலைப்பை. பரிந்து = விரும்பி.
தற் 'போகி' அடைப்பைத் தொழில் புரியும் தோழியையும், அடுத்த
பாகி' போக நிலையினையுடையானையும் குறிக்கும். (22)

டிக்கம லங்கள் போற்று மடியவர் வேண்டிற் றெல்லாம்
ாடுத்தருள் கருணை வள்ளல் கொண்டகோ லத்திற் கேற்ப

நடிப்பவ ளுத லாலே நாமவேற் றடங்கண் மாயை
எடுத்துத வுறுவ தங்கை யேற்றன ளிழிந்து ளோன்போல்.

(கு - ரை.) நாமவேல்=அச்சம்தரும் வேல்போன்ற. எடுத்து உத வுறுவது=எடுத்துக்கொடுத்த தாம்பூலத்தை. (23)

விடைக்கொடி யமலன் றன்னை விடைகொடு புறம்போந் தங்கண்
மடக்கொடி மதவேள் வாளி மருமம்பாய்ந் துருவ நைந்து
நடக்கரி தாகி யம்பொ னகைமணிச் சிவிகை யூர்ந்து
தொடிக்கைநுண் ணிழைம ருங்குற் றோழியர் சூழச் சென்றாள்.

(கு - ரை.) மடக்கொடி = இளங்கொடியான மாயை. மருமம்= மார்பில். நைந்து=வருந்தி. (24)

நண்ணிவெண் குடைவேந் தன்பா னடம்புரி தொழிற்கி சைந்த
தண்ணுமை யல்ல மன்றன் சதுருரைத் துடனி ருப்பக்
கண்ணகன் ஞாலங் காக்குங் காவல னிசைவு கொண்டு
பெண்ணமு தனைய மாயை பிறங்குதன் மாடம் புக்காள்.

(கு - ரை.) 'வேந்தன்பால் நண்ணி' என்க. சதுர்=மேன்மை. உடன் இருப்ப=அவன் தன்னோடு இருக்க. கண்ணகன் ஞாலம்=இடமகன்ற உலகம். இசைவு கொண்டு=சம்பந்தம்பெற்று. (25)

வலம்புரி வளைய னந்த மருங்குசூழ்ந் துறச்சி றந்த
சலஞ்சல மிருப்ப தென்னத் தமனிய மணிமா டத்தில்
பொலங்குழை மகளிர் சூழப் பூந்தவி சிருந்து விஞ்சை
நலந்தெரி பவள்போ லெங்க ணம்பனோ டுரைவி ழைந்தாள்.

(கு - ரை.) அநந்தம்=பல. தமனியம்=பொன். தெரிபவள்= ஆய்பவள். உரைவிழைந்தாள்=பேசவிரும்பினாள். (26)

நினைவவன் புணர்ச்சி மேற்று நெடுங்கணோக் கனங்க னன்னான்
நனிமிகு மழகின் மேற்று நாவெறுங் கூற்றின் மேற்று
புனைமலர் வணர்வார் கூந்தற் பொற்றொடிக் கிதனா லன்றோ
மனமொழி மெய்யொ ருங்கு மங்கைய ரரிய ரென்பார்.

(கு - ரை.) வெறும் கூற்றின்=பயனிலாத சொல்லின். மேற்று= மேலது. வணர்=வணங்கிய; துவண்ட. வார்=நெடிய. பொன்தொடி= மாயை; அன்மொழித்தொகை. (27)

தீதறு கழைக்க ரும்பிற் றீஞ்சுவை யிரத நீத்துக்
கோதினை விரும்பிக் கொள்ளுங் கொள்கைபோ னாவி யின்கண்
போதுறு மதம்வி டுத்துப் புன்மலங் கொள்ளு மாபோல்
பேதையெம் பிரானான் முத்தி பெறாதுபுன் போகம் வேட்டாள்.

(கு - ரை.) இரதம்=சாறு. நாவியின்கண்=புனுகுப்பூனையினிடத்து. போதுறும்=வரும். (28)

ன்றிரண் டொழிய வாளி யுளவெலா மாரன் றார்க்கான்
நன்றிரண் டனைய கொங்கைக் கோமக ளாற்று ளாகி
நின்றிரண் டனைய மேனி யிடலன்மேற் சாய்ந்து வீழ்வாள்
பொன்றிரண் டனைய மாதர் பொருந்தலா ளனி நின்றாள். (29)

களிரியல் காமத் தீயிற் சருகுபட் டாற்று·ளாகி
ளநிகர் மகளிர் சில்லோ ருடன்வர வெழுந்துட் போகி
அளிமல ரளகஞ் சோர வணிமுலைத் துகில்வி லங்க
வளமலி யணையின் மீது வாயுயிர்ப் பெறிந்து வீழ்ந்தாள்.

(கு - ரை.) சருகுபட்டு=சருகென அகப்பட்டு. உளம் நிகர்=தன் னம் ஒத்த. வாயுயிர்ப்பு எறிந்து=வாயிற் பெருமூச்சுவிட்டு. (30)

## வேறு

அள்ளிக் கொளும்பே ரழகனரு ளுமம்புகலு மவாவாலும்
உள்ளக் கருத்தை யுயிர்போலு மகளிர்க் குணர்த்து முளத்தாலும்
மெள்ளப் பவள வாய்திறந்து வீடே தலமன் மேவுதற்குப்
பிள்ளைப் பிறைவா னுதன்மடவீ ரென்றாள் பிறரை வென்றாளே. ()

இறங்கு துறைபி னீக்காயிற் றென்ன மாயை யிடத்துமயல்
பிறந்த பொழுதே யுயிரளவாய் நின்ற தென்னும் பெற்றிமையை
அறிந்து மகளிர் நின்கருத்தை யறிய வுணர்த்தி லல்லமற்குச் [வார்.
சிறந்த மனையொன் றளிக்குதுமென் றுரைத்துப் பின்னுஞ் செப்பு

(கு - ரை.) நீத்து=நீந்துதல். பெற்றிமையை=தன்மையை. (32)

காம முனைதோன் றிற்றுனக்கென் றெங்கள் கருத்திற் றோன்றிற்று
வாம மணிமே கலைமருங்குல் வடிவேன் மருட்டு மதர்விழியாய்
பாமு நினது நெஞ்சகமும் வேற லேநின் னிதயத்தில்
சேம மதனை நாணுமற் செப்பு கென்றார் திருந்திழையார்.

(கு - ரை.) வாமம்=அழகிய. சேமம்=புதைந்தகருத்து. (33)

கன்னித் தன்மை யழியுமெனு நாணு முலகங் காக்குமொரு
மன்னற் குரிய மகளென்னும் பெருமை தானு மத்தளிகன்
தன்னைப் புணர்ந்தா ளென்றுவருந் தகாத மொழியுந் தன்னுளத்தில்
உன்னிக் கருங்கண் மடமாயை யொன்று முரையா திருந்தனளால்.

(கு - ரை.) மத்தளிகன்=மத்தளம்அடிப்பவன். (34)

இறைவி யொன்று முரையாமல் வாளா விருப்ப வேவல்புரிந்
துறவி னின்ற சகலையெனு மாது பிராட்டி யுரையொடுதான்
பிறவு மின்று வேறுபட்டா ளென்னே பெண்ணே யறியேனென்
றறிவு கலங்கி யொருவுகலா விலாசி யணங்கை வினவினள்.

(கு - ரை.) ஒருவுகலா=அவளைவிட்டு அப்பாற்படாத. சகளையென்பவள் விலாசியென்னும் தோழியை வினவினளென்க. (35)

இனியான் மறைப்ப தென்கொனுமக் கின்று வந்த வல்லமனும்
தனிநா யகன்பே ரழகென்னு நறவை யுண்டு தரியாமல்
கனிவாய் மடந்தை யுளமழிந்தா ளென்று விலாசி கட்டுரைக்க [ந்து.
முனியா ளியைந்து புன்னகைகொண் டிருந்தாண் மாயை முகங்கவிழ்

மாயை யிடையை யுளண்முலையான் மற்றை மாதர் போலென்று
தூய மதிஞ ரனுமிதித்துச் சொல்லு மருங்குற் றேகைதான்
வாயி னிளவெண் ணகைதோன்ற வாளா விருப்பக் கண்டுமயல்
ஆயி னுடைய ளெனமாத ரறிந்தா ரருத்தா பத்தியினால்.

(கு - ரை.) அனுமிதித்து=அநுமானித்தறிந்து. 'ஆயின் மயலுடையள்' என மாறுக. ஆயின்=ஆராய்ந்து நோக்கின். அருத்தாபத்தி=நாள்தோறும் உண்ணு விரதமுடையானை அவன் பருத்த தேகத்தைக் கண்டு இவன் இரவிற் கரந்துண்பானென அறிதல் போன்ற ஒருவகை நியாயம். ()

வல்லி யுள்ள மறிந்தனமிம் மாயை தனையு மயக்கவல்ல
அல்ல மன்றன் கருத்தையினி யறிய வேண்டு மென்றவர்தாம்
சொல்ல வொல்லை மதமானி யென்பாள் யானத் தோன்றறனை
மெல்ல வுள்ள மறிவலெனச் சென்றாள் வினோத விமலன்பால். (38)

மங்கை வருமவ் வரவையறிந் தவளோர் மாற்றம் வகுத்திடுமுன்
தங்கு மனையிற் சென்றிருப்ப னுங்க டலைவி யெனைத்தேடில் [வென்
திங்க ணுதல்வெண் ணகைக்கருங்கட் செவ்வாய்த் திருவே செப்புக
றெங்க டலைவ னியம்பமத மானி யியம்பன் மேயினாள்.

(கு - ரை.) மாற்றம் வகுத்திடுமுன்=வார்த்தை சொல்லுவதற்கு முன். தங்கும்=யான் வசிக்கும். வெண்ணகை கருங்கண் செவ்வாய் என்பன=முரண்தொடை. (39)

வீடு புறநீ வேண்டற்க வைய வெமது விளங்குமணி
மாட நினதே யிவணுறைக வரசர் கோமான் மகளிதய
பீட மதனி லுனைவிடா திருத்தி யிருந்தாள் பிரிவறநீ
கூட வுறையும் விருப்புடைய ளென்றாள் குறிப்பு வெளிப்படவே. ()

ஒன்று மில்லே ஞனீவிர் மிகவு முடையீ ரும்மிறைவி
வென்றி யரசர் குலமடந்தை சாதி யறியா விகிர்தன்யான்
அன்றி மகளிர் நீயிர்நான் மைந்த னென்று லடாதம்மா
என்று முங்க ளுடனுறைவென் றெந்தை நகைகொண் டியம்பினான்.

(கு - ரை.) விகிர்தன்=வேறுபாடுடையோன். (41)

கள்ளா தொழியி னன்றியவ ணட்டா ளாயிற் பிணைப்பேதம் [வுனை
கொள்ளா ளொருவர் மாட்டுமெனி லுயிர்போற் சிறப்பிற் கொண்ட

ள்ளா ளென்ன வேண்டுமோ வென்சொ லெல்லா மிருந்தறிதி
ள்ளா லெனவின் மொழிபுகன்றுண் மாற்ற மறிந்த மதமானி.

(கு - ரை.) நட்டாளாயிற் பேதம் கொள்ளாள் எனவே நள்ளா
தாழியிற் பேதம் கொள்வள் என்பது பெறப்பட்டது. சிறப்பில்=சிறந்த
பாருளாக. எள்ளாளென்ன=இகழாளென்று கூற. இருந்து=சிறிய
ாள் தங்கி. மாற்றமறிந்த=திறமாய்ப் பேசக் கற்ற. மதமானி இருந்து
றிக என்றாள் என்க. (42)

ாரிற் சிறந்த மலர்க்குழலாய் நின்சொ லெல்லாங் கவர்பொருளைப்
ாரித் திருந்த தேறுகிலேன் பணியொன் றுரைநவர் பாற்புரிவோர்
ரத் திருந்து வருங்காலந் துணிந்து வருத றுணிவென்றான்
ாரிக் கிணங்கு மவன்போல நடித்து விடுத்து நழுவுவோன்.

(கு - ரை.) கவர்பொருள்=சிலேடைப்பொருள். பாரித்து=அதிக
ாய் நிறைத்து. தேறகிலேன்=(அதன் பொருளைத்) தெளியகில்லேன். ()

ன்னர் மன்னன் மகடிருவோ லக்கங்காணு மைந்தரோ
ன்னை யுன்னு மவளல்ல டலைவ ளாக வுன்னினளால்
ன்ன வன்ன மனையாய்நுங் தலைவிக் கியற்கை யுயர்த்திடுதல்
ன்ன மென்ன வடங்கியொழு குறுத லெனக்கு முறையென்றான்.

(கு - ரை.) முன்னம் என்ன=முன்போல. (44)

சொற்போர் செய்து மறைப்பதினி யென்னும் யாங்க டொழு
றையா, நிற்போய் நின்னை யெதிர்ந்தளவே கரியுண் விளவி னிறை
ழிந்தாள், கற்போ னின்ற வருந்தவருங் கா ணு முன்ன முனைக்
ண்ட, தற்போ னின்று தடுமாற நினைப்போ லிருந்த தலைவியே.

(கு - ரை.) இறையா=தலைவனாக. எதிர்ந்தளவே=நேரே கண்ட
ாலமுதல். கரியுண் விளவின்=யானையுண்ட விளங்கனிப்போல்; இது
ம்மரத்திற்கு வருமொரு நோய். கல்=மலை. காணும் முன்னம்=தன்
க் காண்பதற்குமுன். தன்போல்=தன்னைப்போல. (45)

என்று மங்கை கூறுதலுந் தலைவி யிதய நீயறிவை, அன்றி
ன்று புதியன்யா னறிவ னேவிங் காப்தமாய், நின்ற வுன்றன்
மாழிகேட்கு மதுவே யெனக்கு நெறியென்றான், குன்றை வென்ற
விமுலையாள் களிப்ப வெமையாட் கொள்ளுவோன்.

(கு - ரை.) ஆப்தமாய்=நட்பு முறையாக. நெறி=வழி. குவி முலை
ாள்=மதமானி; உமாதேவியுமாம். (46)

ல்ல சகுன மென்னவெதிர் கண்டு வந்தாய் நம்பிநீ
ல்ல வசுரர் சுரர்முனிவ ரெல்லா மயங்கு மாயையையோர்
ல்லி னெளிய ளெனப்புல்ல நின்று யெனப்புன் முறுவலொடு [யே.
சால்லி மகிழ்வு கொண்டிறைவி பான்மீண் டனளச் சுடர்த்தொடி

(கு - ரை.) புல்லின்=புல்லைப்போல. புல்ல=தழுவ. (47)

அங்கு மாயை மதமானி சென்ற தற்பி னகந்தளர்ந்து
மங்கை வாய்மை கூறியுடம் படுக்கு மோமன் மகடனக்குப்
பங்க மாமென் றென்னுயிரைச் சிறி யகலப் பண்ணுமோ
இங்கு நானென் செய்வளென வறியே னென்ன விருந்தயர்வாள்.

(கு - ரை.) மங்கை=மதமானி. உயிரை=உயிர்போன்ற அல்லமனை. (48)

என்னோ வறிந்து போயினள் சந்து பொருந்தா தெய்துமோ
அன்னோ வரசன் மகளென்ன வஞ்சி யழக னகலுமோ
இன்னோ ரன்ன நினைவின்றி யெனையே நினைந்திட் டிருக்குமோ
பொன்னோ டுறழும் வாண்முகங்கண் டலது துயரம் போகாதே.

(கு - ரை.) என்னோவு=என் காமநோயை. சந்து பொருந்தாது=வாய்க்கும்வழி நேராமல். அன்னோ = ஐயோ. இன்னோரன்ன=இத்தகைய. உறழும்=பொருந்தும். முகம்=அல்லமன் திருமுகம். (49)

என்னப் பலவு நினைந்துமட மாயை யிருப்ப விகுளைமார்
மின்னற் கருங்க ணிடனுடைக் குறிக ணல்ல விளங்குதலால்
கன்னிக் குவகை கைகூடு மென்ன விருக்குங் காலைதனில்
அன்னப் பெடைபோ னடந்துமத மானி களிப்புற் றடைந்தனளால்.

(கு - ரை.) இகுளைமார்=தோழிமார்கள். கண் இடன் ஆட=இடதுகண் துடித்தலாலும். குறிகள் நல்ல=சுப சகுனங்கள். (50)

வண்டா மரைபோன் முகமலர்ந்து வந்தாள் சென்ற மதமானி
கண்டார் மகளி ரவனுள்ளங் காயோ பழமோ கழறென்றார்
தண்டார் வனைமென் குழன்மடவீர் பழமே யென்று சாற்றினள்
கொண்டா ருவகை யவர்மாயை யுவகை யாரே கூறுவார்.

(கு - ரை.) காயோ பழமோ=காரியங் கைகூடிற்றா இல்லையா என்னும் குறிப்பு மொழி. (51)

மன்ன னறியி னென்னுமோ வறியோ மிதனை மறைமினெனப்
பன்னி மகளி ருளத்தடக்கிக் கங்குல் வரவு பார்த்திருந்தார்
அன்ன மனையா ளல்லமன்ற னுடம்பா டுரைத்த வம்மொழியே
கன்னன் மதவே ளெய்தபசும் புண்ணின் மருந்தாக் களிப்புற்றாள்.

(கு - ரை.) பன்னி = பேசி. அன்னம் அனையாள் = மாயை. உடம்பாடு=சம்மதம். 'அம் மொழி மருந்தா களிப்புற்றாள்' என்க. (52)

புனலின் விளையா டிருமைந்தர் தம்மு ளொழுந்து போயோடிப் [டைப்
புனலின் விழுவான் போல்விழுந்த தொளிஞா யிறுபோய்ப் புணரியி
புனலின் விழுந்து மூழ்குபுவந் தெழுவான் போலக் குணதுகடல்
புனலின் மிசைவந் தெழுந்ததிருள் பருகிப் புதுவெண் டிங்களே.

(கு - ரை.) இரு மைந்தராம் உவமைக்கு சூரிய சந்திரர் உபமேயம். குணுதை=கிழக்கின் கண்ணது. (53)

தொக்க கமலம் வாய்மூடக் கள்ளுண் டிடறுஞ் சுரும்பினங்கள்
மொய்க்கு நறுமென் குவளைவாய் திறந்த முகிறுஞ் சிளம்பொழிலில்
புக்க மணிநீர்க் கயத்திரைதேர் குருகு விண்மீன் பூத்தனவால்
செக்க ரெனுஞ்செந் தீயினிடைப் பொரிந்து தெறித்த பொரிபோல.

(கு - ரை.) தொக்க = நெருங்கிய. இடறும் = மயங்கும். வாய் திறந்த=மலர்ந்தன. துஞ்சுதல்=வந்து படிதல். கயத்து=தடாகத்தில். இரைதேர் குருகு புக்க=இரையைநாடும் நாரைகள் அடைந்தன. செக்கர்=செவ்வானம். 'செக்கர் எனும் செந்தீயினிடைப் பொரிந்து தெறித்த பொரிபோல் விண் மீன் பூத்தன' என்க. ஆல்=அசை. (54)

தூய சோதிப் பகலவன்போய் மேலைப் புணரி தோய்ந்திடலும்
மாயை நாமங் கொண்டிருந்த மணிமென் கலாப மயிலைவான்
ஆய கோம்பி கண்டுசினந் துடலஞ் சிவப்புற் றடங்கல்போல்
மேய மாலைப் பொழுதிலிருஞ் செக்கர் தோன்றி வீந்ததால்.

(கு - ரை.) புணரி=கடல். தோய்ந்திடலும்=மூழ்குதலும். மணி மென்கலாபம்=முத்து மணிகளிழைத்த மெல்லிய மேகலை; அழகிய மெல்லிய தோகை: சிலேடை. வான் ஆய கோம்பி=பச்சோந்தி. வீந்தது= மறைந்தது. இது, உருவகவணி. (55)

காலை யரும்பிப் பகலெல்லாம் போதா யிருந்த காமமலர்
மாலை மலர்ந்து பொருமலொரு மாயை நாம மணிவல்லி
மூலை யிருந்து புறம்போந்து விரிவெண் ணிலாமென் முற்றத்தில்
பீலி மஞ்ஞை யெனவீழ்ந்து மதநோய் மிகவாய் பிதற்றுமால்.

(கு - ரை.) 'காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி மாலை மலரு மிந்நோய்' என்ற குறள் ஈண்டு பயின்றமை யறிக. மலர்ந்து=மலர்ந்தத னால். மணிவல்லி=அழகிய கொடியானது. புறம் போந்து=வெளியே வந்து. விரி=பரவிய. பீலி மஞ்ஞையென=தோகையையுடைய மயில் போல. மத நோய்=காம நோய். 'காம மலர்' உருவகம். (56)

தாய்வா யடைந்து மிகுந்தலையை மோதிமோதிச் சலித்தலறக்
காய்வாய் நிலவே யுடன்பிறந்தா ளிருந்து வாழுங் கடிமனையை
நீவா னெழுந்து வந்தழிப்பா யென்று லந்தோ நிலையின்றித்
தேய்வாய் நின்னே டியைபில்லா வென்னை யென்ன செய்யாயே.

(கு - ரை.) தாய்வாய்அடைந்து=நின் தாயினிடம் உதித்து. அவள் மிகவும் தன் தலையை மோதி அடித்துச் சலிப்புக்கொண்டு அலறுமாறு கோபிப்பாய் எனவும், தாவி கரையை அடைந்து அதிகரித்த அலைகளை மோதி சலசலப்புத்தோன்ற ஒலிக்குமாறு எரிப்பாய் எனவும், சிலேடை யாய் இரு பொருள் தோன்றின. உடன்பிறந்தாள்=திருமகள். கடி

மனை=சிறந்த (அல்லது) வாசனை வீசுகின்ற தாமரையாகிய வீடு. வான்= ஆகாயத்தில். சந்திரோதயத்தில் தாமரை குவிவது மரபாகலின் கடிமனையை அழிப்பாய் என்றார். தாய்க்கும் உடன் பிறந்தாட்கும் துன்பம் விளைவிக்கும் காரணத்தால் ஒரு நிலையில் இராது தேய்பிறையும் வளர் பிறையுமாகிறாய் எனும் நயம் தோன்றலறிக. உரிய உறவினரான அவர் களையே வருத்தும் நீ, உன்னோடு ஒரு தொடர்பும் இல்லாத என்னை என்ன தான் செய்ய மாட்டாய் என்று இரங்கியவாறு. (57)

தக்கன் மகத்தி லொருஞான்று தாளிற் படுநீ தலையேறி
மிக்க முனிவர் மந்திரநீ ரிறைப்ப வின்னு மீண்டிலாய்
நக்கன் பவள வாய்ப்பட்டுக் களத்தே யிறங்கு நஞ்சுதனை
யொக்கு மென்ப தறியாமை யன்றோ வொளிர்வெண் மதியமே.

(கு - ரை.) ஒருஞான்று=ஒரு காலத்தில். தலை=(சிவனார்) சடைமுடி. மீண்டிலாய்=இறங்கவில்லை. நக்கன்=சிவபிரான். (58)

அங்க மதினஞ் சிருத்தினோ னங்க மல்லா வவிர்சடைமேல்
தங்க நினைவைத் திட்டதுநின் கொடுமை கருதித் தானன்றோ
பொங்கு மமுத கலையென்ன நின்னைப் புகறல் வெண்டிங்காள்
இங்கு மனிதர் காராட்டை வெள்ளா டென்ப தொக்குமால்.

(கு - ரை.) காராட்டை மங்கலங்கருதி வெள்ளாடென்பர். (59)

உருப்ப மிகுவன் றழல்சிவப்புற் றுலகர் காண வொளிதரவும்
நெருப்பு வெண்மை யென்பதுநன் னியாயர் நின்னைக் குறித்தன்றோ
பொருப்பு நறுஞ்சந் தனச்சேறு புலர்ந்து பொரியப் பூவணையும்
விருப்ப மலருங் கொளுந்தவழல் வீசி யெழுந்த வெண்டிங்காள்.

(கு - ரை.) உருப்பம்மிகு=வெம்மைமிகுந்த. பொருப்பு=பொதிய மலையின். புலர்ந்து=உலர்ந்து. மலரும்=மலர்மாலையும். கொளுந்த=பற்றி எரிய. நெருப்பை வெள்ளை என்பது முரணியைபணி. (60)

இன்றோ றுலகி லெனக்கொன்று பிறர்க்கொன் றாகி யிருக்கின்றாய்
நன்றோ வுனக்கு மதியமே ஞாயி றேபோல் வாழாமல்
முன்றோ கையர்க ளியாவரையு மொப்பக் காணு முயற்சியால்
அன்றோ தேய்ந்து போகின்றா யந்தோ வதனை யறியாயோ.

(கு - ரை.) தோகையர்கள்=அசுவினியாதிய இருபானேழ் தேவியர்கள். (61)

கொல்லா நோன்பு முனிமலையிற் றோன்றி யென்னைக் கொல்கின்றாய்
பொல்லா மந்த மாருதமே யென்னோ கருணை பூண்டிலாய் [மே
சொல்லாய் திருப்பாற் கடலினிடைத் தோன்றுங் கடுவிற் றன்குண
அல்லா லமுத குணமுண்டோ நின்னை வெறுப்ப தறிவன்றே.

(கு - ரை.) முனி=அகத்தியர். கடுவில்=விஷத்தில். (62)

உயிர்த்த பொழுதே நின்குரல்கே ளாமுன் னேடிற் றீன்றதாய்
நயத்தின் வளர்த்த தாய்குரல்கேட் டலுமே நடுங்கத் துரந்ததால்
பயத்த மலர்ப்பூங் காவகத்தி லிருந்து பல்காற் கூவினல்
செயிர்த்து நின்னைக் குயிலேநான் வெறுத்தல் செப்ப வேண்டுமோ.

(கு - ரை.) ஈன்றதாய்=பெற்ற தாயான காகம். உயிர்த்தபொழுதே=முட்டையாய்ப்பெற்ற அப்பொழுதே. வளர்த்ததாய்=குயில். துரந்தது=நின்னைத் துரத்திவிட்டது. பயத்த=பயனுன. (63)

கன்னற் சிலையா யென்மனத்தைக் கலக்குங் காளை கவின்கண்டு
முன்னிற் பதற்கு நாணியோ விங்கே நின்று முனிகின்றாய்
தன்னிற் பெரிய ரில்லையெனு மவனைச் சமரிற் றாக்காமல்
நன்னர்த் தளிரின் மெலியாரை யடர்த்தா யாண்மை நன்றரோ.

(கு - ரை.) வலியோரை வருத்தாது எளியோரை நலிகின்றாய் என்றபடி. (64)

என்று புலம்பி மயன்முதிர்ந்து மாயை யிரங்கி யிருந்தயர
மன்றன் மலர்பெய் மெல்லணைப்பூம் பள்ளி யறையின் மதமானி
சென்று நம்பி யல்லமனை முன்றந் திருத்தித் தேரையூண்
வென்றி மடங்கற் கிடுதல்போ லவளை விடுத்தா ளவ்வறையுள்.

(கு - ரை.) மடங்கல்=சிங்கம். (65)

## வேறு

வேனினண் பகலின் வெய்யபா லையுணீர் வேட்டவ னந்நிலத் துறுநீர், தானெதிர் கண்டு பருகவோ டுதல்போற் றண்மல ரணை மிசை யமர்ந்த, ஞானநல் விளக்கை விழியுறக் கண்டு நகையொடு திருமுக மலர்ந்து, பானலங் கண்ணி புணர்முலை விம்மப் பரிந்து மேல் விழுந்துபுல் லினளால்.

(கு - ரை.) வேனில்=வசந்தகாலம். பாலையுள்=பாலைநிலத்தில். நீர்=கானல் நீர். பானல்=குவளை. (66)

நாடிய வாடி நிழலென வணைமே னண்ணுறத் தோன்றிய விறையை
ஓடினள் விழுந்து தழுவுறத் தழுவ வுறாமையா லணைமிசை விழுந்தே
ஆடியி னிழலைப் பற்றநீட் டியகை யாடியிற் றாக்கநின் றழுது
வாடுறு மழலைப் பேதையே போல வருந்தினண் மதர்விழி மாயை.

(கு - ரை.) நாடிய=நோக்கிய. உறாமையால்=அவன் தன் கைக்கு அகப்படாமையால். (67)

சொல்லரு மழகன் றிருவுரு விழியிற் றோன்றலான் மீளவு மெழுந்து, புல்லினண் மலர்மென் கைகளால் வெளியைப் புல்லல் பாற் சுவைத்தனள் வெறுவாய், வல்லியிவ் வாறு வெளிமயக் குற்று உள்ளறன் கைப்படா மையினால், அல்லம னலனீ துருவெளி யன்ன வயிர்த்தன ளுண்மையை யன்றே.

(கு - ரை.) வெளியைப் புல்லல்போல் புல்லினள் என்க. புல்லல்= தழுவல். உண்மையை=அவன் உண்மைத் திருஉருவை. அன்று, ஏ= அசைகள். (68)

அருந்தவ நெடுநாண் முயன்றுதான் பெற்ற வழுதைவாய் வைத்திடு மளவில், கரந்தவ ருதல்போ லல்லம தேவன் கட்புலத் துற்றுமென் றேளில், பொருந்துற வெளிபோல் வராமையாற் றீயிற் புழுவெனப் பதைபதைத் தரிவை, வருந்தினள் காம மல்லம னன்றி வடிவுளார் யார்கடந் திடுவார். (69)

கன்னிகை யென்று மிறைமக ளென்றுங் கருதிடா தவாவினைத் திட்டும், என்னிணை முலைகண் மார்புறத் தழுவி யிதழ்சுவைத் தணைமிசைப் புணர்வுற், றின்னலி லின்பக் கடலிடை மூழ்க விவன்றனாற் பெற்றிலே னென்று, தன்னக நைந்து வெய்துயிர்ப் பெறிந்தா டவத்தரை யலைத்தவம் மடந்தை. (70)

பொழிந்திழி மழையால் வளிகனைந் திடுமேற் புகைந்தெழு மெரியில்வான் வேமேல், முழங்குவெண் டிரைப்பே ராழியக் கலய முனிவனை யழுத்து மேனஞ்சம், எழுந்தரன் றன்னை வருத்துமேன் மயக்க மெய்துவ னல்லம தேவன், ஒழிந்தவர் தம்மை யொழிவற மயக்கு மொருத்தியு மவன்றனை மயக்கும்.

(கு - ரை.) வளி=காற்று. கலய முனிவன்=கும்பமுனிவன்; அகத்தியன். (71)

விண்ணினைக் குத்திக் கையினைப் பவர்போல் வேனெடுங் கண்ணியங் கிருந்த, அண்ணலைத் தழுவித் தழுவிமெய் வருந்தி யவசமுற் றணைமிசை யுறங்கி, எண்ணுறு நினைவா லவன்புணர்ந் ததுபோ லின்கன வொன்றுகண் டெழுந்தாள், கண்ணக னிலத்தி னிருள் குடிப் பவனுங் கருங்கடன் முகட்டினி லெழுந்தான்.

(கு - ரை.) அவசம்=தன்வசமின்மை. எண்ணுறும்=முன் தான் எண்ணிய. இருள் குடிப்பவன்=சூரியன். (72)

காலையின் மாலை வார்குழன் மாதர்க் கண்டுரை செய்வளல் லமன்றன், கோலமென் சொல்வேன் விழியெதிர் தோன்றிக் குறுகிலென் கைப்படா னதனால், சாலவு நைந்து துயின்றனன் கனவிற் றடமுலை குழைந்திடப் புல்லி, மேலுநல் லருள்செய் துன்னைநா னென்றும் விடுகிலே னென்றன னென்றாள்.

(கு - ரை.) கோலம்=விளையாட்டு. (73)

அருந்தவ மழிக்கு மழகுடை யணங்கிற் ககப்படா விறலினன் யாரோ, புரந்தர னயன்மால் சுரர்முனி வரர்கிம் புருடர்வித் தியாதரரென்னப், பரந்தவர் தம்மு ளலனிவ னொருவன் பார்த்திடிற் பராபர னென்று, திருந்திழை மகளிர் மனத்துளே வியந்து தெரிவையோ டுரைத்தன்மே யினரால்.

(கு-ரை.) பரந்தவர்=பரவி இருக்குமவர் (74)

ஆசைநின் னுளத்தின் மிகவளர்ப் பதற்கா யல்லம னிவ்வகை டித்தான், பேசுறு கனவின் பயனுனக் குரைப்பிற் பின்புனை மெய் ற வணைவன், வாசமென் குழலா யென்றவண் மனத்தின் வருத்த ற் றிடவறிந் துரைத்தார், காசணி மருங்குன் மடந்தையர் மாயை வலைதீர்ந் துள்ளுளே களித்தாள். (75)

இன்னண மாயை மாதிடை நிகழ்ந்த வியல்பினை மோகினி லர்போய்ப், பன்னுற வறிந்து மானமீக் கூரப் பருவரற் கடலிடைப் டிந்து, தன்னொரு மகள்வாழ் மாளிகை யெய்தித் தனயையைப் ரங்கிமா ரொடுகூய், என்னிது செய்தா யையகோ பேதா யென்று நெந் தின்னன புகன்றாள்.

(கு-ரை.) மீக்கூர=அதிகரிக்க. பருவரல்=துன்பம். (76)

மானமு முயிரு மொருங்குநில் லாத வழியுயிர் தன்னையே விடுத் நுத், கானுறு பொருளாய் மானமே கொளுமுன் றந்தைதன் செவிப் படி லென்னும், பானுவு மதியு மியங்குறு மளவும் பழியிது வழிவழி பராதோ, யானுனை வருந்தி யீன்றது மிதற்கோ வென்செய்தாய் பாவியென் றிசைப்பாள்.

(கு-ரை.) என்னும்=என்ன விளையும்? (77)

குரவர்தா மிசைந்து கொடுத்தில ராயிற் குமரவே ளனையவ ரேனும், அருவரா நிற்பர் தந்தைதாய் தங்க ளாணையி னொழுகுகன் னியர்தாம், உருவிலா ரெனினுங் குரவருண் மகிழ்வுற் றுதவுறி னனை வர் தம்மைப், பரவுவான் கடவு ளாகவே நினைந்து பண்பொடும் யி லுவ ரன்றே.

(கு-ரை.) அருவரா=அருவருத்து. பண்பு=தகுதி. (78)

மணம்புரி வதன்முன் குரவரா ணையினு மணவினை முற்றிய பின்னர், இணங்குற வருள்செய் கொழுநனா ணையினு மிருப்பர்தம் யமில ரென்றும், அணங்கனை யவர்தா மென்பதை யறிந்து மடாத பிச் செயலினைச் செய்தாய், பிணங்குவா ரிலையென் றிருந்தனை போலும் பேதைநீ யென்றுதாய் முனிந்தாள். (79)

தான்செயுந் தவறுந் தாய்செயு முனிவுந் தன்மனந் தனைநனி ருத்த, நான்செய்வ தென்னென் றிருநில நோக்கி நாணிநீர் விழி ுக விருந்தாள், தேன்செய்மென் மொழியாண் மோகினி கண்டு னந்தவிர்ந் தகங்கரைந் துன்மேல், மான்செயும் விழியாய் பிழை லை யென்றுண் மனங்கரை வன்னைபோ லுண்டோ. (80)

மங்கைமீர் நீயிர் சூழ்ந்தன ரிருந்தும் வளைதரு வேலியில் பயிர் பால், எங்கடம் மடந்தை நிறையழிந் தொழிய வென்செய்தீர் பாவிகா ளென்றாள், அங்குறு மடவார் சொல்வரெம் பிராட்டி யரு

ளொடு கேண்மதி மதனால், உங்குல மடந்தை யுயிர்விடா திருந்த
துன்றவ மென்றுநைந் துரைத்தார்.

(கு - ரை.) மதி=முன்னிலையசை. (81)

பாங்கியர் பகரச் சினஞ்சிறி தவிந்து பாங்கியர் குழுவினுட்
சிறப்புற், றோங்கிய சகலை தன்முக நோக்கி யுரைப்பண்மோ கினி
யெனு மரசி, பூங்கணை மதவேள் ளனையவல் லமனைப் புறத்துநின்
றகற்றிடா தெங்கள், ஈர்ங்கதிர் முகமெல் லியன்முனம் விடுத்தா
யென்கொலோ வெனவவ ளுரைப்பாள்.

(கு - ரை.) புறத்து நின்று=வெளியிலிருந்தபடி. (82)

மானிடப் பிறவி யரிததி லரசர் மக்களா குதலரி ததனில்,
ஊனுறுப் பமைத லரிததி லரிதா லுணர்வொடு போகங்க ணுகர்
தல், தானெனப் பெரியர் கூறலா லன்னாய் தவம்பல முயன்றுநீ
பெற்ற, மீனெனப் பிறழுங் கண்ணியை வெகுண்டு வெறுப்பது
தகாதென வுரைத்தாள். (83)

மோகினி சகலை புகன்மொழி கேட்டு முகமலர்ந் தென்றவப்
பயனும், பாகெனு மொழியா டவறிலள் யாழோர் பயின்மண மரசர்
மேற் றென்பர், ஆகலி லிவளுக் கல்லமன் றனே யருமணத் தலை
வனங் கவன்பால், போகம்வேண் டியவா கொள்கெனப் புகன்று
புகன்றனள் பின்னுமோர் மாற்றம்.

(கு - ரை.) யாழோர் பயில்மணம் = காந்தருவமணம். கொள்
கென=அநுபவிக்க என்று. (84)

உலகெலா மறிய வதுவைசெய் காறு முலகமன் னவனறி யாமல்,
திலகவா ணுதலா ளொழுக்கநீர் மறைமின் றேமொழி யீரிவ டமை,
நலமெலா நுமதே யாதலா னுமக்கு நான்சொல்வ தென்னெனு
மகளுக், கலகிலா வுவகை செய்துபோ யினடன் னகத்திலுண் முனி
வுற வந்தாள்.

(கு - ரை.) அலகிலா=அளவில்லாத. முனிவுற வந்தாள் உவகை
செய்து போயினள் என்க. (85)

என்பிழை பொறும லன்னையோ டென்பா லிருந்தவ ரேசொலி
னதனால், அன்புடை யன்னை முனியுமோ வென்ன வறைந்தனண்
மாயைகேட் டறைவாள், பொன்புரை சகலை நங்குரு வுனக்குப்
புராரியே தலைவனென் றிருப்பப், பின்பிது நீசெய் தனையெனி னின்
னைப் பிழைசொல்வார் மேற்பிழை யுண்டோ. (86)

மானனை யாய்நந் தாயறிந் தமையான் மறைந்தது நொய்து பட்
டன்றிக், கோனிதை யறிவ னெனினெளி தாமோ கோமள வல்லிநீ
கேண்மோ, போனது போக வினியவன் றன்னைப் புறத்தினில் விடு

தே யறிவு, தானென வுரைத்தாண் மாயைகேட் டயர்ந்து தாங்
ருந் துயரமோ டிருந்தாள்.

(கு - ரை.) 'நொய்து பட்டு மறைந்தது' என்க. நொய்துபட்டு= ற்பமாகி. கோன்=அரசன். அவன்றன்னை=அல்லமனை. புறத்தினின் டுவதே=அப்புறப்படுத்துவதே. தான்=அசை. (87)

அல்லம னறிந்து நுந்திரு மடந்தைக் கடுத்தவென் புகலெனச் கலை, வல்லிசின் மாயை வலையிடைப் பட்ட மறையெலா மிறை னை நிறைந்த, தொல்லைநல் வினையா லறிந்திலன் வேந்த னொருவ னும் யாமுய்ய வேண்டிச், சொல்லுவ தொன்றுண் டையநீ புறத் தார் சூழலி லிருத்தனன் றென்றாள்.

(கு - ரை.) மறை=இரகசியம். புறத்து ஓர் சூழலில்=அரண்மனை கு வெளியிலுள்ள ஓரிடத்தில். (88)

மாயையை யகன்று னடக்கக்கா லெழுமோ வாயிடை மாற்ற மொன் றுண்டோ, போயொரு விடய முணமனம் வருமோ பொருந் துறும் பகலிர வுளவோ, காயமு முயிருங் கலந்துவாழ் வுறுமோ கண்டன மெனவெனை யொருவர், நீயறி வுறவிங் குரைப்பவ ருள ரோ நேரிழா யென்றன னண்ணல்.

(கு - ரை.) மாற்றம்=வார்த்தை. உண்டோ=வருமோ. விடய முண=விஷயத்திற் கவனம் செலுத்த. காயம்=உடல். (89)

கருத்தினை யறியா தவன்மொழி தனக்குக் காட்டிய பொரு ளையே கொண்டு, விரைத்துணர் மலர்மென் குழலினுள் புணரும் விதி புள தென்னிலெங் கொடியைத், தரித்தெவ னொருநீ யிருப்பினு மனக்குத் தருமிதி லையம்வேண் டாவென், றுரைத்தனள் கருணை யென்றுசெய் குவனென் றுழன்றவ ளண்ணலை நோக்கி.

(கு - ரை.) கருத்தினை அறியாது=அல்லமன் நினைப்பினை அறியா மல். விதி=ஊழ். தரித்து=தங்கி. தரும்=கொண்டுவந்துவிடுகிறேன். ()

சகலையிவ் வாறு மொழிதர நங்காய் சாலவு நன்றுநன் றென்று, கைமதி தவழுஞ் செஞ்சடை மதுகை நாயகன் றிருமுனஞ் சென்று, முகிழ்முலை நடிக்கும் பொழுதுதன் செயல்செய் முயற்சியி னின்ற னன் றனக்குத், தகுமென வளர்பே ரறிவினுற் றன்னைத் தானலா தறிதரப் படர்தான்.

(கு - ரை.) முகிழ்முலை=மாயை; வினைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை; உவமத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையும் ஆம். (91)

ஐந்தாவது

பிரபுதேவர் வந்தகதி முற்றிற்று.

கதி 5 - க்கு திருவிருத்தங்கள் - 307.

ஆறவது

# விமலைகதி

## வேறு

அமலை யேவ வகனிலத் தெய்துபு
சமல மாயை தனக்கருண் மூர்த்தியாம்
நிமல னல்லம னிதியை யன்பினுல்
விமலை கூறிய வண்ணம் விளம்புவாம்.

(கு-ரை.) அமலை=பார்வதிதேவியார். அகனிலத்து=பரந்த உலகில். விமலை=ரசோகுண வடிவி. (1)

மதுகை நாதனை நாடொறு மாயைதான்
அதிக வந்தனை யாற்றிந மல்லமன்
உதவு மான்மனத் தோங்க விருந்தனள்
திதிக ளெண்ணில செல்ல நிலத்தினே.

(கு-ரை.) மால்=மயக்கம். திதிகள்=நாள்கள். (2)

ஆய காலையி லம்பிகை ஞாலமேன்
மாயை போய்நெடு நாளினும் வந்திலள்
போயி ராதவட் கொண்டிவண் போதென
ஏயி னுணல் விமலையை யென்பவே.

(கு-ரை.) ஞாலமேல்=நிலவுலகில். இராது=தாமதம்செய்யாது. ஏயினுள்=ஏவினுள். என்ப, ஏ=அசைகள். (3)

கறையில் சோதிக் கயிலையி னின்றுநம்
இறைவி யேவ விறைஞ்சி வருமுலைப்
பொறையி னுல்விழுந் தாளெனப் பூமிசை
மறுவி லாமதி போல்பவள் வந்தனள். (4)

வந்து பொன்னெயில் வட்ட வனவசை
நந்து பொன்மணி மாட நணுகியே
சந்த மாயை தனதெதிர் நின்றனள்
கந்த மென்மலர்க் கற்பக வல்லிபோல்.

(கு-ரை) வட்டம்=சூழ்ந்த. நந்தும்=வளம்சிறக்கும். மாடம்=மேலுப்பரிகை. கந்தம்=வாசனை. (5)

நின்ற போதெதிர் கண்டு நிலவுல
கன்று போலுமிவ் வாயிழை வாழிடம்
என்று மாயை யெழுந்து தொழுதனை
ஒன்று மேவி யிருப்ப வுதவினுள். (6)

அருகி ருந்த வனைய ரிருவரும்
இருக ரங்களு மேந்து மணியென
உருவ மைந்திவ ளைத்தன ரென்றுசூழ்
புரம டந்தையர் புந்தி வியந்தனர்.

(கு - ரை.) அனையர் = அத்தன்மையரான. புந்தி = மனத்தில்.
ரம் = அந்தப்புரம். (7)

மாயை வந்த மடந்தையை நோக்கியே
நீயி ருந்ததெங் குன்பெயர் யாதுநீ
மேய தன்மையென் னென்று வினவலும்
தேயு நுண்ணிடைச் செப்புதன் மேயினள்.

(கு - ரை.) நுண்ணிடை = விமலை. (8)

கயிலை யென்னிடங் கற்பக வல்லியென்
பெயரி யம்பின் விமலை பெருங்குல
சயில மங்கைநின் றன்புடை யேவினள்
வியனி லந்தனில் வந்துனை மேவினேன்.

(கு - ரை.) கற்பகவல்லி = கற்பகக் கொடிபோன்ற மாயையே.
குலம் = சிறந்த. சைலமங்கை = பார்வதி. வியன் = பரவிய. (9)

என்ன மன்மக ளெம்பெரு மாட்டிதான்
மன்னும் வெந்துயர் மக்கட் பிறப்பினேன்
தன்னை யுன்னிநின் றன்னை விடுத்ததென்
பன்னு கென்னப் பகர்தரன் மேயினள்.

(கு - ரை.) மன்மகள் = மாயை. மன்னும் = பொருந்திய. (10)

## வேறு

அல்லமன் வலிநிலை யறிந்து வாவென
நல்லுமை நினைவிட நன்றென் றெங்கைநீ
வல்லமை பேசியிம் மண்ணில் வந்தபின்
சொல்லிய நின்பெருஞ் சூண்ம றந்தனை.

(கு - ரை.) எங்கை = என்தங்கையே; அண்மைவிளி. (11)

நின்னையு மறிந்திலை நீயென் றாலிவண்
உன்னுறு மனமொழி யுறுத வல்லமன்
தன்னைநீ யறிவுறுந் தன்மை யுண்டுகொல்
கன்னிமா துமைதம கலையை யல்லையோ.

(கு - ரை.) உன்னுறும் = நினைக்கும். மனமொழியுறுத = மன
வாக்கிற் ககப்படாத. தமகலையை = தமோகுண அம்சத்தவள். (12)

ஓடுற மருந்தயின் றுறங்கல் போலுரை
ஆடிய சூண்மறந் தயர்ந்தி ருத்தலால்

நாடிநின் றனைத்தரற் கென்னை நல்லுமை
ஏடவிழ் மலர்குழா லேவினு ளென்றுள்.

(கு - ரை.) ஓடுற=வேகமாக ஓடுவதற்கு. நாடி நின்றனைத்தரற்கு=உன்னைத் தேடிப் பிடித்து வருவதற்கு. குழால்=கூந்தலை யுடையவளே.()

கதிரெழு பகலெனக் கண்டி டாதுதண்
மதியெழு மிரவென மனந்தெ ளிந்துதன்
திதியொடு நினைவுமோர் சிறித றிந்தனள்
விதியுண ரிறைமகள் விமலை சொல்லினால்.

(கு - ரை.) பகலில் பொருள்களை யறியாது இரவில் பொருள்களைக் காணுதல்போல என்க. திதி=ஸ்திதி; பழைய இருப்பு. விதி=நியாய நூற்கள். இறை=மமகாரன். மகள் விமலை சொல்லினால் சிறிதறிந்தனள் என்க. (14)

மூலகா ரணனெனச் சிலர்மொ ழிந்திடும்
மாலுமோர் மானிடப் பிறப்பில் வந்துதன்
சீலமோர்ந் திலனெனிற் சிறிய பேதைநான்
ஞாலமேன் மயங்குத லவிறல் வேண்டுமோ.

(கு - ரை.) மாலும்=திருமாலும். மானிடப் பிறப்பு=இராமாவதாரம். சீலம்=முன் உணர்வு. நவிறல்=பேசல். (15)

அல்லம ணியல்பெலா மறியப் பூந்துணர்
வல்லிநின் குமுதவாய் மலர்ந்து கூறெனச்
சொல்லிநின் றிணையடி தொழுத மாதொடு
வில்லுறழ் நறுநுதல் விமலை கூறுவாள்.

(கு - ரை.) பூந்துணர்=பூங்கொத்துக்களையுடைய. வல்லி=கொடி போன்ற விமலையே. மாதொடு=மாயையினுடன். (16)

கயிலையி னுமையொடு கண்ணு தற்பிரான்
செயலுறு மல்லமன் செய்தி கூறலும்
அயலுற விருந்துநா னறிந்து ளேனதை
மயிலியல் கேளென வகுத்தன் மேயினாள்.

(கு - ரை.) செயலுறும்=எல்லாச் செயலும் தனதாக உடைய. (17)

## வேறு

படியில் வள்ளி காவையெனும் பதியிற் றனக்கு நிகரில்லான்
ஒடிவில் கருணை நிராங்கார னென்னு முண்மைப் பெயரினான்
மடிவில் கற்பி னவன்றேவி மாசு தீர்ந்த சுஞ்ஞானி
கடிவின் மறையா கமவிதிகள் கண்ணுற் றறிய வொழுகுவார்.

(கு - ரை.) படியில்=இவ்வுலகில். பதியில்=ஊரில். ஒடிவில்=பழுதில்லாத. மடிவில்=அழிவில்லாத. கடிவில்=நீங்காத. (18)

மெய்மை சிவமே யல்லாத விரியு முலகம் பொய்யென்பார்
இம்மை மறுமை நிலையல்ல வென்ன நிகழ்ந்த கருத்தினோர்
செம்மை நெறியிற் புறமொடகந் திரியுங் கரணங் காமாதி [ர்.
பொய்மை வினையி லவர்குருநூல் பொருளாத் துணிந்து வீடுவப்பா

(கு - ரை.) புறமொடகம்=அகத்தும்புறத்தும். திரியும்=மாறும். கரணம்=மனம், புத்தி, சித்தம், அகங்காரம். காமாதி=காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம். (19)

மனைய ராகி யிருக்குநா ளில்வாழ்க் கையினின் றிடுதலால்
மனைய ரின்மை யானெஞ்சந் தளர்வான் போன்று நிராங்காரன்
மனையுந் தியான மில்லாத நெஞ்சு ஞான மில்லாத
மனையும் போலு மக்களிலா மிக்க வாழ்வென் றியம்பியே. (20)

அந்த வுலகிற் குதவியா யியன்ற தொழில்கள் பலசெய்யும்
மைந்தன் வேண்டு மெனநிற்போன் மக்கட் பதடி யாகுவான்
முந்த வுலகிற் காநினைப்போ னறங்கூர் மகனு மத்துவிதா
னந்த முதவு மகவிருப்போன் ஞானி யாகு மென்றெண்ணி.

(கு - ரை.) பதடி=பதர் போன்றவன். அந்த உலகம்=மறுமை யுலகம். மகவிருப்போன்=புத்திர இச்சையுடையவன். (21)

உடம்பைப் பொறியைக் கரணத்தை யுயிரைத் தானென் றுழலாமல்
முடங்கத் துறந்து தனையறிந்து பேதா பேத மென்னுமயல்
கடந்திட் டிருக்கும் பரமுத்தி காட்டும் புதல்வன் வேண்டுமென [ன்.
இடும்பைப் பிறவி நோய்தணிப்ப வெண்ணு மனததா னெண்ணினு

(கு - ரை.) பேதம்+அபேதம்=பேதாபேதம். இடும்பை=துன்பம்.

இரண்டோ டிரண்டு மூவிரண்டை யிரண்டா றிரண்டு மீமிசையெண்
இரண்டோ டிரண்டு கொண்டிருந்த விதழ்ப்பங் கயங்கள் கடந்துபோ
இருந்த குளத்தின் மேலோரா யிரந்தோட் டமல கமலமிசை [ய்
இருந்த சோதி தனைக்கண்டே மெண்ண முடிப்பே மெனவெழுந்து.

(கு - ரை.) மூலாதாரத்திற்கு-4; சுவாதிட்டானத்திற்கு-6; மணிபூரகத்திற்கு-10; அநாகதத்திற்கு-12; விசுத்திக்கு-16; ஆக்கினைக்கு-2; ஆக அமைந்தது இதய பங்கயங்கள் என்க. கடந்துபோய்=இந்த ஆறு ஆதாரங்களையும் வணங்கித் தாண்டிச்சென்று. குளத்தின்மேல்= (ஆக்கினைத் தானம் என்னும்) நெற்றியின் மேல்பட்ட. ஆயிரந்தோட்டு அமல கமலமிசை=1000 இதழ்களையுடைய (பிரம்மரந்திரமெனும்) குற்றமற்ற தாமரைமேல். எண்ணம்=(அத்துவிதாநந்தம் உதவும் மகவுபெறும்) நினைவு. ஓடு=எண்ணுப்பொருளது. (23)

இவரு மொருவ னுடனிருப்பும் வேண்டா தவத்திற் கென்பதொடு
தாருய் மனையுங் கொழுநனும்போய் வனத்திற் கமலா சனத்திருந்து

தேறூர் புனல்போற் றெளிந்தமனந் திறந்துந் திறவா விழியொடுதம்
பேறு மிட்ட லிங்கத்திற் பிறழா தமையும் படிவைத்து.

(கு - ரை.) வேறும்=அயலான. இருப்பும்=இருத்தலும். தவத்திற்கு வேண்டா என ஒட்டுக. என்பதொடு=என்பதற்கு; இதில் 'ஒடு' நான்காமுருபு மயக்கம். தேறூர்=தேற்றம் நிரம்பிய திறந்தும் திறவா விழி = சுழிமுனையோடு லலாடமத்தியை நோக்கும்நோக்கு. பேறும்= பயனை. (24)

தறிபோ லுடல நேரிருந்து தயங்கு மருங்கி னிருநாடி
நெறிபோய் மீளும் வளியதனை நிறுவி நடுநா டியிற்செலுத்தி
அறிவோர் சிறிதுஞ் சலியாம லன்னப் பெயர்மந் திரமாறிக் [ரால்.
குறிபோ யிருந்த வொருகுறியைக் குறித்துக் கொண்டங் கிருந்தன

(கு - ரை.) தறி=தம்பம். இருநாடி=இடை, பிங்கலை நாடிகள். வளி=காற்று. நிறுவி=கும்பம்செய்து. நடுநாடி=சுழுமுனைநாடி. அன்னப் பெயர் மந்திரம்=அம்ஸமநு. குறிபோய் இருந்த ஒருகுறி=அருவுருவான சிவலிங்கம். (25)

வாயு நிற்ப மனநின்று மனந்தா னிற்பப் பொறிநின்று
பாய பொறிக ணிற்பவிடர் படுபுன் புலன்க ணின்றனவால்
ஆய புலன்க ணின்றமையா லகிலந் தோன்று துள்ளத்தே
தூய பரமா னந்தபரஞ் சோதி தோன்றக் கண்டிருந்தார்.

(கு - ரை.) பாய=பரவிய. படுபுன்=புன்மைசெய். (26)

ஒருங்கு மனமோ டினையசிவ யோக சமாதி நவதிங்கள்
நிரம்ப விருந்த காலத்து நெற்றி மிசையிற் பரஞ்சோதி
திரண்டு குழவி யுருவாகிச் சென்று புறமுற் றிடவதனை
விரும்பு மிருவர் தாமுமுடன் விழிக டிறந்து கண்டனரால்.

(கு - ரை.) ஒருங்கு=ஒன்றுபட்ட; பேதியாத. நவதிங்கள்=ஒன்பது மாதம். நிரம்ப=பூரணமாக. புறம்=வெளியுலகில். (27)

வெம்மை யொழிந்து நிலத்திழிந்து விளங்கு கதிரோ பனிநீங்கி
எம்மை யாள வருமதியோ விடுமிந் தனங்க ளுகராத [வர்
செம்மை யொளிவான் பேரழலோ தெரியா தென்ன வொளிர்ந்தத
தம்மை யறியா வுவகையுளந் தழைப்பச் சோதி மதலையே.

(கு - ரை.) கதிரோ=சூரியனோ. இடும் இந்தனங்கள் நுகராத= இடுகின்ற விறகுகளைக் கொளுத்தாத. ஒளிர்ந்தது=பிரகாசித்தது. (28)

அலைந்து பிறப்பி லாங்கார வஞ்ஞா னிகளா மானிடரும்
மலிந்த சுரரு முனிவரு மற்றை யோரும் பெறுவரோ
தொலைந்த மாயை நிராங்கார சுஞ்ஞா னிகள்போன் மலவிருளை
நலிந்து வளர்சச் சிதானந்த நந்தா விளக்கா மதலையையே.

(கு - ரை.) 'பிறப்பில் அலைந்து' எனவும், 'மாயை தொலைந்த' என
வும் ஒட்டுக. நிராங்காரமும் அபரஞானமும் இயைந்த அமயம் பரஞானம்
உதித்தலின் நிராங்காரன் தேவி சுஞ்ஞானி யென்றமைத்தார். (29)

பேரா னந்தம் பிள்ளையாய்ப் பெற்ற வவர்க்கு விடயத்துள்
ஓரா னந்தம் பெற்றுடனே யொழியு முலகர் தம்மைநாம்
நேரா வியம்ப லாகுமோ நிகர்தாந் தம்மிற் றமென்று
வாரா ரிளமென் முகிழ்முலைநன் மடவா யுரைப்ப தன்றியே.

(கு - ரை.) பேரானந்தத்தை யென்க. விடயத்துள்=விஷயாதி
களுள். நேரா=ஒப்பாக. மடவாய்=மாயையே. 'பெற்ற அவர்க்குத்
தம்மில் நிகரென்று உரைப்பதன்றி, விடயத்துள் ஓர் ஆனந்தம் பெற்று
உடனே ஒழியும் உலகோர் தம்மை நேரா இயம்பலாகுமோ' எனக்கொண்டு
கூட்டுக. (30)

பண்டு பாசந் தபுசிலரும் பரஞ்சோ தியைத்தாந் தம்முள்ளே
கண்டு வாழ்வு பெறுநரலாற் கண்ணிற் காட்டு மவரில்லை
தொண்டு படுமிந் நிராங்கார சுஞ்ஞா னிகடம் முட்கண்டு
கொண்ட வொளியை யுலகுய்யக் குழவி யாக்கிக் காட்டினரால்.

(கு - ரை.) 'பெறுநர் அல்லால்' எனப் பிரித்துப் பொருளறிக. (31)

சங்குந் தெய்வ துந்துமியுந் தழங்க மலர்மா மழைபொழிந்த
எங்குந் திசைகள் விளங்கினகன் றீன்ற மலடு தறிதளிர்த்த
பங்கங் கலந்த புனறெளிந்த பதகர் மனமுந் தெளிந்தவருள்
பொங்குந் துறவர் மனமகிழ்ந்த புனிதன் மகவாய்த் தோன்றுநாள்.

(கு - ரை.) தழங்க=ஒலிக்க. மலடு கன்று ஈன்ற என்க. தறி=
பட்டமரம். பங்கம்=சேறு. பதகர்=பாவிகள். (32)

ஐயா மனத்து நிராங்காரன் ஞானத் திரளாம் பிள்ளைதனை
மெய்யா முளக்க ணன்றியுமிவ் விழியுங் காணப் பெற்றனமென்
றெய்யா வுவகைக் கடன்மூழ்கி யேறுன் மார்போ டுறத்தழுவிக்
கையா லெடுப்ப வெங்குநிறை கனவான் கனவா னொய்தாகி.

(கு - ரை.) விழியும்=புறக்கண்களாலும். எய்யா=இதுகாறும் எய்
தாத. ஏறுன்=கரை ஏறுதவனாய். கனவான் கனவான்=பெருமையினும்
பெருமையுடையான்; பாரத்தினும் பாரமானோன். நொய்தாகி=எளிமை
யாகி; இலேசாகி என இருபொருளும் பட நின்றது; சிலேடை. (33)

செவ்வாய் ஞான மயில்கொழுநன் செந்தா மரைத்தாள் வணங்குபுநம்
இவ்வாய் மகன தியல்புநீ யியம்பா யென்ன வவன்றெரிந்து
சைவா கமமு மாரணமுஞ் சாற்றற் கரிய நம்மகவை
எவ்வா றுரைப்ப னியான்மடவா யென்று வியந்து கூறுவான்.

(கு - ரை.) மயில்=மயில்போன்ற சுஞ்ஞானி. வாய்=வாய்த்த. ()

நாம்பார்க் குழவி யாகாம னம்பாற் குழவி யாயினுன்
தீம்பாற் கடலிற் றுயில்வோனுஞ் செந்தா மரைமே லுறைவோனும்
தாம்பார்க் கரிய வடிமுடியோன் றானே யைய மிதற்கில்லை
காம்பாற் புரிந்த தனையதோட் கனிவாய்த் தடங்க ணுயென்றான்.

(கு - ரை.) பார்க்குழவியாகாமல்=பூமியின்கண் இனியும் குழந்தையாக வராதபடி. காம்பால் புரிந்தனைய=மூங்கிலால் சமைத்ததுபோன்ற.

ஆன்ற மயல்செய் சையோகத் தன்றித் தவயோ கத்தினுல், ஈன்ற பொழுதிற் றன்மகனை யிருந்து சான்றோ னெனக்கேட்டுத், தோன்று முவகைக் கடற்படிந்தாள் சுஞ்ஞா னித்தாய் பசும்பொன்மலை, போன்று வளர்ந்து மருங்குன்மிடி போக்க வறியா விளமுலையாய்.

(கு - ரை.) மருங்குல்மிடி=இடைவறியதாம் நிலையை. இளமுலையாய்=மாயையே. "ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன் மகனைச் சான்றோன் எனக் கேட்ட தாய்" என்ற குறள் ஈண்டு பயின்றுளது. (36)

## வேறு

மத்த நெஞ்சக மோடுதம் மதியி னென்றை யறைந்திது
மெய்த்து றும்பொரு ளென்றதை வேத மாகம மோதுமென்
றுத்தி கொண்டுரை செய்தெதி ரொன்றை நிந்தைசெய் சமயர்தம்
பித்தை யல்லெனு மல்லமாப் பிரபு வெனும்பெய ரிட்டனர்.

(கு - ரை.) மத்தம்=மயக்கம். மதியில்=அறிவால். பித்தை அல் எனும்=மாற்றுக்கொள்கையை அல்லாதது என மறுத்துக் காட்டும்.

வினையி னுலொரு வன்றரு மேனி யாளன லாதொரு
மனித னுகிந டித்திடும் வடிவ னுதலி னல்லமன்
நினையு மாறு தவழ்ந்துபின் னின்று மெல்ல நடந்துபோய்
வனையு மாமணி மாளிகை மறுகி னுடல் பயின்றனன்.

(கு - ரை.) ஒருவன்=பரமன். மேனியாளனலாது=தேகமுடையவனுகாமல். வனையும்=அலங்கரிக்கும். (38)

வருக வெங்கட மாவியே வருக கண்ணுக ரமுதமே
வருக வெங்குல தீபமே வருக கேடறு செல்வமே
வருக பாச வினுசனே வருக ஞான வினேதனே
வருக வென்றனை யுளமகிழ்ந் திடவந்து மேல்விழு மல்லமன்.

(கு - ரை.) அனை=அன்னை; இடைக்குறை. (39)

மாயை யாலுள வாகிய வடிவு நாம மழித்துள
தாய வோர்பிர மந்தனை யறியு மாறறி வித்தல்போல்
மேய பேதையர் மணலமை வீடு தாள்கொ டழித்தனன்
போயு லாவுவன் மானிடன் போல வேவிளை யாடுவோன்.

(40)

(கு - ரை.) வடிவு நாமம்=உருவும் பெயரும்.

ணி யக்கி னியங்குறு ஞால மென்றறி வித்தல்போல்
ானு ருட்டுநல் வீதியிற் றமனி யச்சிறு தேரினை
ான டக்கரு நெஞ்சக மிதனை யொக்குறு மென்பது
பான மக்குயி ராயினேன் புதிய பம்பர மாடுமால்.

(கு - ரை.) இயக்கின் = அசைத்தால். சிறு தேர் = சிறு நடை
ண்டி. யான் அடக்கரும்=நான் எனும் முனைப்பை அடக்காத. (41)

டி யொன்றெதிர் கொண்டுதம் மான னங்தெரி வார்கள்போல்
டி யொண்குரு வெதிர்கொடு கொண்டு தன்பெரு விஞ்சைகள்
ாடி யொண்கலை கற்றல்போ னுட கம்பல செய்தனன்
டு றும்பழ மறைகளும் பேச ரும்புக ழாளனே.

(கு - ரை.) ஆனனம் = முகம். தெரிவார்கள் = பார்ப்பவர்கள்.
ள்=ஒள்ளிய. நாடி=ஆய்ந்து. பீடுறும்=பெருமிதமான. (42)

ந்தை தாயுள மின்புறத் தனது பேரரு ளாலிள
மைந்த னுகி யிருந்தொரு வால லீலை நடித்தருள்
ாந்தை தானுல கெங்கணு மெய்தி மக்கடம் வல்வினை
ந்து மாறு நினைந்திது செப்பன் மேயின னென்பவே.

(கு - ரை.) வாலலீலை=இளமைக்கண் விளையாட்டு. (43)

ங்கள் பாவனை யொருமையா லுருவ மாமக னுகிநான்
ங்கு மேவி யிருந்தன னினிந டந்துல கெங்கணும்
ங்கு மாதவர் முதலியோர் தங்க ளெண்ண முடிப்பனென்
றெங்க ளுத னியம்பவவ் விருவ ரும்புகல் கின்றனர்.

(கு - ரை.) பாவனை ஒருமை=ஒருமை நினைவு. (44)

றப்பெ னுங்கட லிற்படும் பீழை யேமுறு புணையனுய்
றப்பின் வீடெனு மொண்கரை துன்னு ருதமிழ் வேமெனு
றப்பி லாவிரு குரவரு மனமு ளைந்துரை செய்திடச்
றப்ப ஞான சிகாமணி தெளியு மாறுரை யாடினன்.

(கு - ரை.) பீழையேம்=குற்றமுடைய எங்களுக்கு. புணை=தெப்
ம். துறப்பில்வீடு=சிவசாயுச்யம். துன்னுரு து=சேராது. உளைந்து=
வருந்தி. (45)

ற்று நம்மை யகன்றிடேன் றளரன் மின்மன மென்றுநான்
சொற்ற தைய முமக்கெனிற் றுணியு மாகம வேதநூல்
ற்று ளோரை வினய்கிராங் கார ஞானிக டமையிவண்
ற்ற வல்லம னகல்வனே லுரைமி னென்றுணர் மின்களே.

(கு - ரை.) துணியும்=பொருணிச்சயம் செய்யும். ஞானி=சஞ்
ஞானி. (46)

என்று பொன்றுமிவ் வுடன்முத லியாவும் வேறென நீக்குபு
நின்ற தம்மில்வே றலனெனு நிலையை நின்றுதா தான்மியம்
ஒன்று றும்பரி சுரைசெயூ வுணரும் வண்ண முணர்த்தினன்
பின்ற லின்றிய வல்லமாப் பிரபு வெனுங்குரு ராயனே.

(கு - ரை.) நீக்குபு=நீக்கி. தம்மில்=தம்முள். தாதான்மியம்=ஐக்யம்; ஒன்றுபடுதல். பரிசு=தன்மை. உரைசெயூ=விரித்துக்கூறி. பின்றலின்றிய=பின்வாங்காத வெற்றியுடைய. (47)

தந்தை தாயில னாகிய தாணு வாகிய சங்கரன்
மைந்த னய்மக வில்லெனு மனவ ருத்தம கற்றவும்
முந்து தேசிக னாகினன் முத்தி நல்கவு மெய்தினோர்
இந்த மாதவ ரலதிலை யென்று மக்க டுதித்தனர்.

(கு - ரை.) தாணு=யாவற்றிற்கும் ஆதாரமான. சங்கரன்=இன்பமளிக்கும் சிவன். மாதவர்=நிராங்கார சுஞ்ஞானிகள். (48)

ஆத லாலெழி லல்லம னருளி னூறு கின்றது
வாத மாறுநன் முத்திதான் மலைத ருங்கொடி யறிதியென்
றோதி னானர னதுபொழு துடனி ருந்தன னென்றவண்
மேதை மாயை யறிந்திட விமலை கூறின ளென்பவே.

(கு - ரை.) வாதமாறும்=வாதித்தல் இல்லாத. மலைதருங்கொடி=பார்வதியே! அவண்=அவ்விடத்தில். மேதை=அறிவு. (49)

எள்ளி லெண்ணெ யெனப்பட ரிந்த னத்தெரி யென்னவாய்
விள்ளு மென்மலர் மணமென விரவி யெங்கணு நிற்பினும்
வள்ள லல்லம னன்பர்தம் மனம டைந்து விளங்குவன்
தெள்ளு மின்சுவை விம்முபா றிரண்மு லைக்கணி னொழுகல்போல்.

(கு - ரை.) இந்தனத்தெரி=விறகில் நெருப்பு. விள்ளும்=மலரும். விரவி=கலந்து. பால்=பாலானது. பால்முலைக்கணின் ஒழுகல்போல மனமடைந்து விளங்குவன் என்க. (50)

ஆறாவது

விமலைகதி முற்றிற்று.

கதி 6-க்கு திருவிருத்தங்கள் - 357.

ஏழாவது

# மாயை கோலாகலகதி

நல்லெழில் விமலையின் னணங வின்றிட
முல்லைவெண் ணகைவரு முயற்சி யெண்ணியே
புல்லுவ னவனையென் றெழுந்த போதினில்
அல்லம னகன்றமை யறியக் கூறுவாம்.

(கு - ரை.) முல்லைவெண்ணகை=மாயை; அன்மொழித்தொகை. (1)

முகிழ்மதி யணிபவன் முதல்விக் கோதிய
வகைபெற விமலைதான் வகுப்ப மாயைகேட்
டகநெகிழ் வுற்றுநா மல்ல மப்பெருந்
தகைதனை யடைவதெவ் வாறுசாற் றென்றாள்.

(கு - ரை.) முகிழ்மதி=பிறைத்திங்கள். வகுப்ப=வகுத்துக் கூற.
தகைதனை=தகுதியுடைய அல்லமனை. (2)

மழுவல முயரிய வள்ளல் வந்தனை
அழகுற வியற்றினை யாயி னல்லமன்
விழியெதிர் தோன்றிநீ மனத்து வேண்டிய
தொழிவற நல்குவ னுனக்கென் றோதினாள்.

(கு - ரை.) வலம் உயரிய=வலத்தின் உயர்த்திய. வள்ளல்=வரை
யிலா தளிக்கும் சிவத்தை. ஒழிவற=தவறுதலின்றி. (3)

முதல்விநீ யுரைசெயு முன்ன மேயருண்
மதுகைநா யகன்றனை வழிபட் டேத்தினேன்
அதுதரும் பயனிலை யறிந்து ளேனெனப்
புதுமயன் மூழ்கினாள் புலர்ந்து கூறினாள். (4)

வெருவற விவளக விழியி லாமையால்
பரசிவ பூசனைப் பயனி லென்றனள்
அரகர வென்றுகா தங்கை வைத்திஃ
துரைசெயும் விமலைதன் னுளங்க லங்கியே.

(கு - ரை.) வெருவற=அஞ்சுதலின்றி. அகவிழி = ஞானக்கண்.
அங்கை = உள்ளங்கை; 'அகமுனர் செவிகைவரி னிடையன கெடும்'
என்பது நன்னூல். விமலைகலங்கி உரைசெயுமென்க. (5)

பயனிலை யருச்சனை பயின்று மென்றனை
அயனரி முதலிய வமரர்க் காயினும்
நயமொடு சதாசிவ நாதன் பூசனை
முயலுத லன்றியோ ரெண்ண முற்றுமோ.

(கு-ரை.) பயின்றும்=பலநாள் செய்தும். சிவபூஜை அவசியம் வேண்டும் என்பது அறிவுறுத்தப் பெற்றமை யோர்க. (6)

வாசவ னரியயன் வான நாட்டுளோர்
பாசமின் முனிவரர் பலரு மண்ணிடைப்
பூசனை விதிமுறை புரிந்த வாலயம்
காசணி யல்குலாய் காண்கி லாய்கொலோ.

(கு-ரை.) பாசம்=ஆணவம், மாயை, கன்மம் என்பன. (7)

மலைமகள் சூரர மகளிர் பாற்கடல்
அலைமகண் முனிவரில் லறக்கி ழத்தியர்
கலைமகள் விழிநுதற் கடவுட் பூசையால்
நிலைமைக ளடைந்தமை நினைந்தி லாய்கொலோ.

(கு-ரை.) மலைமகள்=பார்வதி. சூரர மகளிர்=தேவமகளிர். அலைமகள்=திருமகள். நுதல்விழி என ஒட்டுக. (8)

சித்தியு மாயுளுஞ் சிறப்புங் காமிய
புத்திய ரடைவரப் புத்தி நீக்கினோர்
முத்தியை யடைவரெம் முதல்வன் பூசையால்
சத்தியஞ் சத்தியந் தளர்ம ருங்குலாய்.

(கு-ரை.) சித்தி=அணிமா, மகிமா, லகிமா, கரிமா முதலிய எண்வகைச் சித்திகள். காமியபுத்தி=இம்மை மறுமைப்பயன் விரும்பி வழிபாடு செய்யும் அறிவு. புத்தி நீக்கினோர்=நிட்காமியர். (9)

பீடுறு மானிடப் பிறப்பு வாய்த்துநல்
ஏடவிழ் மலரிறை விறையைப் பூசியார்
பாடமை நாளெலாம் பாழ்க்கி றைப்பவர்
மூடரை யெண்ணுங்கான் முந்தி நிற்பரே.

(கு-ரை.) பீடு=பெருமிதம். முந்தி நிற்பர்=முதன்மையாவர். ()

காம்படு தோளிமுக் கண்ணன் றண்மலர்
தேம்படு மலர்கொடு பூசை செய்பவர்
பாம்பொடு பழகிலாப் பரம னென்றவர்
பூம்பத மனமகிழ்ந் துலகம் போற்றுமே.

(கு-ரை.) காம்பு அடு தோளி=மூங்கிலை வென்ற தோளினையுடைய மாயையே. தேம்=வாசனை; தேனும் ஆம். (11)

நோய்ப்பிறப் பிலாதகண் ணுதலைப் பூசியா
வாய்ப்புறத் தலைக்கொரு மதிபெ றுநரா
ஞய்ப்பிறப் புற்றதி னறிஞ ரெள்ளுறு
நாய்ப்பிறப் பாற்றவு நன்று நன்றரோ.

(கு - ரை.) நோய்ப்பிறப்பு = துன்பத்தைச் செய்யும் பிறப்பு. ...ியா=பூசித்து; வழிபட்டு. 'தலைக்கொருமதி வாய்ப்புறப் பெறு' என்க. ...லைக்கொரு மதிபெறல்=சிவசாரூப்யம் அடைதல். நராய்=மனிதனாக. ...ன்று நன்று=இழிவை உணர்த்தும் குறிப்பு அடுக்குத் தொடர்மொழி. ()

பொருவிலி யாகமம் புகன்ற மந்திரக்
கிரியைகள் வழுவறக் கிளக்கு நல்லருள்
குருபர னருளினாற் கொண்டு செய்குநர்
பரசிவ பூசனைப் பயனை நண்ணுவார்.

(கு - ரை.) பொருவிலி ஆகமம் = ஒப்பில்லாத சிவபிரானருளிய ...ஆகமங்கள். வழுவற=குற்றமில்லாதபடி. (13)

அண்ணலைம் முகங்களு மருளு மாகமம்
நண்ணிய விதிமுறை நன்கு செய்யினும்
எண்ணரு மன்புளத் தில்லை யேயெனில்
பண்ணிய பூசனை பயன்ற ராதரோ.

(கு - ரை.) அண்ணல்=சதாசிவன். ஐம்முகம்=ஈசானம், தற்புரு...ம், வாமம், அகோரம், சத்தியோசாதம் என்பன; இருபத்தெட்டாக...ங்களும் இந்த ஐந்து முகங்களிலிருந்தே வெளியாயின என்க. (14)

பூசைசெய் தன்னையும் பூசிக் கப்படும்
ஈசன தியல்பையு மிறைவன் பூசைசெய்
ஆசறு பொருளையு மறிவ றிந்துயர்
தேசிக னருளினாற் றெளிய வேண்டுமால்.

(கு - ரை.) ஆசறு=குற்றமற்ற. பொருளையும் = பூசாத்திரவியங்...களையும். அறிவு அறிந்து உயர்=அறிவனவற்றை ஆய்ந்து உயர்ந்த. (15)

மந்திர தந்திர வழுக்கள் வந்தவோ
சிந்தனை புறவிட யத்திற் சென்றதோ
பைந்தொடி பூசனை பயனி லென்றுநீ
நிந்தனை செய்ததென் னிகழ்த்து வாயென்றாள்.

(கு - ரை.) மந்திர தந்திரங்கள் ஜெபிப்பதில் குற்றங்கள் நேர்ந்...தனவோ என்க. பயனில்=பிரயோஜனம் இல்லை. (16)

என்றுநல் விமலைமா தியம்பப் பூசையால்
வென்றிகொ ளல்லமன் விழியிற் றோன்றிய
நன்றியை யறிந்தில ணழுவி நிற்றலால்
வன்றுயர் மனமுற மாயை கூறுவாள்.

(கு - ரை.) நன்றியை=உபகாரத்தை. நழுவி நிற்றல்=தன் கைக்கு அகப்படாமல் தவறி நிற்றல். (17)

## வேறு

ஒன்றையு முணர்கி லேனு னெங்குரு வுரைத்த வாற்றல்
இன்றள விலிங்க பூசை யியற்றியும் பயனென் றில்லை
என்றனள் பருவ முற்றோர்க் கிருமுறை யுபதே சிப்ப
தன்றிவன் மனிதர்க் கோதி னதுபயன் படுவ துண்டோ.

(கு - ரை.) எம்குரு=எமது குருவான அகங்காரன். பருவம்=பக்குவம். வன்மனிதர்=அபக்குவர். ஓதில்=உபதேசித்தால். (18)

நெறிபல முறையு ரைத்து நினைந்தில ளதனை யந்தோ
மறுகுறு மனத்த ளாகி மாயைமால் கொண்டி ருந்தாள்
அறிவிலர்க் கறிவிப் பார்தா மறிவிலா ராவ ரென்று
வெறிமலர் வணர்வார் கூந்தல் விமலைதன் மனந்த ளர்ந்து.

(கு - ரை.) மறுகுறல் = கலங்கல். மால் = அறிவின் மயக்கம். வெறி=மணம். வணர்=பூங்கொத்து. (19)

இவண்மனங் கவன்றி ருந்த திதனைநா னறிவ லென்று
குவிமுலை விமலை சொல்வாள் கோற்றொடி மடந்தாய் நின்மேல்
அவிழ்மல ரம்பு பட்ட தாயிருந் தன்றெ னக்கு
நவிலுதி மறையே லன்னை நகமக ளாணை யென்றாள்.

(கு - ரை.) கவன்றிருந்தது = கவலைமிக்கிருக்கின்றது. கோல் தொடி=அழகிய வளையணிந்த. பட்டதாயிருந்தன்று=பட்டிருக்கின்றது. அன்னைநகமகள்=(யாவர்க்கும்) அன்னையாகிய பார்வதியின். (20)

ஆணையை வெருவி மாயை யம்பலத் தாடா நின்ற
தாணுவு முளம்வி ருப்புந் தண்ணுமைத் தொழிலான் கண்கட்
கூணெனு மழகின் மிக்கா னொருவன்வந் தனனன் னானைக்
காணலு மெனைநான் காணே னென்றனள் கற்றோர் போல.

(கு - ரை.) தாணுவும்=இறைவனும். கண்கட்குஊண்=கண்களால் அநுபவிக்கும் உணவு. கற்றோர்=கற்ற ஞானியர். (21)

அல்லம னனைய னுமம வன்றனக் கலதென் னெஞ்சக்
கல்லுரு குறுது முக்கட் கடவுளுக் கன்றி மேரு
வில்லுரு வாவ துண்டோ விளங்கிழாய் நின்னைக் காணும்
நல்வினை யொன்றி ருப்ப நானுயிர் தரித்தே னென்றாள்.

(கு - ரை.) வில்உரு=வில்லின் வடிவம். (22)

நீநவி லல்ல மன்வே னெடுங்கண்வா ணுதன்ம டந்தாய்
நானவி லல்ல மன்றா னச்சுமுன் றனக்குத் தக்க
மானிட வடிவங் கொண்டு வந்தனன் போலு மன்னன்
ஞானநல் விழியி னன்றி நயந்துதன் னுண்மை காட்டான்.

(கு - ரை.) நச்சம் = விரும்பும். தக்க=காமியபக்திக்குத் தகுந்த. ந்து=விரும்பி. உண்மை=மெய்வடிவம். (23)

ன்ன நல் விமலை கூற விலங்கிலை நெடுவேற் கண்ணி
ன்னிக ரல்ல மன்சச் சிதாநந்த சம்பு வென்றாய்
ன்னவ னலனி வன்றான் மத்தள வல்ல மன்காண்
ன்னொடு பின்ம யங்க மொழிந்தனை யணங்கே யென்றாள்.

(கு - ரை.) இலங்கிலை=பிரகாசிக்கும் அரசிலைவடிவமான. கண்ணி= னகளையுடைய மாயை. (24)

ண்டிய வடிவங் கொண்டு வேண்டிய வாறு செய்யும்
ண்டரு ளல்ல மற்கீ தாமென்று மாகா தென்றும்
ாண்டரு கினது நெஞ்சாற் குறித்திடப் படுவ துண்டோ
ண்டிக ழிளமென் கொங்கைப் பொற்றொடி யென்று சொன்னாள்

(கு - ரை.) ஆண்டுஅருள் = (யாவரையும்) ஆட்கொண்டருளும். =இச்செயல். கோண்டரும்=கோணலான; மாறுபட்ட. குறித்திடப் வதுண்டோ=உணரப்படுவது கூடுமோ; ஓ=எதிர்மறைவினா. (25)

ருக்கநின் னுடனு ரைத்த றகாதினி யரங்கி லென்றன்
ருத்துறு மனையன் றன்னைக் காட்டுவல் கண்டு நீபின்
ரைத்தரு ளினைய னென்ன வுணர்ந்தறி வரிய னென்று
ரித்தவ னாயி னன்னான் றிறலினைக் காண்ப லென்றாள்.

(கு - ரை.) தருக்கம்=வாதப்போர். அரங்கில்=நடன சபையில். ணர்ந்து அறிவரியன்=(கலைகளால்) உணர்ந்து அறிதற்கு அருமையா னன். தெரித்தவனாயின்=(நீ முன்) கூறிய அல்லமனாயின். (26)

ண்டுகொண் மணியின் றன்மை காட்டுதற் கறிந்து ளோரைக்
காண்டுசெல் பவர்போல் வந்த கோதையை யுடன்கொண் டேகிப்
ண்டுதன் பூசைக் கெய்தும் பரிசுபோன் மகளிர் சூழத்
தாண்டையங் கனிவாய் மாயை சுடர்மணிக் கோயில் புக்காள்.

(கு - ரை.) தன்மை=தகுதியை. காட்டுதற்கு = தெரிந்து கூறு ற்கு. கோதையை=விமலையை. தொண்டையங்கனி=ஆதொண்டைக் னிபோன்ற. (27)

ருச்சனை முன்பு போனன் ருற்றுப் மதுகை நாதன்
ருச்சர ணங்கள் போற்றிச் சேயரி நெடுங்கட் செவ்வாய்
ரைத்துணர் மலர்மென் கூந்தல் விமலைமா தோடும் வந்து
ருத்தமண் டபம்பு குந்தா ணிரைவளைத் தளிர்க்கை மாயை. (28)

ல்லம ரிவர்தாந் தாமென் றறிதர வறிதி ராமல்
சால்லுக வெனவ டிக்குந் தோற்றம்போன் மத்த ளத்தை
ல்லவ னறைத லோடு மாயைநெஞ் சூச லாடச்
ல்லரி மணிச்சி லம்பு சிலம்புற வாடு கின்றாள்.

(கு - ரை.) 'இவர்தாம் இவர்தாம் அல்லமர் என்று' எனக் கூட்டுக. வறிதிராமல் = சும்மாஇராமல். தோற்றம்=காட்சி. வல்லவன்=மத்தளிகனாய்வந்த அல்லமன். சில்லரி=குளிர்ந்த முத்துக்களை உள்ளிட்ட மணிச்சிலம்பு=இரத்தினச்சிலம்பு. சிலம்புற=ஒலிக்க. (29)

முன்னுற நின்ற ஞான மூர்த்திமேல் விழியு மார்த்துப்
பின்னுற நின்ற மூர்த்தி மான்மிசைப் பெயரு நெஞ்சு
மன்னுற விருத்தி நின்று மாயைதா னடித்தாள் கண்டோர்
தன்னய னமுமா னெஞ்சுந் தன்மிசை வந்து வீழ.

(கு - ரை.) ஆர்த்து = மத்தளங்கொட்டி. மூர்த்திமான்மிசை= அல்லமனிடத்தில். பெயரும்=பெயர்ந்துசெல்லும். மன்னுற இருத்தி= நிலைபெற வைத்து. மால் நெஞ்சம்=மயங்கிய மனமும். (30)

அரத்தம துறுப ளிங்கா யமதர் மழைக்கண் மாயை
கருத்துறு காமந் தன்பாற் காணுறத் தோன்றி நின்றான்
வருத்துறு செயல்கொண் மாயை மருவிய குணம டுத்துப்
பரத்தினிற் றோன்று மென்று பகர்வது முண்மை யன்றே.

(கு - ரை.) அரத்தம்=செந்நிறம். கருத்துறு காமம்=உள்ளத்தி லுற்ற ஆசை. 'மாயை காமம் அரத்தமதுறு பளிங்காய்த் தன்பால் காணுறத் தோன்றி நின்றான்' என்க. மாயை=மாயையினிடத்து. அடுத்து= சேர்ந்து. பரத்தினில்=பிரம்மத்தில். கண்ணாடி அடுத்தது காட்டுதல் போல் பிரம்மமும் மாயையின் காரியத்திற்குத் தக்கபடி காரிய அல்லமனாய் நின்றதென்க. (31)

கூத்துக்குப் புகுந்த நம்பி கொட்டுக்கு நாணு றாமல்
சீர்த்தப்பு நடந வின்று சிந்தைவே றாகி நின்றாள்
வார்த்தைக்குட் படாத ஞான வாரியை வாயாற் சொல்ல
மூத்துக்கு மதியை வென்ற முகத்தியர் குழாத்து ளாணி.

(கு - ரை.) கூத்துக்கு=(மன்றின் ஆட்டோடு மாயையை) ஆட்டுவித்தலுக்கு. நம்பிகொட்டுக்கு=அல்லமரது மத்தள ஒலிக்கு. சீர்தப்பு=சதி தவறிய. நவின்று=செய்து. மூத்துஉக்கு=முதிர்ந்து குறைந்த. 'கொட்டுக்குச் சீர்தப்பு நட நவின்று நாணுறாமல் ஞானவாரியை வாயால் சொல்ல நாணிச் சிந்தை வேறாகிக் குழாத்துள் நின்றாள்' என முடிக்க. (32)

கையொடு செல்லா நின்ற கடைக்கணான் மாயை காட்ட
ஐயனை விமலை கண்ணாற் றதிசய முடைய ளாகி
வையக மதனின் மிக்க மனிதரு ளிளையன் போல
மெய்யழ குடையான் றன்னை வேறுகண் டிலனென் றுள்ளி.

(கு - ரை.) உள்ளி=நினைத்து. (33)

ாரு மலம னேயிவ் வடிவுகொண் டவள்செய் பூசைப்
ரு ஞதற்குற் ருனே பெருந்தவத் தாற்பி றந்த
ஒருரு மகனே வென்று விமலையை யத்த ளாகித்
ிில ணிற்ப மாயஞ் செய்துநின் றனனெனங் கோமான்.

(கு - ரை.) மால்தரும்=(மாயைக்கு) மயக்கத்தைச் செய்யும். (34)

ில்லே லேயினிற் சேய்மைத் தடக்கொரு வனைக்கண் டன்னன்
மவுற வருதல் போத லேயமுற் றறியார் போல
லனே விகாரி யென்று நிகழ்நிரு விகாரி யென்றும்
லேயே மயங்கு மென்னின் மாயையை வெறுப்ப தென்னே.

(கு - ரை.) தமம்=இருள். வேலே=காலம். சேய்மைத்தடத்து=
ட தூரத்தில். விகாரி=விகாரமுடைய மனிதன். நிருவிகாரி=
காரமற்ற இறைவன். விமலேயே=(கருவாய்ப்படாத) விமலேயே. (35)

நிலே கோலாற் காணு நீர்மைபோ லிங்கு நின்றேன்
ர்நிலே மாயை தன்னற் றெளிவுற வறிவ லென்ன
ர்நிலே வடிவ மாயைக் கினையனே யலம னென்று
ர்நிலே முலேம டந்தை வடிக்கணற் காட்டி னாளால்.

(கு - ரை.) நிலே=ஆழம். கோல்=அளவுகோல். எர்நிலே=அழ
ன் நிலேயமான. வடிக்கணல்=கண் சாடையால். (36)

ண்ணினற் கேட்குஞ் சீர்சால் கங்கணத் திறைவன் முன்னர்
ண்ணினற் குமரர் நெஞ்சக் கட்டவிழ்த் தாடு வாட்குக்
ண்ணினற் கூறவந்த கயிலேமா தறிந்தா ளன்னள்
ண்ணினற் கண்டு ஞானக் கண்ணினற் காண்பான் றன்னே.

(கு - ரை.) கண்ணினல் கேட்கும் சீர்சால் கங்கணம்=கட்செவி
ன்னும் பாம்பாகிய கங்கணம். நெஞ்சக்கட்டு=மன உறுதி. கயிலே
து=கயிலேயிலிருந்து வந்த விமலே. ஆடுவாட்கு=ஆடும் மாயைக்கு.
மலே மாயைக்கு அல்லமனைக் கண்சாடையாற் காட்ட, ஞானக்கண்ணல்
ணப்பெறும் பரனே அம்மாயை ஊனக்கண்ணல் கண்டறிந்தா ளென்க.

ல்லிதன் மனத்திற் காம மாய்ந்துவண் கயிலேக் குன்றில்
சால்லிய கூனெஞ் சத்திற் றேன்றலுஞ் சுழன்று டிப்போய்
ல்லமன் மீது வீழ்வா ளாகமேல் வீழ்ந்து பற்றிப்
ல்லிய நினைந்து சென்றாள் புல்லிய நெறியி னின்றாள்.

(கு - ரை.) வல்லி=மாயை. மாய்ந்து=ஒழிந்து. வீழ்வாளாக=
ழ்கிறவள்போல். புல்லிய=அணேய. அடுத்த புல்லிய என்பது, அற்பமான
னும் பொருண்மையிற் பயின்றமை காண்க. (38)

ண்டன னவள்க ருத்தைக் காரிகை மனத்திற் காமம்
ண்டல முணரக் காட்டி வழிக்கொள்வ லென்று ளத்தில்

கொண்டுகை தவறி வீழ்ந்த குடமென மத்த ளந்தான்
விண்டுக வெறிந்து போகட் டோடினன் விரைந்து வீரன்.

(கு - ரை.) மண்டலம்=உலகம். வழிக்கொள்வல்=செல்வேன். விண்டு உக=உடையுமாறு. எறிந்து போகட்டு=வீசிப் போட்டுவிட்டு. (39)

இத்தனை யாட்ட மெல்லா மிவட்கித ணுலென் றெண்ணி
மத்தள மதனை வீசிப் போகல்போல் வள்ளல் போகப்
பித்தடைந் தனன்கொ லென்று பித்துறீஇ மாத ரெல்லாம்
கைத்தளிர் விரன்மு டக்கிக் கவுளடி வைத்து நின்றார்.

(கு - ரை.) கவுள்அடி=தம் கன்னத்தின் கீழ். (40)

பறையடித் தின்று காறு மறைத்தவிப் பாவை செய்கை
பறையுடைத் தொழிந்து காளை பாரெலா மறியச் செய்தான்
கறையடிக் களிநல் யானைக் கருங்குழற் சீற்றத் துப்பின்
இறைமகட் குயிர்நி லாதென் றிருளையர் மனமு ளைந்தார்.

(கு - ரை.) 'செய்கையை' என்க. ஒழிந்து=நீங்கி. கறை=உரல். கரும்=கருமையுடைய. சீற்றத்துப்பின்=சினத்தையும் வன்மையையுமுடைய. இருளையர்=தோழியர். உளைந்தார்=வருந்தினர். (41)

சிலைமத னின்று செய்யுஞ் செருவினுக் கன்றி வெள்ளி
மலைதனி லியம்பு மாற்றம் வழுவிற்றென் றுளம ழிந்தாள்
கலவிசெய் தலைவ னீங்கக் கைப்பொருட் கழுதி ரங்கும்
முலைவிலை மகளிர் போல முத்தவா ணகைப்பொற் கொம்பு. (42)

மாலைவாய் மரையே போலு மாயைவாண் முகத்தைக் கண்டு
வேலுலாங் கருங்கட் செவ்வாய் விமலைமா தவளு ளத்தில்
சாலுமா ரஞர றிந்து தடங்கணுய் தளரே னீநின்
சீலநா யகன்போந் தேத்துந் தேடிநாங் காண்போ மென்றாள்.

(கு - ரை.) மரை = தாமரை; முதற்குறை. அஞர் = துன்பம். தேத்தும்=இடத்தும்; தேயத்தும் என்பதன் இடைக்குறை. (43)

சிலைநுதல் விமலை சொல்லாற் றெளிந்துள மிறையை நோக்கிக்
கலைதொட ருழைபோன் மாயை காட்டினிற் றொடர்ந்து போனாள்
மலர்தொட ரளிகள் போல மாயையைத் தொடர்ந்து சென்றார்
கொலைபடு மயில மர்த்துக் குழைபொரு தடங்க ணல்லார்.

(கு - ரை.) கலை=ஆண் மானை. உழை=பெண் மான். அளிகள்=வண்டுகள். அயில் அமர்த்து=வேலோடு போரிட்டு. குழை பொரு தடங்கண் நல்லார்=காதளவோடிய கண்ணுடைய மகளிர். (44)

மெய்த்தவம் பயின்று பெற்று வேந்தர்க்குங் கொடாமன் முக்கண்
அத்தனுக் கென்று வாளா வரசன்வைத் திருந்த பாவை

ளி கன்பின் போனண் மகடனை யந்தோ வாண்டு
ன்மேல் வைத்தி ருத்தல் பாவமென் றிகழ்ந்தார் கண்டோர். ()

ழும் பழியு நல்கும் பல்வகைப் புகழ றங்கள்
வயு மழிக்கு மெய்து மின்பமு மதனு லெய்தும்
புநன் மரபுஞ் செய்யு நோன்புநல் லொழுக்கு மேண்மை
மெண் ணுறுமனிற்குந் தயங்குபுன் காம மென்பார். (46)

## வேறு

பஞ்சின்மேன் மிதிப்பினும் பதைப தைக்குமென் பதங்கள்
அஞ்சு றுள்பரன் மிதிப்பதை நீருண வவாவாள்
விஞ்சு ஞாயிறு முதிர்கதிர் வெதுப்பினை வெருவாள்
நெஞ்சி யோகிமே லிருத்தியந் நிரைவளை சென்றாள்.

(கு - ரை.) பரல்=பருக்கைக் கற்கள். யோகி=அல்லமன். அவா
=விரும்பாள். விஞ்சு=மிகுந்த. கதிர்=கிரணங்கள். (47)

காம வெந்தழ லானுடல் வெந்துளங் கரிந்த
கோம டந்தைய லாலலை மேல்வரு குளிர்தண்
பூம டந்தையப் பாலையிற் போமெனிற் புனலில்
தாமி ளங்கயல் சுடுமணல் வீழ்ந்தெனத் தளரும்.

(கு - ரை.) அலை=கடல்; தொழிலாகு பெயர்; உறுப்பாகக்கொள்
சினையாகு பெயர். குளிர்தண்=மிகக் குளிர்ந்த; மீமிசைச்சொல்.
ந்தை=திருமகள். பாலையில்=பாலை நிலத்தில். தாம்=தாவும். (48)

பான லங்கருங் கண்ணிபோ கியகொடும் பாலை
யானை தன்புழைக் கைநிகர் துளியிடை விடாமல்
வான நின்றுபெய் யினுந்தழற் பட்டவல் லிரும்பின்
மேன கந்தெறி திவலைபோற் சுவறுறும் விரைந்து.

(கு - ரை.) பானல்=நீலோற்பலம்போன்ற. புழைக்கை=துதிக்
மேல்நகந் தெறிதிவலை=நுனி நகத்தால் தெறித்த நீர்த்துளி. சுவ
ம்=வற்றிப்போகும். (49)

மால ருந்திய போதுதன் வயிற்றிடை யிராதிப்
பாலை யன்றுட னுமிழ்ந்தில னுகின்மெய் பதைத்து
வேலை யின்றலை வீழ்ந்தத னுலுமுண் வெண்ணெ
யாலும் வெந்தழ றணிந்துயி ருய்குவ னலனே.

(கு - ரை.) மால் = திருமால். அருந்தியபோது = இவ் வுலகை
ண்டகாலத்து. இப் பாலை=இந்தப் பாலை நிலத்தை. உடன்=உடனே.
லையின் தலை=பாற்கடலிடத்து. வெம்தழல்=வெம்மைத் தீ. (50)

நாயி னுவினீர் சிறுமுயற் குருளைக ணக்கும்
தீய பாலையிற் றனைமறந் தவசத்திற் சென்ற

மாயை மாதுபின் றொடர்ந்துசென் மலர்முக மாதர்
வாயி னீரறீஇக் கண்கணீர் சுரந்தன வந்து.

(கு - ரை.) நாவின் நீர்=நாவிலூறு நீரை. குருளைகள்=குட்டிகள். தீய=அத்துணைக்கொடிய. நீரறீஇ=நீர் வற்றி. 'சுரந்து வந்தன' என்க. (51)

கான னீரெனச் சிறிதிடங் கடிதுசென் றிளைப்பார்
மான ஞர்சிலர் வாய்க்கடை நாவினுல் வருடித்
தானை யோர்கர முகத்தெதி ரசைத்துமெய் தளர்வார்
வேனி லாகொடி தென்றுதம் விதியினை வெறுப்பார்.

(கு - ரை.) கானல்=(மிக்க வெப்பத்தால் நீர்போல் தோற்றும்) பேய்த்தேர். வாய்க்கடை = கடைவாய்; இலக்கணப்போலி. தானை= சேலையின் முன் பாகத்தை. கரம் = கையால். அசைத்து = வீசி. வேனில்ஆ கொடிது எனப் பிரிக்க. (52)

மாத ரிவ்வணந் தொடர்ந்துபின் வரவெழின் மாயை
பாத தாமரை வருந்தின பாலையு ணடந்தவ்
ஆதி நாயகன் றனைமறித் துதவிசெய் தறன்மெல்
ஓதி யோடுற வாவமென் றுழைகண் முன்னோடும்.

(கு - ரை.) மறித்து=மடக்கி. அறன்மெல் ஓதியோடு=கருமணல் போன்ற கூந்தலையுடைய மாயையினுடன். உழைகள்=மான் கூட்டங்கள். உறவு ஆவம் என்று எண்ணி என்க. மான்கள் வெருண்டு ஓடலை இங்ஙனம் உபசரித்தார். (53)

கூந்தன் மேல்விரி முகிறரக் கோபம்வாய் காட்ட
ஏந்து கொங்கையின் வடமலை யருவியை யேய்ப்பக்
காந்த ளங்கைக டரவருங் காரெனக் கலாபம்
வாய்ந்த மஞ்ஞைகண் மகிழவந் தனள்பெரு வனத்தில்.

(கு - ரை.) முகில்தர = மேகங்களின் தோற்றத்தை அளித்தலாலும். வாய்கோபம் காட்ட = உதடுகள் இந்திரகோபப் பூச்சியின் தோற்றத்தைக் காட்டலாலும். வடம்=முத்துமாலைகள். ஏய்ப்ப=ஒக்க. அம்கைகள் காந்தள்போலிருத்தலாலும். வரும்கார் என=வருகின்ற கார் காலம் இதுவென்று எண்ணி. கலாபம்=தோகை. மஞ்ஞைகள்=மயில்கள். இது உருவகவணி. (54)

சிங்க முங்கரி யும்பணி செயத்தவஞ் செய்யூ
அங்கு றுந்தவர் மாயைதன் முலையிடை யாமா
தங்க முஞ்சிறு சிங்கமுங் கண்டுளந் தளர்ந்து
பொங்கு றுந்துய ரோடெழுந் திரிந்துபோ யினரால்.

(கு - ரை.) பணிசெய=தமக்கு ஏவல் செய்ய. செய்யூ=செய்து முலை இடையாம்=முலையும் இடையுமாகிய. மாதங்கமும் சிறு சிங்கமுங்

=பருத்த யானையையும் சிறுத்த இடையையுமுடைய சிங்கத்தையுங்
. இரிந்து=சிதைந்து. இது நிரல் நிரையே மூலே யானையையும்
சிங்கத்தையும் உணர்த்தின உருவகவணி என்க. (55)

கொடிய வாள்வரி வேங்கையைக் கண்டமான் குழாம்போல்
நெடிய வார்சடை முனிவரர் கலங்குறு நிலேயும்
தொடியு லாவுமென் றோண்மட வார்வரு துயரும்
முடியு மாறருள் செயநினேந் தனனருண் மூர்த்தி.

(கு - ரை.) வாள்=அரிவாள்போன்ற. (56)

மாயை போகவோர் கணத்தினிற் றுரப்பனீர் மனத்தில்
நோயு றீரென வொருமுனி போனின்று நுவன்று
தூய மாதவர்க் கருள்செய்து தொல்லேநல் லுருவாய்த்
தேயு நுண்மருங் கணங்கெதிர் தோன்றினன் சிரித்து.

(கு - ரை.) துரப்பன்=துரத்துவேன். நோயுறீர்=துன்பம் அடை
யின்; நின்று (வந்து) நின்று. தொல்லே=பழைய. (57)

பொங்கு மாரழல் வெஞ்சுரம் புக்கபூ வையர்க்குக்
கங்கை யாறெதிர்ந் தாலெனக் கண்ணெதிர் தோன்றும்
எங்க ளுயகன் றிருவடித் தாமரை யிணையைத்
தங்க ளாகுலந் தீர்ந்துமெய் குளிர்தரச் சார்ந்தார். (58)

பெருக ளற்றினி லழுந்தியங் கெழுபவன் பிடித்த
கரநெ கிழ்த்துவிட் டகல்பவன் போலிளங் காளாய்
விரைம லர்க்கணே பட்டுள ளையுமெல் லியலே
யருள றத்துறந் தனேயென்கொ லென்றன ரவர்தாம்.

(கு - ரை.) அளற்றில்=சேற்றில். கரம்=கையை. இளங்காளாய்=
மையான அல்லமனே. அருளற=கருணேயின்றி. (59)

பற்றி யாயிடை விடுத்தது நீயிரே பற்றி
இற்றை நாளுமை விடுத்திலே னிதனேயிவ் வுலகம்
முற்று மோதுறுந் தம்பிழை மொழிகுந ருளரோ
குற்ற நாடியே திலரிடை கூறுந ரல்லால்.

(கு - ரை.) ஆயிடை=அவ்விடத்தில். இற்றைநாள்=இன்றளவும்.
லாரிடை = பகைவரிடை; யாதொரு தொடர்புமில்லாதவரிடத்து
னுமாம். நாடி=தேடி. (60)

என்ன வோதலு மல்லம னேந்திழை மடவார்
மன்னன் மாமகண் மனத்தெழு காமநோய் வளரும்
முன்ன நீமுனி யாதிருந் தின்றுதான் முனிந்தாய்
என்னே யேறவிட் டேணியை வாங்கினே யென்றார். (61)

தொல்லை நின்றிரு மேனிபோ லுள்ளமுந் தூய்தாய்
நல்லை யென்றுனை நம்பினேன் வஞ்சக நடிப்பு
வல்லை யென்பதை யறிந்திலே னெனவன் சொல்
சொல்லி நின்றனண் மாயையெம் பிரானிது சொல்லும். (62)

வஞ்ச நாடக நடிப்பது மாயைதன் செயலோ
தஞ்ச வல்லமன் றன்செய லோவெனத் தடங்கண்
பஞ்சின் மெல்லடி யாய்கட வுளரையும் படிறில்
நெஞ்ச மாதவர் தமையுங்கேட் டறிதிநீ யென்றான்.

(கு - ரை.) தஞ்சஅல்லமன் = எளிமையனாய் வந்த அல்லமன்; "தஞ்சமென்ப தெண்மைப்பொருட்டே" என்பது தொல்காப்பியம். படிறு=வஞ்சகஒழுக்கம். (63)

கள்ளன் மங்கையைக் களவுசெய் பொருளினைக் கண்டு
கொள்ளு நன்குறி புகல்விப்ப தொக்குமென் கூத்தைத்
தள்ள ருஞ்சுரர் முனிவராற் சொல்விக்குந் தகைமை
வள்ள லென்றுபுன் னகைகொளீஇ யுரைக்குமம் மாயை.

(கு - ரை.) வள்ளல்=ஈகையின் மிக்க அல்லமரே. களவுபோன பொருள்களிருக்கும் இடம் அறிய, திருடன் மனைவியிடமே குறிகேட்கப் போவது போலாம் அல்லமன் ஆடலை அவனடியாரிடம் அறிதல் என நகைத்து உரைத்தாள் என்க. (64)

நெஞ்சம் யாதினா லெனையகன் றிடவரி நினைக்கும்
கஞ்சன் மாயையை யிலனெனக் கழறவா யுண்டோ
விஞ்சும் வானிறை யென்னையெம் மெய்யினால் விடுவான்
தஞ்ச மாயையென் றிகழ்தரத் தக்கசொற் கற்றோய்.

(கு - ரை.) நெஞ்சம் யாதினால்=எந்த மனத்தால். அரி=திருமால். வான்இறை=இந்திரன். மெய்=உடல். 'மாயைத்தஞ்சம் என்று' என ஒட்டுக. தஞ்சம்=எளிமை. திருமால் எம்மனத்தால், பிரமன் எவ்வாயால், இந்திரன் எவ்வுடலால் எனை நீங்குவார் என்றாள் என்க. (65)

என்னை யஞ்சிமா வழங்குகாட் டிருக்குமா தவரென்
றன்னை வென்றிட வல்லரோ வல்லரென் றன்னைப்
பின்னை வென்றிட வல்லரியார் பேசுதி யென்று
மின்னை வென்றநுண் ணிடைசொல வல்லமன் விளம்பும்.

(கு - ரை.) வல்லரோ அல்லர் எனப் பிரிக்க. (66)

என்ற னுணையைக் கடப்பவ ரிலையிலை யென்று
வென்றி கூறினை யேலவர் நிற்கவேல் விழியாய்
நின்ற வாருயிர் முயற்சியா னிகழ்த்திய மாற்றம்
அன்றி வாழ்மறை யாகமத் தறிதியென் றறைந்தான்.

(கு - ரை.) அவர் நிற்க=(நீ குறித்த) அவர்கள் ஒருபுறமிருக்கட் நின்ற=நிலைபெற்ற. மாற்றம்=வார்த்தை. மாயை எனை அணுகுமோ றதை வேதாகமத்து அறிதி என்றார் என்க. (67)

நாலு வாக்குநீ பார்ப்பினு நானவற் றினுக்கு
மூல கார ணமாகுவன் மொழிந்தவிம் மாற்றம்
நூலெ லாமுரைத் திடுமெனச் செருக்கொடு நுவன்றாள்
மாலெ லாம்பிறப் பதற்கிட மாகிய மாயை.

(கு - ரை.) நாலுவாக்கும்=சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி னும் நான்கு வாக்கினையும். சத்திதத்துவமே முதன்மை என்பார் ாள்கையைத் தழுவி இது கூறினாள் என்க. (68)

ஆட்டு கிற்பனிவ் வகிலமு மென்றனை நின்னை
ஆட்டு கிற்பவ ராரென வறிந்திலை பேதாய்
கேட்டு நின்னையோர் பொருளென மூடரே கிளப்பார்
நாட்டு மென்னைநன் கறிந்துயர் ஞானிக ணவில்வார். (69)

ஆரை யாரிருந் தாட்டுவ ரோவதை யறியேம்
மார வேள்செயு நோய்மறித் ததன்பினென் வாதம்
பாரெ னவியம் பினள்பசிக் கனமிடிற் பசிநோய்
தீரு மாமருந் துதவுவ னென்பவர் சீர்போல்.

(கு - ரை.) அனம்=அன்னம்; சோறு: இடைக்குறை. (70)

காமி யாகிநீ யருச்சனை கடைப்பிடித் தமையால்
நாம வேனெடுங் கண்ணினாய் காமிபோ னடித்தேன்
தீமை நெஞ்சினாற் சூணினைந் தனைநினைத் தீண்டேன்
போமி னாருட னென்றனன் வன்சொலாற் புனிதன்.

(கு - ரை.) சூள்=சபதம். போமினாருடன்=மின்னற்கொடிபோன்ற ாழியருடன் (உனது ஊருக்குத் திரும்பிப்) போ. (71)

## வேறு

மண்ணுலகி லிழிகுலமத் தளத்தொழிலோன் றனைவிரும்பி ிது மீண்டாள், அண்ணன்மக ளெனும்பழியை மாளாம னிறுவிப் ா யங்கை கொட்டி, விண்ணுலக நகைசெய்யச் சூண்முடியா தெவ் று விமலன் பங்கில், பெண்ணரசி தன்முகத்தில் விழிப்பலென ையுளம் பீழை யுற்றாள்.

(கு - ரை.) அண்ணல்=அரசன். போய்=(கயிலை) சென்று. பங் பெண்ணரசிதன் = வாமபாகத்தில் உள்ள உமாதேவியினுடைய. ழை=துன்பம். (72)

அன்பினு லன்பர்பெறற் கெளியனு மெனைச்சூளொன் றறைந்து வந்து, வன்பினுற் பெறவேண்டி நின்றழிந்தா யிதுதகுமோ மாயை மாதே, முன்பினுக் கடுவிதைத்துக் கரும்பாக வேண்டிமிக முயன்று நெஞ்சில், துன்பராய்த் திரியுமவர் போலென்றுன் மாயைதனைத் துறக்க வல்லான்.

(கு - ரை.) வன்பினுல் = வலிமைத்தன்மையால். கடு=கசப்புப் பொருள். (73)

கரைகுறுக வந்தகலங் கவிழ்ந்தநாய் கன்போலக் கலங்கி நின்ற
வரைபுரைமென் முலைமாயை தனைக்கண்டு விமலையுள மறுகி மாழ்கி
இரதமுறு களிம்புமலி செம்பினிய ஞெக்குறு வியல்புபோல [ன்னுள்.
அருள்புரிதி யையவிவள் குணநோக்கா தென்றுதொழு தஞ்சிச் சொ

(கு - ரை.) கலம்=கப்பல். நாய்கன்=வணிகன். மறுகிமாழ்கி= சுழன்று வருந்தி. இரதம்உறுகளிம்புமலி செம்பினியல் = ரசகுளிகை யானது தன்னை அடைந்த களிம்பு நிறைந்த செம்பின் இயல்பை. (74)

இலங்கிலைவேன் மருட்டுமதர் விழிவிமலாய் வறியவோ டிரதந் தன்னுல், நலங்கிளர்பொன் னுருவாயி லென்னுலிம் மாயையின்ப நணுகுமென்று, புலங்களறி வரியபர மானந்த சிவயோகி புகல மாயை, கலங்கியளி பசும்புண்ணிற் செவ்வேல்பட் டெனவழுங்கிக் கழறு கின்றுள்.

(கு - ரை.) வறிய ஒடு=பயனற்ற ஓடானது. இரதம்=இரச குளிகை. புலங்கள்=ஐம்புலன்களால். (75)

நனவொருபுன் கனவாக மயங்கவெனைப் புணர்தலினு னுளும் வென்றி, எனதெனநின் றுளஞ்செருக்கி மடமாயை கூறுதலு மெங் கள்கோமான், கனவினுகர் வுறுமுணவு குறையுமோ பசியதனுற் களைவ துண்டோ, நினைவில்வரு கனவொன்று கண்டிறுமாந் தனை பேதாய் நீதா னென்றுன்.

(கு - ரை.) நனவு=சாக்கிரம். புல்=அல்பமான. நனவில்கனவு= சாக்கிரத்தில் சொப்பனம்; விழிப்பில் தூக்கம் என்க. (76)

எவ்வண்ண முரைவன்மை கொண்டுநீ தள்ளினுநா னின்று போகேன், கைவண்ண மலர்ப்பகழி மதனனையாய் நினைத்தழுவிக் கட்டிக் கொண்டு, செவ்வண்ண னமர்கைலைக் கேகியென்சூண் முடிப்பலெனச் செருக்கிச் சொன்னுள், மைவண்ண மலர்க்குழலாள் வான்றிரட்டி விழுங்குவலென் மாற்றம் போல.

(கு - ரை.) செவ்வண்ணன்=செம்மேனிப்பரமன். ஆகாயத்தைத் திரட்டி விழுங்குவேன் என்னும் பேதைபோல் சூள் முடிப்பல் எனச் சொன்னுள் என்க. (77)

முடிக்குமலர்க் குழன்மடவாள் சூண்முடிப்ப லெனுமொழிக்கு
றுவல் செய்து, பிடிக்கவலை யாயிலெனைப் பிடிநடையாய் பிடி
யன்று பிரான்ம றைந்தான், மடக்கொடிதன் விழியினுற் காண்ப
ம்போய் மதிமயங்கி வறிது நின்றுள், சுடர்த்தொடிமென் றேண்
டவா ரின்றிழந்தோ மிவளையெனத் துயரு ழந்தார்.

(கு - ரை.) முறுவல்=புன்னகை. வலையாயின்=வல்லவளாயின். டிநடையாய்=பெண் யானைபோலும் நடையினளே. (78)

வெண்டிங்க ணிலவுவா யிடைப்புகினுஞ் சகோரமெனு மென்பு
ன்றி, உண்டிங்கு வாழுமுயி ருளதோநம் மல்லமனு மொருவன்
னும், பண்டங்கு மொழிமாயை கைப்படினு மவள்பிடிக்கப் படுவ
ளுதான், தொண்டன்பின் வழிநின்று மனமாசு தீர்ந்தபெருந்
ாயோர்க் கல்லால்.

(கு - ரை.) நிலவு = கிரணமானது. சகோரம்=நிலவைப்பருகும் றவை. இங்கு=இவ்வுலகில். பண்=இசை. தொண்டுஅன்பின்=அடிமை வகையான அன்பின். இது, இயற்கை நவிற்சி. (79)

மாயைதனை வாதித்துத் தள்ளுபுதன் னிலைநின்று மாயா வாதி,
ஆயினனல் வீரசைவ சித்தாந்த குலதீப மாயி னேனென், றேயுமன
ிறுவியிறப் பெதிர்வுநிகழ் வெனுங்கால முணரு மாற்றல், தூயமுனி
வரரெல்லா மல்லமனைத் தொழுதுதவந் தொடங்கி வாழ்ந்தார்.

(கு - ரை.) 'நல்வீர சைவசித்தாந்த குலதீபமாயினேன் மாயைதனை வாதித்துத்தள்ளுபு தன்னிலை நின்று மாயாவாதியாயினன் என்று' என ட்டுக. ஓயும்=தளரும். நிறுவி=நிலைநிறுத்தி. (80)

ஏழாவது

மாயை கோலாகலகதி முற்றிற்று.

கதி 7-க்கு திருவிருத்தங்கள் - 437.

எட்டாவது

## வசவண்ணர் வந்தகதி

அசைவி லல்லமற் காயுமை நற்கலை
வசவ தேவன் வலிய கணங்கடாம்
கசியு மன்பிற் கயிலையி னின்றுதென்
திசையில் வந்த திறமுரை செய்குவாம்.

(கு - ரை.) அசைவுஇல்=(நிலை) திரிபு இல்லாத. நற்கலை= சத்துவ குணமெனும் கலையும். வசவதேவன்=வசவேசரும். கணங்கள் தாம்=சிவகணங்களும். கசியும்=ஊற்றெடுக்கும். (1)

தீங்கு காணுஞ் சிறுவிலை நாட்கடன்
வாங்கு மோர்பொருள் போக்கும் வறியர்போல்
நீங்க ஞான நெடுந்தகை மாயைநின்
றேங்கு மாவி யியக்கமு மின்றியே.

(கு - ரை.) சிறுவிலை நாள்=(விலை யாதுமின்றிக் கிடைக்கும்) சிறுமைப்பண்டமும் விலைகொடுத்து வாங்கும் நாள்; எனவே பஞ்சமான காலமாயிற்று. போக்கும்=இழக்கும். 'ஞான நெடுந்தகை நீங்க மாயை ஆவி யியக்கமும் இன்றி நின்று ஏங்கும்' என ஒட்டுக. நெடுந்தகை=அல்லமன்; அன்மொழித்தொகை. (2)

மத்த ளங்கொடு வந்தவன் றன்னொடு
பொய்த்த நுண்ணிடை போயின ளென்னவே
சித்த நாணுந் துயரமுந் தின்றிடப்
பித்தர் போற்பின் றொடர்ந்தனர் பெற்றவர்.

(கு - ரை.) என்னவே=என்று பிறர் கூறவே. சித்தம்=உள்ளத்தை. பெற்றவர்=தாய் தந்தையர். (3)

தக்க தந்தைதாய் சாயப் பழிசெயும்
மக்க ளின்றி மலடர்தா மாதலும்
மிக்க வன்பிணி மேவலு நல்லவென்
றுக்க நெஞ்சுட னேடினன் மன்னவன்.

(கு - ரை.) சாய=தலை சாய்க்க; இறக்க. உக்க=சிதைந்த. (4)

காய்ப சிக்குக் கவன்று தசைதின
வாய்ப தைக்கு மறவர் வலையிடைப்
போய்வி ழக்குழக் கன்று புகுந்தவண்
தாய்ப தைப்பது தன்னெதிர் காணுமோ.

(கு - ரை.) காய்=வருத்துகின்ற. கவன்று=கவலையுற்று. தின=தின்ன. மறவர்=வேடர்களுடைய. குழக்கன்று=இளங்கன்று. 'வலையிடை குழக்கன்று போய்விழ தாய் அவண் புகுந்து பதைப்பது தன்னெதிர் காணுமோ' என ஒட்டுக. மாயை தாய் மானின் நிலை கண்டால் யானும் அப்படித்தான் இருப்பன் எனத் திரும்புவள் என மோகினி எண்ணினள் என்க. (5)

கண்டு வார்சிலைக் கானவர் பார்ப்பினைக்
கொண்டு போகக் குடம்பைகண் டேங்கியே
துண்ட மாரிரை சோரப் பறவைகள்
மண்டு நோயின் மறுகுதல் காணுமோ.

(கு - ரை.) 'வார்சிலைக்கானவர் பார்ப்பினைக் கண்டு கொண்டு போக, பறவைகள் குடம்பை கண்டு ஏங்கியே துண்டம் ஆர் இரைசோர, மண்டு நோயின் மறுகுதல் காணுமோ' என இயைக்க. பார்ப்பு=குஞ்சுகள். குடம்பை=கூண்டு. துண்டம் ஆர்=துணித்துக் கொணர்ந்த; வாயலகு எனினுமாம். இரை=ஆகாரம். நோய்=பிரிவுத் துன்பம். (மாயை) காணுமோ என்க. (6)

அரின்மி தித்திட் டதர்படப் பூம்பணை
மரமு றித்து மழைமதக் கைம்முக
உரல டிப்பிறை யொண்மருப் பஞ்செவிக்
கரிந டப்பக் கலங்கி யிரியுமோ.

(கு - ரை.) மழைமதம்=மழைபோல் பொழியும் மதம். கைம்முகம்=துதிக்கையையுடைய முகம். பிறைஒள் மருப்பு=பிறைபோல் வளைந்து வெள்ளிதாய் ஒளிரும் தந்தங்கள். கரி=யானைகள். அதர்பட அரில் மிதித்திட்டு=வழியுண்டாக தூறுகளை மிதித்து வைத்து. பணை=கிளைகளையுடைய. 'நடப்ப (என்மகள் கண்டு) கலங்கி யிரியுமோ' என்க. (7)

பரற்கண் மென்பதம் வைத்துப் பதைக்குமோ
சுரத்து மேனி துவண்டு வெதும்பிநீர்
இரக்கு மோமக ளென்செயு மோவெனத்
தரிக்க ருந்துயர் தாயடைந் தேகினள்.

(கு - ரை.) பரல்கண் = பருக்கைக் கற்களில். சுரத்து = பாலை வனத்து. (8)

பொன்னை யன்ன புதல்வி பொருட்டிவண்
மன்னர் மன்னன் மனத்தில் வளர்ந்தெழும்
இன்னல் காணவு மூழெழான் றிருந்ததென்
றுன்னி மாழ்கியவ் வூரர்பின் போயினர்.

(கு - ரை.) இவண்=இவ்விடத்தில். இன்னல்=துன்பம். ஊழ்=விதி. உன்னி=நினைத்து. மாழ்கி=வருந்தி. (9)

அயர்ந்து நிற்கு மரிவையைக் கண்டுநான்
முயன்று மெய்த்தவ முற்றும் பயின்றுனைப்
பயந்த தற்குப் பயனன் றுதவினை
நயந்தெ மக்கெனத் தந்தை நவின்றனன்.

(கு - ரை.) பயின்று=செய்து நிறைவேற்றி. 'நயந்து எமக்கு நன்று பயன் உதவினை யென' என்று மாறுக. (10)

என்னை நீங்கி யிழிதொழில் செய்பவன்
தன்னை நாடித் தலைமை யிழந்தெனோ
கன்னி நீகொடுங் காட்டில் வந்தாயென
அன்னை யோவென் றரற்றி யழுதனள்.

(கு - ரை.) எனோ=என்னோ. அரற்றி=கதறி. (11)

மகனு மல்லனவ் வல்லமன் மாயைநும்
மகளு மல்லள் வரைபுரை தோளினாய்
இகலும் வாட்க ணரசியு நீயுமிங்
ககலு மென்று விமலை யறைகுவாள். (12)

வினைப்ப யன்கொள வேண்டுந ரோரிடம்
தனைப்பொ ருந்துறச் சம்பந்த மாத்திரத்
தெனக்கி னாரிவ ரென்றபி மானமொன்
றனைப்பொ ருந்தி யழிவ ரறிவிலார்.

(கு - ரை.) கொள = அநுபவிக்க. ஓரிடம்தனை = (தமக்கென வகுத்த) ஒரு இடத்தை. சம்பந்தமாத்திரத்து=அத் தொடர்பளவில். இனார்=இன்ன உறவினர். (13)

தனைய ராகியுந் தந்தைதா யாகியும்
உனையு றுத வுயிரிலை யாதலால்
இனையர் கேளி ரினைய ரயலென
நினைவு றேன்மிளிர் நெட்டிலை வேலினாய். (14)

வேனெ டுங்கண் விமலை யிவைசொலப்
பான லங்கண் பனிமதி வாண்முகப்
பூந றுங்குழற் பொற்றொடி மாயைமுன்
தான டைந்தமை தந்தைக் குணர்த்தியே.

(கு - ரை.) தானடைந்தமை=தான் கயிலாயத்தினின்று வந்த வகைமையை. (15)

காவி யங்கட் கனியிதழ் மாதுமை
ஏவ வந்தவென் னெண்ண முடித்திலன்
போவ னங்கிப் புரிகுழ லோடுநான்
நீவிர் நோவன்மி னென்னை நினைந்தென.

(கு - ரை.) காவி = குவளை. அங்கு = அக் கயிலைக்கு. புரி குழலோடு=விமலையுடன். (16)

விரைந்தெ ழுந்து விமலை யணங்கொடு
வருந்து நெஞ்சக மாயையக் காட்டுளோர்
பிரிந்த ழுங்குரல் பின்றொடர்ந் தேகவே
பொருந்த ருங்கயி லைத்தடம் போயினள். (17)

அழுது வாய்விட் டரற்றிலன் றன்னுடல்
புழுதி யாடப் புரண்டிலன் மன்னவன்
பழுதி லாதசன் பாவைகா ணுமையால்
எழுது மோவிய மென்னநின் றனரோ. (18)

விழுவண் மீள வெழுவண் மெலிந்துநைந்
தழுவண் மேனி யசைந்து நிலங்கையால்
உழுவள் வாய்கொண் டுயிர்ப்ப ளிறப்பலென்
றெழுவள் கைநெரித் தேங்குவ ளன்னையே. (19)

பாடு மாதரும் பந்துங் கழங்குநின்
றோடு மாதரு மாகு மரிவைய
ரோடு மேவி யொருமகள் வாழ்ந்தவம்
மாட நானினிக் கண்டுயிர் வாழ்வனோ. (20)

துளிக்கும் வார்மதுச் சோலையும் வாவியும்
பளிக்கு மாடமும் பாழ்பட வென்மகள்
களிக்கு மானிருங் காட்டினு ளெம்மைவிட்
டொளிக்கு மாறொரு சற்று முணர்ந்திலேன்.

(கு - ரை.) துளிக்கும்=சிந்தும். வாவியும்=நீரோடையும். பளிக்கு= பளிங்கு. 'மான் களிக்கும்' என்க. (21)

என்னை நீவிட் டிருப்பினும் பொற்றொடி
உன்னை நான்விட் டுயிர்பிழை யேனென
அன்னை வாய்விட் டரற்றின ளாயிடை
மின்ன னாருங் கதறினர் வேலைபோல். (22)

வந்து வேந்தன் வழிமர பாரியன்
உந்த மாமக ணோன்மை நுமக்குநான்
முந்து கூறில னேதுயர் மூழ்கினீர்
சிந்தை நோதற கானெனச் செப்புவான்.

(கு - ரை.) வழிமரபு ஆரியன் =குலகுரு. நோன்மை=பெருமை. ()

அருந்த வம்பல வாற்று மறிஞரும்
பொருந்த ருங்கயி லைக்குமின் போனமை

தெரிந்து நெஞ்சந் தெளிய வறிந்துநீர்
வருந்துந் தன்மை மடமை மடமையே.

(கு - ரை.) மின்=மின்னற்கொடிபோன்ற மாயை. (24)

சிலைநு தற்பசுந் தேமொழி மாதுமை
கலைநு மக்குக் கவின்மக ளாகநீர்
தலைமை பெற்றது சாலு முமையினி
உலகி னிற்பிற ரொப்பவ ரில்லையே.

(கு - ரை.) தேமொழி = தேன்போன்ற சொல். கலை = தமோ குண அம்சம். சாலும்=அமையும். (25)

என்று கூறக் குரவ னிறைமகன்
மன்றல் வாழ்க்கை மனையொடு துன்பொரீஇச்
சென்று மாடத் திருநக ரிற்புகாக்
குன்ற மாமதிற் கோயிலி னண்ணினான்.

(கு - ரை.) மன்றல்=மங்கலம். ஒரீஇ=நீங்கி. குன்றமாமதில்= மலைபோன்று திண்ணிதாய் உயர்ந்த மதில். (26)

## வேறு

கயிலையில் விமலை யோடுங் கவிரிதழ் மாயை சென்று
வியனில மதனிற் றன்னை விடுத்தனான் றென்ன வானோர்
பயிலவை தன்னிற் புக்குப் பரனையு மிமய மீன்ற
மயிலிய றனையும் வாழ்த்தி வணங்கியங் கருகு நின்றாள்.

(கு - ரை.) கவிர் இதழ்=முருக்க மலர்போன்ற அதரம். (27)

பொலிவழி வதனங் கண்ட போதேயம் மாயை நெஞ்சின்
மெலிவினை யறிந்து மன்னை வினவலுஞ் சூள்கொண் டேகி
மலர்தலை யுலகிற் றன்முன் மயங்கிய வாற னைத்தும்
நலியுநா ணடவ ருந்தி நவின்றனள் குறிப்பிற் றோன்ற.

(கு - ரை.) நலியும் நாண் அட=துன்புறுத்தும் நாணம் தன்னை வருத்த. தோன்ற=வெளியாக. (28)

நன்னக மகள்கேட் டுள்ள நாணுபு முகங்க விழ்ந்தாள்
பன்னக சயன னாதி பண்ணவர் நெருங்க வைக்கண்
முன்னகை செய்து தீய முப்புர மாளச் செய்தான்.
புன்னகை புரிந்தான் பங்கிற் புரிகுழல் செருக்கு மாள.

(கு - ரை.) நன்னக மகள்=சிறந்த மலைமகளான பார்வதி. பண் ணவர்=வானவர். பன்னகசயனன்=நாராயணன். (29)

அளியனென் றுனக்கு நான்சொ லல்லம னரிய னேமற்
றெளியனோ வுரைத்தி நீயென் றிலங்கயி லெறித லேபோல்

வளியபுன் முறுவல் செய்ய விமலன்வெண் மதியங் கண்ட
ளினமென் மலர்போ லென்றாய் நகைமுக மொடுங்கி னாளால்.

(கு - ரை.) அளியன்=அருள்வடிவன். அயில்=வேல். வெளிய=வெண்மையான. நளினம்=தாமரை. நகைமுகம்=ஒளியுடைய முகம். (30)

பாக்கரும் வலிபு கன்று போய்வரு மாயை சொன்ன
ாக்கினில் வருந்து வேனை வள்ளனீ நகைசெய் தெள்ளல்
ூக்கிலி முகத்தின் முன்னர் முகுரங்காட் டுதல்போன் மென்ன
க்கிள ரிமய மீன்ற மெல்லியன் மெலிந்து சொன்னாள்.

(கு - ரை.) போக்கரும்=விலக்குதற்கு அரிய. வலி=வன்மொழி; தம். மூக்கிலி = மூக்கில்லாதவள். முகுரம் = கண்ணாடி. போன் மன=போலும் என்று. மீக்கிளர்=மேன்மைபெற விளங்கும். (31)

ம்பயி லெந்தை மங்கை நாணினால் வருந்தி னாளென்
டைந்தருள் சொல்வன் ஞால மலைக்குமம் மாயை சூளால்
நடுந்தகை முன்ன ரு சென்ற நிலையேநன் றுடு கொல்வோன்
ங்கன்முன் வெல்வே னென்று வருதலே யாற்ற லன்றே.

(கு - ரை.) அருள் அடைந்து=அருள் மிகுந்து. ஞாலம் அலைக்கும்=உலகை வருத்தும். நெடுந்தகை=அல்லமன். மடங்கல்=சிங்கம். ()

அல்லமன் பெருமை யெல்லா மனைவரு மறிந்து கொள்ள
ல்லெழின் மலைம டந்தாய் நன்குணர்த் தினைநீ யென்று
சால்லுந ரன்றி நின்னை நிந்தனை சொல்ல வல்லார்
ல்லையென் றியம்ப யாவு மீன்றவ ளியம்பு கின்றாள். (33)

பாறியிலி யேன்செய் தீமை பொறுத்தருள் புரிந்து மெய்ம்மை
றிவருள் குரவ னாகு மல்லமன் றன்னைக் காணும்
நறியருள் புரிதி யென்ன நிறைவளை வணங்கிக் கூற
றிமழு வமர்ந்தி ருக்கு மலர்க்கைவா னவனு ரைப்பான்.

(கு - ரை.) பொறி=அறிவு. நெறி=வழியை. நிறைவளை=உமா தவி. மறி=மான். வானவன்=சிவபிரான். (34)

த்தம துறுகு ணத்து மாயையை விடுத்த வாற்றால்
த்திய குரவன் றன்னை நீயறிந் திலைய ணங்கே
த்துவ கலைம டந்தை தனையினி விடுத்தி யாயில்
கைத்தல நெல்லி போலக் காண்குவை யவனை யென்றான்.

(கு - ரை.) மத்தம்=மயக்கம். நித்திய குரவன்=அழிவில்லாத ருவான அல்லமன். (35)

டியட விறப்ப லென்று மேவுமோ ரிடத்திற் செம்பொன்
நடமொடு கண்ட வன்போற் கொலைசெய்நாண் டுறந்து வந்து

துடியிடை யுமையெம் மானைத் தொழுது சத்துவ வணங்கைப்
படிமிசை யலமற் காண்பான் செல்கெனப் பணித்தா னன்றே.

(கு - ரை.) மிடி=வறுமை. இறப்பல்=மாய்வேன். உவந்து=மகிழ்ந்து. துடி=உடுக்கை. எம்மானை=எம்மிறைவனை. படிமிசை=நில உலகில். அன்று, ஏ அசைகள். (36)

அப்பொழு தருகு நின்ற வருணந்தி தேவ னன்னே
ஒப்பரும் பத்தி யென்னு மஞ்சன மொன்றுண் டாயின்
செப்பரு ஞான னந்த வல்லம தேவ னென்னும்
வைப்பினை யெளிது காண லாமென மகிழ்ந்து சொன்னான்.

(கு - ரை.) அருள்=கிருபையையுடைய. அன்னே=அன்னையே. வைப்பினை=புதையலை. (37)

அழிவரு நிதிய வைப்பை யஞ்சனங் கொண்டு காணும்
விழியுடை யவன்போன் ஞான மெய்க்குர வனைத்தான் கண்டு
கழிமய லன்பர் காணக் காட்டுவோ னிவனென் றெம்மை
வழிவழி யடிமை கொள்ளும் வள்ளனந் தியைப்பு கழ்ந்து

(கு - ரை.) அழிவு அரு = அழிக்க இயலாத. நிதியவைப்பை=பொன் புதையலை. மயல்கழி=மயக்கம் ஒழிந்த. (38)

சத்தியால் யான்பி ணித்த தளைதனைத் தனது தூய
பத்தியா லவிழ்க்க வல்லோன் பார்க்கினிந் நந்தி யேதான்
இத்தினால் விலங்கு பூட்டு மிறைவனோ விடுவிப் பானோ
மெய்த்தவா ரருளி னோன்யார் விளம்புக வென்று சொல்வான்.

(கு - ரை.) சத்தியால் = (மாயா) சத்தியால். தளைதனை=பந்திப்பை. இத்தினால்=இதனால்; எதுகை நோக்கிய விரித்தல் விகாரம். விலங்கு பூட்டுபவன் பரமன், பூட்டிய விலங்கைத் தறிப்பவர் நந்தி. இருவருள் மெய்ம்மையான கிருபையுள்ளவர் யாவர் சொல்லுக என்றபடி. (39)

அல்லம னென்னு ஞான வானையை யகப்ப டுத்த
வல்லவொண் பார்வை நீயே யாதலான் மண்ணிற் போகி
எல்லையி லன்பர் நெஞ்சத் தின்பரு ணந்தி யென்று
சொல்லின னுயிரிற் றேன்றாத் துணையென விருக்கும் பெம்மான்.

(கு - ரை.) ஞானவானையை = ஞான உருவான யானையை. பார்வை=பார்வைமிருகம். அருள்=அருள்வாயாக. (40)

அந்திவண் ணத்தெங் கோமா னருளினு லின்ன கூறச்
சுந்தரி தனக்கு மெட்டாத் தூயவன் றன்னைக் காண
நந்திவல் லவனோ வென்று நகைசெய்து கணங்க டம்முள்
வந்தொரு சிலரு ரைப்ப மங்கைபங் காளன் சொல்வான்.

(கு -ரை.) அந்திவண்ணம்=மாலைச்செவ்வான நிறம். சுந்தரி=
மாதேவி. (41)

ந்தியென் றனையு ணர்ந்தா னவன் றனையு ணர்ந்தேன்
ந்தைசெய் தொம்மை நீவிர் தெளிவுற வறிகி லீரென்
றந்தையெம் பெருமான் கூற விகழ்ந்துரை செய்தோ ரெல்லாம்
வந்துயர் கொண்டு நின்றார் மீளவும் விமலன் சொல்வான்.

(கு - ரை.) என்றனை=எனது சொரூப நிலையை. சிந்தை=தியா
னம். (42)

மாசறு நந்தி பத்தி வார்த்தையா லறியீர் நீவிர்
காசினி யதனிற் சென்று கண்களா லமையக் கண்டு
பசுகிர் பின்ன ரென்று பொருந்தகை நந்தி தன்னை
உசனெண் கணங்க டம்மை யேவின னருளி னானே.

(கு - ரை.) மாசறு=குற்றமற்ற. பத்தி=அன்பை. காசினி=நில
வுலகம். அமைய=பொருந்த.  (43)

ண்ணுக லருளா லேவுங் கணங்களுட் டலைமை பெற்றோர்
மண்ணுல கதனில் வேண்டும் வளம்பதி தோறும் வந்து
ண்ணின ருலகர் கண்ணி னரர்வடி வாகத் தோன்ற
எண்ணுறி னெழுநூற் றின்மே லெழுபதென் றுரைக்கு மெண்ணர்.

(கு - ரை.) வேண்டும்=தாம்வேண்டிய; விரும்பிய. நரர்=மனிதர்.
ண்ணினர்=வந்து அவதரித்தார்கள். (44)

நந்தியென் கின்ற ஞான ஞாயிறு நிலத்து திப்பின்
மூந்துறு மமண ரென்னு மூடுவல் லிருள்கெட் டோடும்
சந்திர மௌலி சீர்வெண் டாமரை மலரு மென்னா
இந்திரன் முதலா யுள்ள விமையவர் மனம கிழ்ந்தார்.

(கு - ரை.) ஞாயிறு=சூரியன். மூந்துறும்=அறியாமையால் மூந்தி
வரும். அமணர்=சமணர். சந்திரமௌலி=பிறையணிமுடியுடைப் பெரு
மானார். சீர்=புகழ். (45)

எட்டாவது

வசவண்ணர் வந்தகதி முற்றிற்று.

கதி 8 - க்கு திருவிருத்தங்கள் - 482.

ஒன்பதாவது

# அக்கமாதேவி உற்பத்திகதி

புரஞ்சுடு சிறுநகைப் புனிதன் பாலமர்
கருந்தடங் கண்ணிதன் கலையு நந்தியும்
அருங்கண நாதரு மகனி லத்திடை
வருந்திற மறிந்தவா வகுத்துக் கூறுவாம்.

(கு - ரை.) புரம்=முப்புரம். சிறுநகை=புன்னகை. பால்=(இடது) பாகத்தில். கருந்தடங் கண்ணிதன்=கரிய பரந்த கண்களையுடைய உமையின். கலையும்=சாத்துவிகக்கலையும். அறிந்தவா=யாம் அறிந்த அளவு. (1)

பெடையொடு சுரும்பினம் பெரிதி ரைந்திடக்
கடிதட மளவுவாய்க் காலி னூடியே
மடையுடை மதுமழை மலர்பெய் சோலைசூழ்
உடுதடை யெனுநக ரொன்றுண் டாயிடை.

(கு - ரை.) சுரும்பு=ஆண்வண்டு. இரைந்திட=ஒலிக்க. கடிதடமளவு=மணம் பொருந்திய தடாகமளவும். வாய்க்காலின்=வாய்க்காலின் வழியாக. உடுதடை என்பது, ஓர் நகரின் பெயர். (2)

நன்மையென் பனவெலா முடைய னன்மறைப்
புன்மையென் பனவெலாம் பொருந்து றுனெனும்
தன்மைதன் பெயரினு லறியத் தக்கவன்
நின்மல னெனவொரு நிகரி லானுளன். (3)

அவனெழின் மனையவ ளாட கத்தினைச்
சுவணமென் குதலெனச் சுமதி யென்பவள்
தவநிலை தன்னினுந் தலைமைத் தென்னவே
உவமையி லில்லறத் தொழுகு நீர்மையாள்.

(கு - ரை.) ஆடகத்தினைச்சுவணம் என்குதலென=(வெண் பொன், கரும்பொன் எனப்பிற உலோகங்களை அடையுடன் கூறி,) பொன்னை அடையின்றிப் பொன் என்றே கூறல்போல். ஆடகம்=ஆடகம், கிளிச்சிறை, சாதரூபம், சாம்பூநதம் என்னும் நால்வகையுயர்ந்த பொன்களில் முதலது.

தூநிரு மலனுக்கச் சுமதி தன்னிடைத்
தானொரு மகளெனச் சார்ந்து தோன்றினள்
ஆனுயர் கொடியினே னங்கை தாங்குரு
மானுயர் சத்துவ கலைம டந்தையே.

(கு - ரை.) தூ=தூய. ஆன் உயர்கொடியினேன்=இடபக்கொடியுயர்த்திய சிவபிரான். அங்கை தாங்குரு=அழகிய கையில் ஏந்தியுள்ள. (5)

மதிபெறு கடலென மகளை யீன்றவர்
நதிபெறு சடைமுடி நம்பன் பாலுறு
கதிபெறு மதிநுதற் கரும்பைப் பெற்றுநல்
துதிபெறு மலையென மகிழ்ச்சி துன்னினர்.

(கு - ரை.) நதிபெற=கங்கைதங்கிய. மதிநுதல் கரும்பு என்றது, மாதேவியாரை. மலை=மலையரசன். (6)

நெறிமுறை நிருமல னீறு சாத்தியே
அறிவருு மஞ்செழுத் தறைந்து மெய்யுணர்
குறியினைத் தரித்தனன் குழவி யாகிய
பொறிநிகர் வுறுமொரு புதல்விக் கென்பவே.

(கு - ரை.) நெறி=வேதாகம நெறி. குறி=இட்டலிங்கம். பொறி=திருமகள். (7)

இந்துவார் சடையினோ னிடத்த ளேயெனும்
சிந்தையான் மகளைமா தேவி யென்றொரு
சந்தநா மங்கொடு தான மைத்தனன்
தந்தையா தற்குநற் றவம்பு ரிந்தவன்.

(கு - ரை.) இந்து = திங்கள். இடத்தளே = இடதுபாகத்துத் தேவியே. எனும்=என்று எண்ணும். சந்தம்=அழகிய. (8)

அறிவருு ளாதர வடக்கம் வாய்மைமெய்த்
துறவுநல் லொழுக்கமே தூய்மை யென்றிவை
உறவொடு குழவியா யுடன்வ ளர்ந்திட
மறுவறு சுமதிதன் மகள்வ ளர்ந்தனள்.

(கு - ரை.) அருள்=கருணை. ஆதரவு=அன்பு. (9)

வாடிய மருங்குலம் மாயை தோன்றுநாள்
கோடிய சிலைகொடு தவங்கு லைப்பவே
ஓடிய மதனன்மா தேவி யோங்குநாள்
வீடிய சிலையனாய் வீழ்ந்து மாழ்கினான்.

(கு - ரை.) வாடிய=துவண்ட. கோடிய=வளைந்த. ஓங்கும்=வளரும். வீடிய=தோல்வியெய்திய. மாயையின் உற்பவத்தில் வீறுகொண்ட மதன், மாதேவி யுற்பவத்தில் (அவளது அறிவு, அருள், ஆதாம், அடக்கம், வாய்மை, துறவு, நல்லொழுக்கம் ஆதியவற்றால்) தன் வீரம் இனிப் பலியாதென வருந்தினனென்க. (10)

விழுந்தன கொடியதீ வினைப்ப ரப்பெலாம்
எழுந்தன நல்லறம் யாவுந் திங்களம்
கொழுந்தென நிருமலன் குமரி யோங்குநாள்
முழங்கின சிவாகம முற்று மெங்குமே.

(கு - ரை.) திங்களம்கொழுந்து=பிறைச்சந்திரன். (11)

## வேறு

சங்குமா தேவி யின்னண மிருப்ப வெம்பிரா னேவிய கணங்கள், தாங்கள்வேண் டியவெலாம் பதிதொறு முன்செய் தவத்தர்பா லன்மக வாகித், தீங்கிலாச் சித்த ராமையன் மாசி தேவனென் றிடு பெயர் முதலா, ஓங்குநா மங்கள் வேறுவே றாக்கொண் டுற்றனர் கற்றவ ருயன்று.

(கு-ரை.) வேண்டிய=விரும்பிய. பதி=தலங்கள். (12)

பயக்குறு மினிய சங்கர பூசை பல்வகை நெறிப்பட வியற்றிச், செயற்கருஞ் செய்கை செய்தவ ரிருக்கார் தென்றிசை கயிலைபோற் சிறக்க, மயக்குறு மமண வல்லிருண் மெலிய வாதினவ மெனுமுடு மழுங்க, வியக்குறு சைவ மலரஞா னத்தி வெய்யவ னுதித்ததை விரிப்பாம்.

(கு-ரை.) பயக்குறும்=வீடுபேறு வாய்க்கத்தக்க. மயக்குறும் அமணர்=(மாயமொழியால் அறிவை) மயக்கும் சமணர்கள்; கடவுளிருப்பை உண்டென்றால் உண்டு இல்லையென்றால் இல்லை என்னும் தம் கருத்தை அத்தி நாத்தி என்னும் சொல்லாலும், பிறவிக்கு முன் உயிரிருப்பை உண்டாம், இல்லையாம், உண்டுமில்லையாம், சொல்லொணாதாம், உண்டாம் சொல்லொணாதாம், இல்லையாம் சொல்லொணாதாம், உண்டுமில்லையாம் சொல்லொணாதாம் எனக்கூறி மயக்குநராகலின், 'மயக்குறு அமணவல்லிருள்' என்றார். உடு=நக்ஷத்திரம். வெய்யவன்=ஞானசூரியன். சிறக்க, மெலிய, மழுங்க, மலர எனும் வினையெச்சங்கள் உதித்த எனும் பெயர் கொண்டு முடிந்தன. (13)

வாயின்மண் ணிட்டுக் கொண்டவன் றன்னை மதித்தநா னுதலின்மண் ணிடாமல், பாயும்வெண் டிரையிற் றுயில்பவன் றனக்குப் பரிதியொன் றளித்தருண் முக்கண், நாயகன் றனையே கருதிவெண் ணீற்று நன்னுதல் வீதியை யணியுந், தூயநன் மறையோர் தமக்கிட மாகுந் துரிசிலா விங்குளா புரியே.

(கு-ரை.) மண்ணிட்டுக்கொண்டவன் = நாரணன்; இது உலக முண்டது. நுதலின்மண்ணிடாமல் = நெற்றியில் திருமண்ணிடாமல். திரை=பாற்கடல். பரிதி=சக்கரம். நுதல்வீதியையணியும்=நெற்றியாகிய இடத்தை அழகுபடுத்தும். துரிசு=குற்றம். இங்குளாபுரி=ஓர் பட்டணம்.

கதிர்வினை செந்நெற் காடுசூழ் கரும்பு கரும்புசூழ் கதலியங் கதுசூழ், புதாசுறும் பாளைக் கமுகது சூழ்முப் புடைப்பசுங் காயதெங் கதுசூழ், உதிர்கனித் தேமாத் தண்பொழில் பார்ப்பார்க் குயர்வுற லுயர்மிசை புகாமல், அதிர்முர சியம்பும வீதியர் நகரிற் கவிகள்வைத் திடுபடை காட்டும்.

(கு-ரை.) காடு=மிகுதியேற்று. கதலி=வாழைச்சோலைகள். முப்புடை=மூன்று பக்கம் பருத்துள்ள. மாப்பொழில் = மாஞ்சோலை

...வுறுதுயர் = மிக்க துன்பம். மேல் உரைத்த சோலைகளெல்லாம் காப் ...நம் அணிவகுப்புப்போல் தோற்றமளிக்கின்றன வென்க. (15)

...திருந்திழுக் கிடுவா ரன்னமந் நகரின் வேதியர் மடந்தைய ரெல் ..., பொருந்துமன் னத்திற் கிடுவன விருந்து புனல்வயற் செங்கம ...ளள், வருந்துநுண் ணிடைநன் மாதர்கைம் மலர்க்கு வண்டினைக் ...டுப்பர் பேரின்பம், தருந்தனி நகர்சூழ் தடங்கள் வண்டிற்குத் ...ன்மலர் கொடுத்திடு மன்றே

(கு - ரை.) அன்னம் = சோறு; அன்னப்பறவை. வண்டு = வளையல்; ...ரீ; இது, சிலேடை. (16)

இந்நகர் வாழு மறையவர் செய்யும் யாகதூ மம்படிந் தன்றே, ...ன்னகர் வாழ்நர் நிறைந்த வாயுளராய்ப் பொருந்துத லிந்நகர் ...றயோர், உன்னரு மறுவா னெருப்பினை வளர்த்திட் டொழுகு ...காட்டுறி னன்றிப், பின்னொரு செயலாற் கலியுகந் தன்னிற் ...ருகுநீர் காணுறப் படுமோ.

(கு - ரை.) தூமம் = புகை. மறு = மறைமொழி. ஒழுகும்நீர் = நடக் ...தன்மை. பெருகும்நீர் = மிக்க மழை. (17)

இனையமா நகரி னந்தணர்க் கெல்லா மிறைமைபூண் டொளிரொரு ...றயோன், தினையெலா மான்ற விதிமுறை யெல்லா திருமலன் ...நவிலுஞ் செய்யும், வினையெலா மவன்பூ சனையினும் வைத்தோன் ...சமு பொழுக்கமும் வல்லான், மனையுளா னெனினுந் துறந்தவர்க் ...ரப்பான் மற்றவ னுமயா தரசன்.

(கு - ரை.) மனையுளான் = இல்லறத்தான். (18)

திருந்திய வனையான் றேவிதன் னுமஞ் செப்பின்மா தாம்பிகை ...ன்பாள், அருந்ததி முதலாங் கற்புடை யார்த மருகிலே யூறின்றி ...றெ, நிரந்தர மவளைக் கைகுவித் திறைஞ்சி நினைந்துபின் பாயலிற் ...ப்பார், கருந்தடங் கயற்கட் பூங்கொடி யனையாள் கற்பினை ...வரே புகல்வார்.

(கு - ரை.) ஊறு = பழுது. முற்ற = நிறைவேற. நிரந்தரம் = நாள் ...றும். அவளை = மாதாம்பிகையை. (19)

பூங்கொடி யனமா தாம்பிகை பெருமை புனைந்துரை யன்று ...டாங்கே, ஓங்கிய வபர சிவனென வேத முரைத்திடு மருணந்தி ...தான், தாங்குற வவடன் வயிற்றிடை யதனுற் றக்கவர் தகவில ...ன்ப, தாங்கவர் பயந்த புதல்வனுற் றெளிய வற்பினென் றறைகு ... பெரியோர்.

(கு - ரை.) புனைந்துரை = உபசாரமொழி. பட்டாங்கே = மெய்ம் ...யே. "தக்கார்தகவிலரென்பது அவரவர் தம் எச்சத்தாற் காணப்படும்" ...பது குறள். (20)

ஐந்தொழி லொருவன் றிருவுள மகிழ மறுதொழி லாளன்மா தரசன், பைந்தொடி கொழுநற் றொழுதெழு தொழிலாள் பரிந்துதீ வளர்ப்பவன் மறையோன், செந்திரு வனையாள் விருந்தினர் வயிற்றிற் றீயவிப் பவளிவர் பெருமை, நந்தெழின் மலரோன் சொன்மக ளிருக்கு நாவினும் புகன்றிடப் படாதே.

(கு - ரை.) ஐந்தொழிலொருவன்=படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தொழில் புரி பரமன். அறுதொழிலாளன்=ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்னும் ஆறு தொழில்களு முடையவன். பைந்தொடி=மாதாம்பிகை. தொழுதெழு தொழிலாள்="தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்" என்பது குறள். பரிந்து=அன்புகூர்ந்து. முதல்தீ வேள்வித்தீ, அடுத்ததீ பசித்தீ. மலரோன் = பிரமன். சொல்மகள் = கலைமகள். நா=நாக்கு. ஐந்தொழிலன்=சிவபிரான், அறுதொழிலன் மாதரசன் தீவளர்ப்பான்; (அவனைத் தொழுது) எழுதொழிலள் மாதாம்பிகை தீயணைப்பாள் எனும் நயம் காண்க. (21)

இன்னமா தரசன் றேவிதன் வயிற்றி னிவ்வுல கெலாஞ்செய்புண் ணியத்தான், மன்னுமா ரளிகள் விருந்துணக் காமர் வல்லியின் மலர்மலர் வதுபோல், என்னையா ளுடைய நந்திவா னவன்றா னெய்திவந் துதித்தன னன்று, சென்னியா லமரர் தொழுதுபூ மாரி சிந்தினர் துந்துமி முழங்க.

(கு - ரை.) காமர் வல்லி=அழகிய பூங்கொடி (22)

எங்குரு நந்தி தோன்றுநாட் புதுமை யென்சொல்வாங் கண்டுமுட் டென்னும், வெங்குண வமண ருளத்தெறி மழுவோன் வேடங்கண் டஞ்சலி செய்ய, அங்கொரு நேயம் பிறந்தது திருமா லடியவருளத்தினி லெங்கள், சங்கர னிறைவ னெனவொரு ஞானஞ் சார்ந்தது தமையறி யாமல்.

(கு - ரை.) எரிமழுவோன் = சிவபிரான். அஞ்சலித்தல் = கைகுவித்து வணங்கல். நேயம்=அன்பு. (23)

கொலைகளா வழுக்கா றவாவொடு வெகுளி கொடுஞ்சொல்பொய் பயனில கூறல், நிலையழீஇ யொருவன் செய்ந்நன்றி யறத்த னிந்தனை வஞ்சனை பிறர்தம், சிலைநுதன் மடவார்க் கருதலென் றினைய தீமைக ளியாவும்போ யினவால், நலமலி தரும மூர்த்தியா கியநன் னந்திவா னவன்புவி வருநாள்.

(கு - ரை.) அழுக்காறு=பொறாமை. நிலையழீஇ=சொல்லிசை நிறைத்த அளபெடை. "அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொ னான்கும் இழுக்கா இயன்ற தறம்" என்பது முதலிய பல குறள்களின் கருத்தீண் டுணர்க. (24)

தாடலை தந்திங் கெம்மையா ணந்தி தாயகட் டினுநின்று தரை
மல், ஏடவிழ் மலர்வாண் முகமது தோன்ற வெழுந்தரு ளுதன்
னங் குருவாய்க், கூடல சங்க மேசன்றுய்க் கொளித்தாக் குறுகி
ன் னுதலினீ றணிந்து, வீடருள் பரம சிற்கன லிங்க மெய்யுறத்
ரித்தன னம்மா.

(கு-ரை.) தாள்+தலை=தாடலை; இருசொல் லொருசந்தி. தாட
த் தந்து=திருவடியை எம்முடியில் (தீட்சைப் பெயரால்) சூட்டி.
ாள்=ஒளி; உரிச்சொல். எழுந்தருளுதல் முனம்=அவதரிப்பதன் முன்.
ங்கம+ஈசன்=சங்கமேசன். பரமசிற்கன லிங்கம்=இட்டலிங்கம். (25)

தரித்தபின் றனது மேனிதோன் றுமற் றுயெதிர் நின்றிட பப்
பர், திரித்துநல் வசவ னென்றுபே ரிட்டுச் சென்றனன் சிவன்
னைக் குருவாய், ஒருத்தர்தம் மிடத்திற் பாவனை செய்கென்
ரைப்பவ ருரைகெடத் தானே, அருட்குரு வடிவாய் வந்தருள்
ரிந்த வாலமார் சூலபா ணியனே.

(கு-ரை.) திரித்து=மாற்றி. (26)

பிறந்தமெய்ஞ் ஞானப் பிள்ளைநன் னுதலிற் பெருகொளி நீறு
மாண் களத்தில், சிறந்துள வமல லிங்கமுங் கண்டு செறிந்தவ ரனை
ரும் வியந்து, மறைந்தரன் குருவாய் வந்திவை புனைந்து மகவினை
சவனென் றொருபேர், அறைந்தன னென்ன வறிந்தன ரமல
றிவுணின் றறிவிக்க வன்றே.

(கு-ரை.) நுதலில்=நெற்றியில். களத்தில்=கழுத்தில். அறிவிற்
றிவாக நின்று அமலன் அறிவிக்க அறிந்தார் என்க. (27)

குறில்வழி லகரந் தனிநிலை யாயுங் கூடிய தகரமுன் னெழுத்
தன், றறிகுறி வடிவந் திரிதல்போ னந்தி யடல்விடை மெய்திரிந்
றறினும், நறுமலர் விழியிற் கண்டவ ரெல்லா நந்தியே யென்றுள
கிழ்ந்தார், பெறுதவ முயன்ற வன்னையும் பிதாவும் பெறுமுவ
கையினையா ருரைப்பார்.

(கு-ரை.) குறில் வழி லகரம் = குற்றெழுத்தின் முன்னின்ற
காரம். தனிநிலையாயும்=(றகரமாகத் திரிதலின்றி) ஆய்தமாயும். கூடிய=
வருமொழி முதலாக) வந்து புணர்ந்த. திரிதல்=திரிந்து வரல்; "குறில்
ழி லளத்தவ் வணையின் ஆய்த மாகவும்பெறும் அல்வழியானே" என்பது
ன்னூல். அடல்=வன்மை. விடை மெய்=இடப உருவம். திரிந்துறி
னும்=மாறி நின்றாலும். (28)

ஈன்றநா டொடங்கிச் செய்கடன் முற்று மியற்றினன் மாதர
ன்றுன், தோன்றுமோர் குழவிப் பதங்கடந் தெங்கோன் சொல்
ரு முன்னுறுங் காலை, ஆன்றமா மறைகண் முதலவாய்த் தான்
ன் னறிந்துள கலையெலா மறிந்தான், சான்றதா மதிய மிரவிவந்
றுப்பத் தன்கதிர் தானடை குதல்போல்.

(கு - ரை.) பதம்=பருவம். சொல்குரு=உபதேசகுரு. காலை= பொழுதில். சான்று=சாட்சி. (29)

பரமனை யிகழ்ந்து நெறியலா நெறிபோம் பரமத யானையை யடக்க, அரமுறு கூர்மை யங்குச மென்ன வானடி யாரெனு மாவிற், கொருமழ விளங்கன் றெனவருள் வசவ னெழுதநாள் வளங்கொள் கல்யாண, புரமுற வமண குழாத்தொடு மிக்க புரவலன் விச்சல னிருந்தான்.

(கு - ரை.) பரமதம்=புறச்சமயம். மழவிளங்கன்று=மிகச் சிறு பருவக்காளை; "ஒருபொருட் பன்மொழி சிறப்பினின் வழா" என்ற விதிப் படி, 'புனிற்றிளங் கன்று' என்பதுபோல் வந்தது. (30)

படியில்கல் யாண புரமெனுந் தூசு பரசிவ பத்தியாய் விளர்ப்பக்
கொடியபுன் சமண மாசுவர் பிடித்தாங் குவலயத் திருந்திடு மந்நாள்
அடியவர் செல்வ மெனும்வச வேச னங்குடன் வந்தநா தாம்பை
உடன்வர வந்தவ் விச்சல னகரி னுற்றன னற்றவர் நெருங்க.

(கு - ரை.) படியில் = உலகில். தூசு = ஆடை. விளர்ப்ப = வெளுக்க. மாசு=அழுக்கில். உவர்=உழமண். வலயத்து=பூமியில். உடன்=(கயிலையிலிருந்து) தன்னுடன். உடன்வர=தொடர்ந்து வர. (31)

வந்தனன் வசவ தேவனென் றுரைப்ப மன்னவன் விச்சல னறிந்து, மந்திரி யென்று மறைந்தவுட் பகையை மலிபொடி மூடிய தழலை, வெந்தழ லென்ன வறிந்திடா தெடுப்ப மென்கைதீண் டுத லென வெதிர்போய், உய்ந்திட வரிதாய்த் தன்மத மழிய வுடன்கொடு கோயிலுட் புகுந்தான்.

(கு - ரை.) உட்பகையை = உள்ளத்திற் பகையை. பொடி = நீறு. மதம்=சமயம். கோயில்=அரண்மனை. (32)

பொருந்துமத் தாணி யிடைத்தவி சொன்று புறமத கோளரிக் குதவி, இருந்திறற் சிங்கஞ் சுமந்தபூ வணைமே லிருந்தன னரசனப் போதில், அருந்திறற் றுணை காவலர் வேந்த ரமைச்சர்வெண் கவரி கொண் மாதர், நெருங்கிநிற் கரிய பேரவை யிடத்து நிகழ்ந்தமை யொன்றெடுத் துரைப்பாம்.

(கு - ரை.) அத்தாணி=அரச இருக்கை. தவிசு=பீடம். புறமத கோளரி=அயல் சமய (யானைகளை யழிக்கும்) சிங்கமாகிய வசவ தேவர். இரும்=பெரிய. பூவணை=மலராலான இருக்கை. (33)

## வேறு

இந்திர னெதிர்நின் றுடு மேந்திழை காதிற் செம்பொன
சுந்தர வோலை யொன்று சோர்ந்தெனச் சுருண்மு டங்கல்
அந்தர முகட்டி னின்று மரசனபே ரவையி டத்து
வந்தெதிர் விழுந்த தொன்று மானிடர் மருண்டு நோக்க.

(கு - ரை.) எக்திழை=அரம்பை. சோர்ந்தென=தவறி விழுந்
…போல. முடங்கல்=ஓலை. அந்தர முகடு=ஆகாயத்தின் உச்சி. (34)

…றவ செடுத்து வந்து நெடுங்கையிற் கொடுப்ப வாங்கி
…ன்றிகொண் மடங்க லன்னான் விரித்ததை யெழுத்து நோக்கித்
…ற்றலை யெழுத்தே யென்னத் தானுணர்ந் திலன்ம யங்கி
…ன்றிற லமண காலன் மலர்க்கையிற் கொடுத்தா னன்றே.

(கு - ரை.) மடங்கலன்னான்=சிங்கம்போன்ற அரையன். அமண
…லன்=சமணர்களுக்கு இயமனான வசவண்ணர். (35)

…ங்கிய முடங்க னோக்கி வசவநா யகனிவ் வோலை
…ங்குநின் றவிசின் கீழோர் தமனிய வைப்புண் டென்ற
…ாங்கிய தூண்செய் தோளா யுனக்குநான் காட்டு வேனென்
…ங்கதை யகழ்வித் தானவ் வரசர்கோ னதிச யிப்ப.

(கு - ரை.) தமனிய வைப்பு=பொன் புதையல். தூண்செய்=
…ரும்புத்) தூணால் அமைத்தது போன்ற. ஆங்கு அதை=அவ்விடத்தில்
…ச்சிம்மாசனத்தை. அகழ்வித்தான்=தோண்டினான். (36)

…கழ்ந்திட நிதிய வைப்பொன் றாடக மலைபி லத்தில்
…குந்திவண் வந்து மெல்லப் புறப்படல் போலத் தோன்ற
…கிழ்ந்தன னரசர் கோமான் வசவனைக் கண்ட போதே
…கழ்ந்தவொண் பயனு ணர்ந்து நெஞ்சக நனிவி யந்தான்.

(கு - ரை.) ஆடகமலை=பொன் மலை; மேருமலை. பிலத்தில்=
…தலத்தில் வியந்தான்=அதிசயித்தான். (37)

…பினுநல் வினையெ மக்குப் பயந்தவிவ் வசவ தேவன்
…பிலைநன் மலைக்கி ரண்டாங் கடவுளே யென்று சொல்லி
…யனுரை மடந்தை பொய்யா ளென்பதைப் புதுக்கி னனச்
…சயவினை விழியிற் கண்டோர் தெளிந்துநெஞ் சகம கிழ்ந்தார்.

(கு - ரை.) பயந்த=அளித்த. உரை மடந்தை=கலைமகள். (38)

…ந்திரிக் கிழமை நல்கி மரபுளி யுரிமை யாற்றி
…மந்தனைப் புரக்குந் தாய்போன் மற்றெனைப் புரத்தி யென்று
…ந்தனை களிப்ப வின்சொற் செப்பியா யிடையி ருப்ப
…ந்தியைத் தொடர்பு கொண்டா னுந்தகத் தடக்கை வேந்தன்.

(கு - ரை.) மரபுளி=(அப் பதவிக்கு உரிய) மரபை நினைத்து.
…ரிமை ஆற்றி=(அமைச்சுப் பட்டம் அளித்தற்கு) உரிய சடங்கு
…செய்து. புரக்கும்=காக்கும். நாந்தகம்=வாளாயுதம். (39)

…பெருந்தகை வசவ தேவன் பெருமைக்குத் தக்க வாறே
…ருங்கடி மணஞ்செய் வித்தா னலங்கல்வேன் முருக னன்னான்
…ருந்திய வம்ம ணத்தின் சிறப்புநாம் விரிப்ப தென்கொல்
…ரந்தனை யன்று தொட்டுப் புகன்றுகல் யாண மென்றால்.

(கு - ரை.) தகை = தகுதியுடைய. கடிமணம் = திருமணம்; இருபெயரொட்டு. அலங்கல் = மாலை. புரந்தனை = அந்நகரை. (40)

இவ்வகை கல்யா ணத்தி னிருப்பநா காம்பை யென்னும்
தவ்வைநம் வசவ தேவன் றன்பிர சாதந் தன்னால்
எவ்வமின் முத்தி மெய்யோ டிருக்கையி னளிக்கும் வீர
சைவநன் னெறிவ ளர்க்குந் தனயனை யீன்றா ளம்மா.

(கு - ரை.) தவ்வை = தமக்கை. எவ்வம் = துன்பம். ஐக்ய முத்தியை உடலோடிருக்கும்போதே பெறவேண்டு மென்பது வீரசைவக் கொள்கை. பிரசாதம் = அநுக்ரகம். (41)

மைந்தனை யீன் றுவந்து வசவநா மம்பு னைந்தாள்
சிந்தையில் கற்பு நங்கை நிசழ்திரு முகங்க ளாறும்
அந்தமி றலங்க ளாறு யறிவித்தற் குலகில் வந்த
கந்தனென் றுன்ன வந்நா காம்பைதன் மகன்வ ளர்ந்தான்.

(கு - ரை.) ஈன்று + உவந்து எனப் பிரிக்க. பக்ததலம், மகேச்வரத்தலம், பிரசாதித்தலம், பிராணலிங்கத்தலம், சரணத்தலம், ஐக்யத்தலம் எனும் ஆறு தலம் ஈமது ஆறுமுகங்களே என அறிவிக்க முருகவேளே அவதரித்தான் எனுமாறு வசவன் வளர்ந்தான் என்க. (42)

வீரமா கேச ரென்னு மென்பயிர் வளர்க்க வந்த
மாரிபோ னிகரில் சென்ன வசவதே சிசனி ருப்ப
நேரிலா வசவ நாம நெடுந்தகை மகவொன் றீன்று
சீருலாஞ் சங்க மேச தேசிகன் பெயர்பு னைந்தான்.

(கு - ரை.) பயிர் = உருவகம். மாரி = மழை. நேரிலா = ஒப்பிலாத. ()

மொழியினு னினைவா னுக்கான் முக்கணு னடியர் வேண்டிற்
றொழிவிலா துதவித் தாய்போ லோம்பினன் புறம தத்தோர்
வழியெலாம் வழக்கு மாற மலிபுகழ்ச் சைவ மென்னும்
பழியிலா வழிந டப்பப் பண்ணினன் வசவ தேவன்.

(கு - ரை.) ஓம்பினன் = காத்தான், நடப்ப = நடைபெற. (44)

அரனடி யவர்க்குத் தேனு வாகிய வசவன் சீர்த்தி
விரிநில முழுதும் போர்ப்ப வெள்ளிவெற் பினைய கன்று
தரைமிசை வந்தி ருந்த தவரெலா முணர்ந்து சென்றார்
பொருவில்கல் யாணத் திற்குப் போதல்போற் கல்யா ணத்தில்.

(கு - ரை.) தேனு = காமதேனு. தவர் = சிவகணங்கள். (45)

பலரொடு வரினு மெள்ளும் படிதனி வரினு மிக்க
நலமொடு வரினு மேனி நலமற வரினுஞ் சீர்சான்

ல்மகள் கணவன் றொண்டர் வரவுகண் ணுமினை நிர்ந்து
லமிசை வணங்கி யஞ்சி நின் றுநன் ருற்று நந்தி. (46)

(கு - ரை.) எள்ளும்படி=இகழுமாறு. தனி=தனித்து. நலம்=
றப்பு. நன்ருற்றும்=சிறப்பாக உபசரிப்பார்.

திியுங் குறியு நீத்துச் சரணரைச் சிவனே யென்று
தபங் கயமி றைஞ்சிப் பத்திசெய் குவனந் நந்தி
கறு சுவைத்தீங் கண்டாற் செய்தசெங் கரும்பும் வேம்பும்
தமொன் றுருமற் சாதி பெயர்விடுத் தறிதல் போல. (47)

(கு - ரை.) குறி=ஆண், பெண் எனும் அடையாளம். சரணரை=
டியாரை. தீங்கண்டு=கற்கண்டு.

தர்க டமைய கன்ற மலிதுற வினரெண் ணில்லார்
காதைய ருடனி ருந்துங் கொடுமய லிலரெண் ணில்லார்
மேதைகொ ளருச்ச னைக்கு வேண்டிவ முழுதுங் கொண்டு
போதுகள் வழாம லீசன் பூசைசெய் பவரெண் ணில்லார். (48)

(கு - ரை.) மலி=நிறைந்த. கோதையர்=மாதர்கள். மேதைகொள்=
றிவொடு அமைத்த. போதுகள்=காலங்கள்.

ரதங்கள் வேறு வேறு மேவிநிற் பவரெண் ணில்லார்
ரதஞ்செய் மகா ரிக்கட் பரத்தையர் மனைக ளோறும்
ரதஞ்செய் பவரெண் ணில்லார் தூயநன் னந்தி நாம
ரதன்ற னன்பின் வாழும் வழுவின்மா கேச ரம்மா.

(கு - ரை.) பரதம் என்பது:—பா=பாவம்; ரா=ராகம்; தா=
ளம் எனப் பொருள்பட்டு நடன கலையை உணர்த்திற்று. சுாதம்=கலவி.

துசெய் சமணர் முன்னர்ச் செயற்கருஞ் செய்கை காட்டி
துசெய் தவர்செ ருக்கு மாய்வுசெய் திமய மீன்ற
ந்துசெய் முலைம டந்தை துணைவனூர் தொண்டர்க ளெல்லாம்
துசெய் குவனென் றேவ லியற்றுவன் வசவ தேவன். (50)

(கு - ரை.) செயற்கருஞ் செய்கை=அதிசயச் செயல்கள். சூது
ன்பது சூதாடு கருவியை யுணர்த்திற்று. யாது=என்ன என்ன திருப்
ணி.

ளங்தெளி சரணர் தம்மோ டிம்முறை யொழுகு நாளின்
வுளந்தறி வரிய சோதி யல்லமன் வரவு நோக்கி
ளங்கெழு திருக்கல் யாண வளநகர் தனில்வா னேக்கும்
ளம்பயிர் போலி ருந்தா னெம்மையா ளுடைய நந்தி (51)

ஒன்பதாவது

அக்கமாதேவி உற்பத்திகதி முற்றிற்று.

கதி 9 - க்கு திருவிருத்தங்கள் - 533.

பத்தாவது

# அக்கமாதேவி துறவுகதி

தன்னைக் காணூ வேள்கணை பாயத் தடுமாறும்
மன்னைக் காலுஞ் சோறெனை விட்டருண் மாதேவி
மின்னைப் போலு மல்லமதேவன் விளையாடும்
கொன்னைக் காலிற் றேடி யடைந்தமை கூறுற்றாம்.

(கு-ரை.) காணூஉ = காண்பதன் பொருட்டு; காண என்றும் பாடம். மன்னை = மன்னனை. காலும் சோறு = கக்கிய உணவு. விட்டருள் = வெறுத்தகற்றிய; அருள்மாதேவி எனப் பிரிப்பினும் ஆம். கொன்னை = பெருமிதத்தை; காலத்தை எனினுமாம்; "அச்சம் பயமிலி காலம் பெருமையென் றப்பா னான்கே கொன்னைச் சொல்லே" என்பது தொல்காப்பியம். (1)

கொங்கைப் பொறையைக் கொண்டு மருங்குற் கொடிவாட
அங்கைக் குடநெய் பெய்தழ லென்ன வழகெய்தி
நங்கைக் கிணைகண் டிலமுல கெங்கணு நாமென்ன
மங்கைப் பருவ நண்ணினண் முற்றுணர் மாதேவி.

(கு-ரை.) பொறையை = பாரத்தை. மருங்குல் = இடை. (2)

வாதித் தொன்றோ டொன்றெழல் போன்முலை வந்துற்றும்
பேதைப் பெண்போற் காம முளத்திற் பிறவாமல்
பாதிப் பெண்மே னியனை னுமின்பப் பதிதன்னைச்
சாதித் தெய்துஞ் சாதன மோடு தலைப்பட்டாள்.

(கு-ரை.) வாதித்து = நான்முன் முன் என வாதமிட்டு. பேதை = ஏழு வயது பெண். பதி = சிவம். தலைப்படல் = முயற்சித்தல். (3)

தன்னை யறிந்திடை யீடற முக்கட் டலைவன்பாற்
பின்ன மறும்படி மேவு பெரும்பரு வப்பெண்ணைக்
கன்ன னெடுஞ்சிலை மன்மதன் வேரிக் கணைபாயும்
மன்னு மிளம்பரு வத்தின ளென்பர் மறைப்புற்றார்.

(கு-ரை.) இடையீடு அற = நீக்கமில்லாதபடி. பின்னம் அறல் = வேறுபாடு நீங்கல். கன்னல் = கரும்பு. வேரிக்கணை = தேனையுடைய மலர்ப்பாணம். மறைப்புற்றார் = அறிவிலார். (4)

வண்டு படாதலர் சண்பக மேயென மாறுகிப்
பண்டர னோடமர் செய்மதன் வண்டு படாமேனி
கண்டிடு மொண்சுட ரேயெனு மாறு கவின்பொங்க
ஒண்டவ னின்மலன் மாதமர் நாள்களி னோர்நாளில்.

(கு - ரை.) படாது=மொய்க்காமல். மாறுகி=வேறுபட்டு. மதன் ண்டு=காமன் கணை. ஒண்சுடர்=ஞான சூரியன். (5)

வீரங் குறைவின் மும்மத வேழ மிசைகொண்டு
தாருந் தோளும் பொங்க மதிக்குடை தன்மேலா
மாரன் கரிமேல் வந்தன னென்ன மணிப்பொற்றேர்
ஊருந் தெருவிற் கௌசிக மன்ன னுலாவந்தான்.

(கு - ரை.) வேழம்=யானை. தார்=மாலை. மும்மதம் = கன்ன, 'பால, பீஜமதங்கள். மதிக்குடை=சந்திரவட்டக்குடை. (6)

இயங்க டரங்க நெடுங்கட லென்ன வெழுந்தார்ப்ப
உயங்கு மருங்குன் மடந்தையர் பாடி யுடன்போத
வயங்க ளிவர்ந்திள மைந்தர் மருங்கி னடுத்தேகப்
புயங்க ளலங்க லிலங்க விசும்பிறை போல்வந்தான்.

(கு - ரை.) இயங்கள்=வாத்தியங்கள். தரங்கம்=அலை. உயங் =வருந்தும். போத=வர; போதர என்பதன் கடைக்குறை. வயங்க வர்ந்து=குதிரைகளின் மேலேறி. மருங்கில்=பக்கத்தில். அலங்கல்= லை. விசும்பிறை=இந்திரன். (7)

மாணு நெடுங்கரி மீது புரந்தனில் வந்தானைக்
காணு மடந்தைய ரேது முணர்ந்திலர் காமத்தால்
நாணு மிழந்தனர் தூசு மிழந்தனர் நன்றாகும்
பூணு மிழந்தன ராவி யிழந்திலர் போனார்கள்.

(கு - ரை.) மாணும்=சிறந்த. புரந்தனில்=நகரில். தூசு=ஆடை.

நல்ல மதந்தா னெண்கவு ளின்பா னன் றுண்ணச்
செல்லு சுரும்பே வெங்கரி யின்றாழ் செவியூடு
மெல்ல நடந்தே போவென மெள்ள விளம்பென்று
சொல்லி மறங்கூர் வேலன கண்ணார் துயர்கின்றார்.

(கு - ரை.) கவுள்=கன்னம். சுரும்பே=வண்டுகளே. வெங்கரி ன்=கொடிய யானையின். மறம்கூர்=வீரம் மிகுந்த. (9)

கோதையர் மாலா லிவ்வகை நோவக் கொடிமாட
வீதியி னூடு வருந்திறன் மன்னன் வினையில்லா
மாதவ னுகு நின்மல னுக்கோர் மகளாகும்
காதொடு காதுங் கண்மட மாதைக் கண்டானே.

(கு - ரை.) நோவ = துன்புற. வினையில்லா = இருவினை அற்ற. தும்=மோதும். (10)

கண்டன னேவிலை யோவெனு முன்னங் கழைவாங்கிக்
கொண்டனன் வாளி சொரிந்தன னேடிக் கொடுமாரன்

உண்டிலை யோவென வாவி தளர்ந்தே யும்பன்மேல்
மண்டல மாளு மன்ன னிருந்தான் வசமற்றே.

(கு - ரை.) கழைவாங்கி=கரும்பு வில்வினைத்து. கொண்டனன்=முற்றெச்சம்; பாரன் வாங்கிக்கொண்டு ஓடிச் சொரிந்தனன் எனவும், மன்னன் வசமற்று இருந்தனன் எனவும் ஒட்டுக. உம்பல்=யானை. (11)

கொங்கைப் பாரத் தான்மலர் வாசங் கூடாமல்
இங்கிப் பாரிற் போது மலர்க்க ணெழின்மாவோ
மங்கைக் கோலங் கொண்டு நிலத்தில் வருமின்றோ
அங்கைக் காந்தட் பொற்றொடி யாரோ வறியேனே.

(கு - ரை.) மலர் வாசம் கூடாமல் = மலரில் வசிக்கமுடியாமல். போதும்=வந்த. மாவோ=திருமகளோ. (12)

வஞ்சி நடந்தே யென்னெதிர் வந்தே மயல்செய்தாள்
நெஞ்சு தளர்ந்தேன் மாலின் விழுந்தே னிலைகாணேன்
அஞ்சலை யென்றே யின்றணை யாளே லனல்காணும்
பஞ்சு படும்பா டங்கச னம்பாற் படுவேனே.

(கு - ரை.) மாலில் = மயக்கில். நிலை = (உய்ந்து கடையேறும்) நிலைமை. அங்கசன்=காமன். படுவேன்=இறப்பேன். (13)

என்ன நினைந்தே மன்னவன் வெந்தீ யிழுதாகி
முன்னர் மருங்கே நின்ற வொருத்தன் முகநோக்கிப்
பொன்னென வந்தவ் வாய்தலி னின்று புறப்பட்ட
கன்னி யணங்கார் நீயறி கென்றான் காமுற்றே.

(கு - ரை.) வெந்தீ இழுதாகி=நெருப்பிற்பட்ட வெண்ணெய்போலுருகி. பொன்=திருமகள். வாய்தலின்=வாயிற்படியின். (14)

ஓடி யறிந்தே யன்னவன் வந்தங் குரைசெய்ய
வாடு மருங்குன் மங்கையை யின்னான் மகளென்று
நீடிய வெந்துயர் மன்ன னறிந்தென் னெறியாலும்
கூடுவ னிந்த வணங்கினை யென்று குறித்தேகி.

(கு - ரை.) வாடும்=இளைத்த. நெறி=வழி. (15)

கோயிலின் மேவி யிருந்துயர் ஞானக் குறிகூறும்
தூயவ ராகிய வாரியர் தாமுஞ் சுடர்செம்பொன்
சேயிழை யாரும் வலிந்துறி னின்பு செயாரென்று
வாயிலி னலணை வேனென மன்னன் மனத்தெண்ணி.

(கு - ரை.) குறி கூறும்=இலக்ஷணத்தை விளக்கும். ஆரியர்=ஞானாசாரியர். வாயிலினல்=தூதினல். வலிந்து=பலாத்கரித்து. (16)

## வேறு

நூது வல்லநன் முதுக்குறை மாதரைத் துணிந்து
நீதி வல்லவ னிருமலன் மகடனை நீவிர்
நீதி லெம்மனைக் கிழத்தியாம் படியுரை செய்து
போது மின்கனென் றேவினன் வியனிலம் புரப்பான்.

(கு - ரை.) முதுக்குறை=பேரறிவு. துணிந்து=தேர்ந்து. (17)

ஐய வன்னதே செய்குவ மெனப்புகன் றகத்தில்
பைய வந்துநன் னிருமலன் றிருமுகம் பார்த்து
வைய மன்னவன் கருத்தினை வகுத்தனர் மறுத்துத்
துய்ய மங்கைமீ ரெமக்கடா திதுவெனச் சொன்னான்.

(கு - ரை.) அகத்தில் = (நிருமலன்) மனையில். பையமிருது
க. வகுத்தனர்=வகைபடக் கூறினர். (18)

வேந்தன் மாமனை நும்மக ளாயினவ் வேந்தன்
சார்ந்த வாழ்வெலா நும்மவென வறிகிலீர் தாமே
போந்த வோர்திரு மகள்வர வினைப்புறம் போக்கும்
மாந்தர் யாருள ரென்றுமங் கையர்சொல வகுப்பான்.

(கு - ரை.) பின்னிரண்டடியில் 'வலியவரு சீதேவியைக் காலாற்
ளுவதோ' என்னும் பழமொழியை அறிக. (19)

இம்மை சேர்பயன் கருதியே தகாதவ ரிடத்தில்
கொம்மை வார்முலை மகட்கொடை நேர்ந்தவக் கொடியார்
அம்மை யாழ்நிரை யத்திடை வீழ்ந்தன ரழுந்தித்
தம்மை நோக்குந ரொருவரு மின்றியே தளர்வார்.

(கு - ரை.) கொம்மை=குவிவு. கொடை=கொடுத்தற்கு. கொடி
=தீவினையார். அம்மை=மறுமையில். நிரயம்=நரகம். (20)

தமக்க டாதது செய்துயிர் வாழ்வது தன்னில்
சுமைக்க டாதமெய் விடுத்தலே நன்றெனச் சொல்வர்
எமக்க டாதது புகன்றனிர் மங்கைமீ ரிச்சொல்
நுமக்க டாததென் றியம்பலு மங்கையர் நுவல்வார்.

(கு - ரை.) சுமைக்கு அடாத=தாங்கத்தகாத. (21)

உறையில் வாளொடு மாவழங் குறுவனத் தோடி
மறவ னோர்பொரு டருகென விரத்தலை மானும்
இறைவன் வாழ்குடி தன்னிலொன் றொருபொரு ளிரத்தல்
அறவ னாகிய நீயிதை யறிந்திலை யந்தோ.

(கு - ரை.) மாவழங்குறும் = மிருகங்கள் வசிக்கும். மறவன்=
…டன். இரத்தல் = யாசித்தல். இறைவன் = மன்னன். வாழ்குடி

தன்னிலொன்று=(தன்னாணைக் கீழடங்கி) வாழுங் குடிகளில் ஒருவனிடத்தில். அறவன்=தரும சாத்திரமறிந்தவன். "வேலொடுநின்றா னிடுவென்றது போலும் கோலொடு நின்றா னிரவு" என்பது குறள். (22)

என்று மாதரார் கூறலு நிருமல னெங்கள்
மன்றல் வார்குழல் பேதையோ வல்லளும் மனத்தைச்
சென்று கூறுமி னவண்மன மிசைந்துரை செய்யின்
நன்று போமினென் றியம்பின னவர்மன நயந்து.

(கு - ரை.) வல்லள்=அறிவு பலமுள்ளவள். நன்று=எனக்குச் சம்மதந்தான் எனும் பொருளில் வந்தது. (23)

மங்கை பாலடைந் தறைகுவர் மதன்வலி மாயக்
கொங்கை மாமுகிழ்ப் பூங்கொடி நீயருள் கூர்ந்தே
எங்கள் கோமக னுருயிர் நிறுத்தினை யென்னில்
அங்கண் மாநிலத் துயிர்க்கெலா மன்னையா குவையால்.

(கு - ரை.) முகிழ்=அரும்பு. பூங்கொடி=உவமத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை. (24)

என்ன வோதலு நிருமல னீன்றநு ளென்றாய்
மன்ன னுன்மனை துறக்குமோர் சூழ்ச்சியை மதித்துப்
பொன்ன னீரர செனக்கொரு சூளினைப் பொருந்திப்
பன்னு மாயினீர் பணித்தது நன்றெனப் பகர்ந்தாள்.

(கு - ரை.) என்தாய்=எனது தாயாகிய மாதேவி. மனை துறக்கும்=வீட்டைவிட்டு வெளிப்படும். மதித்து=தீர்மானித்து. சூள்=சபதம். பன்னுமாயின்=உரைக்குமெனின். பணித்தது=உரைத்தது. (25)

தூது சென்றவர் பொற்கொடி சொல்லிய சொல்லால்
காதல் கொண்டன ளென்றுளந் திரிந்துதாங் கருதி
மாது நின்பெருங் கருணைசெய் வதற்கெங்கண் மன்னன்
யாத றைந்தனை யதுசெயத் தக்கவ னென்று.

(கு - ரை.) மாது=மாதேவியே! அறைந்தனை=கூறினை. (26)

உள்ள மார்வமோ டேகியம் மடந்தைய ருரைப்ப
வள்ள லாகிய மன்னவன் மனநனி மகிழ்ந்து
தெள்ளு மாரமு தனையவ ளிருந்துழிச் சென்றான்
எள்ளு காமநோய் கொண்டவ னென்செய விசையான்.

(கு - ரை.) ஆர்வம்=களிப்பு. உரைப்ப=(அச் செய்தி) கூற. உழி=இடத்தில். எள்ளும்=வெறுக்கத் தகும். யாவும் செய்வன் என்றபடி. (27)

வல்லி கொங்கையைப் பொன்மலை யென்னவே மதியான்
இல்லு றுங்குட மாகவே யெண்ணின னுதலை

லெ னும்படி நினைத்தனன் வெண்பிறை யென்னுன்
ால்லு வன்றனக் ககப்படு மடந்தையாய்த் துணிந்து.

(கு - ரை.) பொன்மலை வெண்பிறை என்பன, சிவபிராற்கன்றி
ர்க்குரியவள் அல்லள் என்பதைக் குறித்தன. இல்லுறுகுடம்=வீட்டி
ள குடம். துணிந்து=நிச்சயித்து. (28)

நுள்செய் தென்னைநீ யளிக்கிடு மதற்குநான் செய்வ
ரைசெய் நானது செய்வனென் றரசர்கோ னுரைப்ப
ரைசெய் தோளினு யென்னைநீ வலிந்துபுல் லாமைக்
ாருசொ லுண்மைசொல் லென்றன ளொருபுடை யொதுங்கி.

(கு - ரை.) அளித்திடும்=காக்கும். புல்லாமைக்கு=தழுவாமைக்கு.
உண்மைசொல்சொல்=ஒப்பற்ற உறுதிமொழி கூறுக. புடை=பக்கம்.
புடை ஒதுங்கி ஒரு உண்மை சொல் சொல் என்றனளென்க. (29)

ன்க ருத்திசை வாலன்றி நின்னையான் வலியேன்
ன்ப தற்கொரு சூளுரைக் குவன்முகி லெழுந்த
ன்கொ டிச்சிறு மருங்குலாய் கேளென வொள்வேல்
ன்பு கர்க்கருங் கடாக்களிற் றரசர்கோன் புகல்வான்.

(கு - ரை.) இசைவு=உடன்பாடு; சம்மதம். முகிலெழுந்த=மேகத்
தோன்றிய. மின்கொடி=மின்னற் கொடிபோன்ற. புன்புகர்=சிறு
ளிகள். கருங்கடாக் களிறு=கரிய மதயானைகள். (30)

## வேறு

ந்தநல் விருந்தி ருப்ப மனையினுற் றருந்து வானும்
தியி னுணவு வேறு பண்ணுபா தகனுந் தாயும்
ந்தையு முணவுண் ணாத சழக்கனு முச்சிப் போதின்
ாந்தவர் தமைநோக் காம னுகர்ந்திடு கொடியன் றானும்.

(கு - ரை.) இருப்ப=காத்திருக்க. வேறு பண்ணும்=வேறு படுத்
ம். சழக்கனும்=தீயவனும். நொந்தவர்=வருந்தியவர். (31)

ந்தைசெய் யுணவி னுனு நிருமலன் பூசை யின்றி
ந்துண வருந்து வானு மறுத்தவூ னுகர்விப் பானும்
ந்தநல் வினையாற் செல்வஞ் சார்ந்தவர் தம்மைக் கண்டு
ந்தனை பொறுத மூங்கித் தீர்வினுண் மகிழ்வான் றானும்.

(கு - ரை.) நிந்தைசெய் உணவினனும் = பிறர் பழிக்கும் உணவு
ாள்பவனும். இன்றி=செய்யாமல். மறுத்த ஊன்=அறிஞர் மறுத்த
மிச உணவு. நுகர்விப்பானும்=உண்ணச் செய்பவனும். தந்தம்=தங்
தங்களது. அழுங்கி=வருந்தி. தீர்வின்=செல்வம் ஒழிந்தகாலத்து. ()

ன் றுண விடாம லான்பால் கறந்துகொள் பவனுஞ் செய்த
ன்றிகொல் பவனுங் கோடி நடுநிலை தவறு வானும்

கொன்றுயிர் பதைப்ப நோக்குங் கொடியனும் போர்க்க ளத்தில்
தன்றலை வனைவி டுத்துச் சாய்ந்துபோ மடமை யானும்.

(கு - ரை.) உண=உண்ண. ஆன்=பசு. நன்றி = உபகாரம். கோடி=அறநெறியிற்கோணி. சாய்ந்துபோம்=புறங்காட்டி ஓடும். (33)

அடைக்கல மெனவந் தானை யளித்திடா தகற்று வானும்
கொடுக்குது மெனவு ரைத்துக் கொடானுமொண் கொடைவி லக்கி
விடுக்குறு மவனும் பாவ வினையிடத் துதவி யாகி
நடக்குறு மவனுந் தேர்ந்து நட்டபின் வஞ்சிப் பானும்.

(கு - ரை.) அளித்திடாது=காவாது. கொடை=(பிறர் செய்) ஈகையையும். விலக்கி விடுக்குறும்=தடுத்து விடும். வினையிடத்து=செயலில். தேர்ந்து=தெளிந்து. (34)

குரவர்தம் முரைக டக்குங் கொடியனுந் துறந்து ளார்தம்
வரவெதிர் கண்டெ ழாத மறவனு மறிந்தான் போன்று
கரவினி லருநூல் கற்குங் கயவனும் புதிய ராகி
இரவினில் வந்த நல்லோர்க் கிடங்கொடா தகற்று வானும்.

(கு - ரை.) குரவர்=தாய், தந்தை, தம் முன்னோன், குரு, மன்னன் ஆகிய ஐந்து பெரியவர். மறவனும்=கொடியனும். அறிந்தான் போன்று=(எல்லாக் கலைகளையும்) அறிந்தவன்போலப் பிறர் மதிக்க நடித்து. கரவினில்=வஞ்சகத்தால். கற்கும்=(வித்துவ சிரேட்டரை யடுத்து இதில் உங்கள் அபிப்பிராயம் என்ன என்பதுபோல் கூறி, அவர்கள் அதன்பொருள் கூற, அம்முறையில்) கற்கும். கயவனும்=கீழ் மகனும். (35)

முன்புகழ்ந் துரைத்துப் பின்னர் முறுவல்செய் திகழ்வான் றானும்
தன்பெருங் கிளைநல் கூர்ந்து தளர்வுற வாழ்கின் றானும்
அன்புகொண் டொருவன் வைத்த வரும்பொருள் கவர்கின் றானும்
துன்புறுந் தொழில்செய் வித்துச் சொல்பொரு ளிலையென் பானும்.

(கு - ரை.) நல்கூர்ந்து=வறுமையுற்று. வாழ்தல்=தான்மட்டும் இன்புறல். வைத்த (தன்னிடம்) அடைக்கலம் வைத்த. சொல்பொருள்=சொன்ன கூலி. (36)

கற்பழி மனைவி யோடு கலந்திருப் பவனு மற்றோர்
பொற்புடை மனைவி தன்னைப் புணர்வதற் கெண்ணு வானும்
சொற்பொரு ளுணர்த்தி னானைத் தொழவுள நாணு வானும்
விற்பன வலாத விற்று மெய்வளர்த் தழிகு வானும்.

(கு - ரை.) பொற்புடை மனைவி தன்னை = பொலிவுடைய (அயலான்) இல்லாளை; தன்=சாரியை. உணர்த்தினானை=அறிவுறுத்திய ஆசிரியனை. உளம்=உள்ளம். விற்பனவலாத=மனைவி, பசு, சத்தியம், நூற்களாதிய. மெய்=உடல். (37)

மலி வயலி லாற்றி னந்தனத் தால யத்தில்
மல மொழிப்போன் றானுந் தனிவழி விலக்கு வானும்
லமொழி பொய்த்து விற்கும் வெய்யவா ணிகனுந் தாழ்ந்த
மிலி தன்குற் றேவல் கூலிகொண் டியற்று வானும்.

(கு - ரை.) நலம்=வளம். நந்தனத்து = பூஞ்சோலையில். வழி க்கல்=வழியில் தடுத்தல். விலைமொழி = (நியாய) விலைப்பேச்சு. ழ்ந்தகுலமிலிதன்=குலவொழுக்கம் அற்றுத்தாழ்ந்த ஒருவனது. குற்றே =கேவலமான பணியை. (38)

வுசெய் தறிந்த சொல்லை வுவர்த்துழிக் கூறு வானும்
ர்பிழை தனையே நாடிப் பிறரொடு பேசு வானும்
றைவழு வுறுகொ டுஞ்சொன் முனிவிடை மொழிகு வானும்
றிவழி மனைவி சொல்லின் வழிநிற்கு மறிவி லானும்.

(கு - ரை.) உவர்த்துழி=வெறுத்து நீங்கிய காலத்து. (39)

ந்தவர் தமைப்பி ரித்துக் கலகங்கண் டிடவல் லானும்
ந்தரு நூலி னில்லாப் பொருளினைக் கூறு வானும்
ந்தனை யழுக்கா றெய்தி நகைத்திகழ் கிற்போன் றானும்
லிந்தவ ரிடத்து மிக்க வெகுளியைப் பெருக்கு வானும்.

(கு - ரை.) கலந்தவர்=நண்பர். புலம்தரும்=அறிவைப் பெருக்கும். ம்தனை=நல்நடத்தையை. (40)

ண்ணியம் பிறர்பொ ருட்குப் புரிபவன் றானு மிந்த
ண்ணிடை யின்பத் திற்கா மறுமைசெய் தொழில்வி டுக்கும்
ண்ணிய வறிவி லானுந் தவத்தரை யிகழ்கிற் பானும்
ண்ணிய வினையி லென்றும் பாவமே பயில்கின் றானும்.

(கு - ரை.) அயலார் பொருளைத் தருமஞ்செய்து தனக்குப் புண்ணி சேர்ப்பவன் என்பது முதலடியின் பொருள். மறுமைசெய்தொழில்= பேற்றை யுண்டாக்கும் தூய செயல். தண்ணிய=அமைதியான. பண் யவினையில்=தான் செய்த செயலில். பயிலுதல்=பழகல். (41)

வனா னுண்மை நீயா தறைந்தனை யதுசெய் தன்றி
வுவே னாயி னென்று வேள்விரும் பழகன் கூறக்
விநேர் விழிமா தேவி கருத்திசைந் தற்றே யாயின்
பாவம்வா வென்று சொன்னாள் புரவல னுவகை பூத்தான்.

(கு - ரை.) ஆவனான் = (மேலுரைத்த பாவிகளில் ஒருவன்) வேன் நான். உண்மை=(இது) சத்தியம். யாது அறைந்தனை=எதைக் றுகின்றாயோ. அது=அதனை. மேவுவேனாயின்=(உன்னை) நெருங்குவே யின். வேள்=மன்மதன். அற்றேயாயின்=அங்ஙனம் செய்ய உடன் வதாயின். (42)

கோயிலின் முன்னர்ச் சென்ருன் கொற்றவன் சிவிகை யேற்றி
ஆயிழை மடந்தை நல்லா ரருகுசூழ் வுற்றுச் செல்லப்
போயின ளரசர் கோமான் புக்குழிப் புக்கா ளொள்வேல்
சேயரி நெடுங்கட் செவ்வாய்த் திலகவா ணுதன்மா தேவி.

(கு - ரை.) கோயிலின் = அரண்மனையின். சிவிகை=பல்லக்கில். நல்லார்=தாதியர். புக்குழி = நுழைந்த இடத்தில். ஒள்வேல் சேயரி நெடுங்கண் செவ்வாய் திலகவாணுதன் மாதேவி கோமான் புக்குழிப்புக் காள் என்க. சேயரி=செவ்வரி படர்ந்த. (43)

மடந்தையைத் தனிக்கண் டங்கி மருவிய வரக்கே போல
உடைந்துநெக் குருகி யாற்ரு வுள்ளமோ டிளம்பூங் கொம்பே
கடந்திடற் கரிய காமக் கடல்கடந் தேறக் கொங்கைக்
குடந்தரத் திருவு ளத்திற் கோடியென் றரசி றைஞ்ச.

(கு - ரை.) அங்கி=அக்கினி. மருவிய=கலந்த. உடைந்து=மன முடைந்து. நெக்குருகி=கரைந்து. ஆற்ரு = தாளாத. தர=(எனக்கு) அளிக்க. கோடி=கொள்ளுதி. (44)

காவலன் காம மிக்க கழிபடர் கிளவி கண்டு
பாவைபுன் முறுவல் செய்து பண்பெனுந் தொடரால் யாப்புண்
டோவல்செய் யாது நிற்கு மொருகளி றனையா யான்சொல்
ஏவல்செய் திட்ட பின்ன ரென்னெடு பேசு கென்ருள்.

(கு - ரை.) கழிபடர் = மிகவும் படரும். காமமிக்ககிளவி=காம மிகுந்த மொழிகளை. பண்பு=நற்குணம். யாப்புண்டு=கட்டுப்பட்டு. ஓவல் செய்யாது=நீங்காது. சொல் ஏவல்=கூறிய பணி. (45)

ஏதுநான் செய்வ தன்ன தியற்றுவ னறைதி யென்ன
ஓதினு னரச னேத வொண்டொடி யயன்மா றேடும்
சோதிமா சிவலிங் கத்தைத் தூயையாய்க் கரபீ டத்தில்
போதினு லருச்சித் தென்னைப் பொருந்துதி பின்ன ரென்ருள்.

(கு - ரை.) அறைதி=சொல்லுக. ஒண்தொடி=மாதேவி. கர பீடத்தில்=உள்ளங்கையான ஆதனத்தில். போதினுல்=மலர்களினுல்.

எல்லையில் காமம் பொங்க விளமுலை ஞெமுங்கத் தோளால்
புல்லுவ னென்றெ ழுந்த புரவலன் றனைத்த டுத்துச்
சொல்லிய தன்ன மன்னுள் சுரத்துணீர் முகந்து வாயில்
செல்லுமொண் கரத்தை யோடிச் சென்றுபற் றுதலை யொக்கும்.

(கு - ரை.) பொங்க=மேலிட. ஞெமுங்க=அழுந்த. அன்னமன் னுள் சொல்லியது என வொட்டுக. சுரத்துள் = பாலைவனத்துள். முகந்து=அள்ளி. வாயில்செல்லும்=வாய்க்குக்கொண்டுபோகும். (47)

முகையிடை முருகுண் டாயின் முளையிடை விளைவுண் டாயின்
மகவிடை மதன வின்பம் வருவதுண் டாயிற் சைவப்

கையொடு மருவி நின்ற பார்த்திபன் றனது ளத்தின்
கவிடை யமலற் போற்று மொழுக்கமும் வந்து நண்ணும்.

(கு - ரை,) முகை=அரும்பு. முருகு=மணம்; தேனுமாம். சைவப்
யொடு=சைவத்தைப்பழித்த சமண சமயத்தில். உகைவிடை=
த்தும் இடபம். ஒழுக்கம் (சைவ) ஒழுகலாறு. (48)

புறுஞ் சூணி னைந்து தீண்டில னரச னின்று
புராஞ் சீறு முங்கண் முதல்வன்பூ சனைதான் யாங்கள்
பொழு துஞ்செய் தக்க தன்றென வினையி லாகின்
புறு தோளும் யாங்க ளொடுவதன் றெனப்பு கன்றான்.

(கு - ரை.) நின்று=(தடைப்பட்டு) நின்று; இன்று எனப் பிரித்து,
போது அரசன் தீண்டிலன் எனினுமாம். சீறும்=சினக்கும். துப்புறு=
மைபொருந்திய. (49)

விழ் குழன்ம டந்தை வாயுரை கையும் வாயும்
டிய தெனவ டங்கிக் காமமிந் தனமி றீப்போல்
டிட வறிதி ருந்தான் கிளர்மணித் தூண்செய் தோளான்
டிலை யயில்வேற் கண்ணு ணீத்தனள் போக வெண்ணி.

(கு - ரை.) மட்டு=தேன்; வாசனையுமாம். வாயுரை=வாய்ச்சொல்.
தனம்=விறகு. தூண் செய்=தூணுல் செய்ததுபோன்ற. நெட்டிலை=
ட அரசிலை போன்ற. அயில்=கூர்மையான. நீத்தனள்=(அரசனை)
: முற்றெச்சம்: (உலகைத்) துறந்து எனினுமாம். (50)

வெனு மரசு நெஞ்சத் தொன்னகர் கொளவ வாவாம்
றவன தாணை யெல்லா மிரிதல்போற் பூண்கள் யாவும்
வையு மகற்றி யோதி யவிழ்த்துவார் மைக்கு ழம்பின்
றவு று மணிப்பொற் பாவை போலுடன் மறைய விட்டாள்.

(கு - ரை.) அரசு=மன்னன். நெஞ்சம்=உள்ளம். அவாவாம்=
சையாகிய. இறைவனதாணை=இராசாக்கினை. இரிதல்=சிதைந்தோடல்.
வையும்=ஆடைகளையும். ஓதி=கூந்தல். (51)

ளடைந் தனள்கொ லென்று மருண்டுமன் னவனி ருப்பத்
ருளடைந் தங்கை கொண்ட சிவலிங்கத் தொடுகி னைந்த
ருளடைந் தெனம கிழ்ச்சி பொங்கமன் னவனை நீங்கி
ளடைந் தொழுகு கண்ணு ளணிமறு கூடு சென்றாள்.

(கு - ரை.) மருள்=அறிவு மயக்கம். தெருள்=தெளிவு. சிவலிங்
=இட்டலிங்கம். அடைந்தென=பெற்றார்போல. கருணைமிக்கொழு
கண்ணினளென்க. அணிமறுகூடு=அழகிய வீதியில். (52)

னையும் பிதாவுங் கேளா வருமகட் கடுத்த தென்னென்
னிவந் தழுங்க நீவி ருய்மக ளென்று மாழ்கி

இன்னல்கொண் டிரங்கன் மின்போ மென்னைநா னறியத் தேடித்
தன்னிருங் கருணை செய்யுஞ் சற்குர வனைச்சார் கிற்பேன்.

(கு - ரை.) என் அடுத்தது = என்ன நேர்ந்ததோ. அழுங்க = வருந்த. மாழ்கி = மயங்கி. இருங்கருணை = பெருங்கருணை. (53)

என்றவ ளவரை நோக்கா தேதிலர் போல கன்று
சென்றன ளிருமலப்பேர்ச் செல்வனுஞ் சுமதி தானும்
நன்றிவ ளினைந்த தென்று நம்முடை மரபிற் கெல்லாம்
நின்றிடும் புகழென் றெண்ணி நிறுவினர் தங்க ளுமம்.

(கு - ரை.) அவள் = மாதேவி. ஏதிலர் = அயலார். நன்று = நலமே. நின்றிடும் = நிலைபெறும். (54)

கண்டவ ரெல்லா நெஞ்சங் கரைந்துகக் கண்ணீர் மல்கத்
திண்டிற லரசன் பின்னர்ச் சிவிகையூர்ந் தலர்பூங் கோயில்
ஒண்டிரு மகள்போற் சென்ற வொண்டொடி யிப்பேய்க் கோலம்
கொண்டிவண் போகா நின்ற கொள்கையே தறியே மென்பார்.

(கு - ரை.) உக = நெக்குருக. மல்க = பெருக. அலர்பூங்கோயில் = மலர்ந்த அழகிய அரண்மனையில். ஏது = ஏதுவோ? (55)

மங்கையை யிவணங் கண்டேம் வயிறெரி தவழ நின்றேம்
இங்கிவ டன்னை யீன்று ரென்படு வாரோ வென்பார்
மங்கல வடிவங் கண்டு மகிழ்ந்தகண் ணிதுவுங் கண்டு
பொங்குறு துயரங் கூரப் புரிந்ததெப் பாவ மென்பார்.

(கு - ரை.) இவணம் = இக்கோலத்தில். இதுவும் = இக்கோலத்தை யும்; இறந்தது தழீஇய எச்சவும்மை. (56)

இன்னண நகர மெல்லா மிரங்கமா தேவி யம்மை
கன்னலு மமுதுந் தேனுங் கைப்பபே ரின்ப நல்கும்
தன்னிகர் குருகு கேசன் றன்னையே தேடிச் சென்றாள்
மென்னிழல் விரும்பி மிக்க வெயில்சுடச் செல்வார் போல.

(கு - ரை.) குருகுகேசன் தன்னையே = குருவாகிய அல்லமனையே. ()

அடவிக டொறும டைந்து மடுக்கல்க டொறுமி வர்ந்தும்
கடிநகர் தொறும்பு குந்துங் காமனை வென்ற வல்லி
மடிவறு மனத்தி லன்பு வளர்தரக் கருணை யாலெம்
குடிமுழு தடிமை கொள்ளுங் குரவனைத் தேடு கின்றாள்.

(கு - ரை.) அடவிகள் = காடுகள். அடுக்கல்கள் = மலைகள். இவர்ந்தும் = ஏறியும். கடி = காவல்நிறைந்த. வல்லி = கொடிபோன்ற மாதேவி. மடிவறு = குற்றமற்ற. குரவனை = ஞானசிரியனை. (58)

பத்தாவது

அக்கமாதேவி துறவுகதி முற்றிற்று.

கதி 10 - க்கு திருவிருத்தங்கள் - 591.

பதினோராவது

# கொக்கிதேவர்கதி

அருள்செயு மல்லம னரிமி டப்பெயர்க்
குரவனை மெய்யொடு கலந்து கொண்டுதான்
பரவுறு மடியர்தம் பவந்து றந்துபோய்த்
திரிதரு நிலையினைத் தெரிந்து செப்புவாம்.

(கு-ரை.) அரிமிடப்பெயர்க் குரவனை=அரிமிடன் எனும் பெய
டைய ஞானயோகியை. மெய்யொடு=(தனது) மெய்ம்மை வடிவுடன்.
வுறும்=வழிபடும். பவம்=பிறவி. திரிதரும்=உலவும். (1)

சீர்நிலை யல்லம தேவன் சூல்கொளும்
கார்நினை மயிலெனக் கருதித் தன்னையே
பார்நில மிசையமர் பத்தர் தம்மையாள்
ஓர்நினை வொடுநடந் துலாவு நாள்களுள்.

(கு-ரை.) சூல்கொளும்=(நீரைக்) கருப்பமாகக்கொண்ட. கார்=
கத்தின் வருகையை. (2)

ஒன்றொரு நாளொரு திசையி னோங்கருள்
குன்றனை யானொரு கோலங் கொண்டுதான்
சென்றன னவனெதிர் சிறந்து தோன்றிற்று
மன்றன்மென் மலரிள வனமொன் றுயிடை.

(கு-ரை.) ஒன்றொருநாள் = பொருந்திய ஓர் நாள். ஓங்கு=
ர்ந்த. அருள்குன்று அனையான்=அல்லமன். கோலம்=வேடம். 'இள
ர்வனம்' என மாறுக. மன்றல்=மணம். (3)

சிறுபொழு தைந்தினுந் திரிவி லாதபேர்
அறுபொழு தினுமிக ழவிழ்ந்து தேன்சொரி
நறுமலர் நிறையுமந் நந்த னத்தினைப்
பெறின்மக பதிவளம் பெறவு வந்திடார்.

(கு-ரை.) சிறுபொழுது ஐந்தினும்=மாலை, யாமம், வைகறை,
யல், நண்பகல் ஆகிய ஐந்து சிறுபொழுதிலும்; எற்பாடு என ஒன்று
டி பொழுதை ஆறு என்பது மொன்று. திரிவு=மாறுபாடு. பேர் அறு
ாழுதினும்=கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவே
ல் ஆகிய ஆறு பெரும் பொழுதினும். பெறின்=ஒருவர் அடையின்.
பதிவளம்=இந்திரனது பொன்னுலகு. (4)

படிமிசை தவம்பல பயின்று நொந்தவர்
வடதிசைக் கயிலையின் மருவ வேண்டலிக்
கடிமலர்ப் பொழின்மணங் கலந்த தென்றல்வந்
துடன்மிசை தவழ்தர லொன்று முன்னியே.

(கு - ரை.) தொர்ந்தவர்=சேர்ந்தவர்கள். மருவவேண்டல்=சேர விரும்புதல். மிசை=மேல். ஒன்றுமுன்னியே=ஒன்றையே கருதி. (5)

கண்ணிறை மலர்பல கண்டு கண்டுபோய்
உண்ணுறு நறுமது கொளவு ழன்றிடும்
எண்ணரு மளியின மிரையுந் தன்மையால்
தண்ணுறு நந்தனம் வண்டின் சந்தையே.

(கு - ரை.) கண்ணிறை=கண்நிறைந்த. மதுகொள=தேனுண்ண. உழன்றிடும்=அங்குமிங்கும் சுழன்றிடும். மலர்களின் பெருக்கை வண்டின் பெருக்கால் உணர்த்தினார். (6)

நறுமலர் நிறையுமந் நந்த னத்தினைக்
குறைவற வளிப்பவன் கொக்கி தேவனென்
றறைதரு பெயரினா னினிய னாயிடைத் ·
திறமுறு செயலினைச் செய்து நின்றனன்.

(கு - ரை.) அளிப்பவன்=காப்பவன். அறைதரு=கூறப்பெறும். செயல்=முயல்வு. திறமுறு=ஆற்றலுடைய. (7)

நின்றவன் றனையரு ளினைந்த நெஞ்சொடு
சென்றன னல்லம தேவன் கண்டிவன்
புன்றொழில் விடவரும் பொருளு ணர்த்துவல்
என்றரு கடைந்தைய சரண மென்றனன்.

(கு - ரை.) இவன் = இக்கொக்கிதேவன். புன்தொழில்விட = தன் அற்பமான தொழிலை விட்டகல. அரும்பொருள்=பிறர் அறிதற்கு அரிய மெய்ப்பொருளை. அருகு அடைந்து ஐயா சரணம் என்றனன் என்க.

தானெதிர் நிமலனைச் சரணெ னத்தொழாத்
தேனலர் வனத்தனின் செயலி யாதுநின்
மேனியின் பெயரெது விளம்பு கென்றலும்
ஞான நல் விளக்கனா னவிறன் மேயினான்.

(கு - ரை.) எதிர்=எதிர்கொண்ட. நிமலனை=அல்லமனை. அலர் வனத்தன் = பூஞ்சோலைக்குரிய கொக்கிதேவன். நின்செயல் = உமது தொழில். மேனியின்=திருமேனியினுடைய. (9)

பத்தர்தம் மனைதொறும் பத்திப் பிச்சைகொண்
டெத்திற வினையுமின் றிருப்ப னல்லமன்
உத்தம வென்பெயர் பெயரு னக்கெனென்
றத்தனும் வினவத்தன் பெயர றைந்தவன்.

(கு - ரை.) பத்திப்பிச்சை=அன்புப்பிச்சை. எத்திறவினையுமின் றிருப்பன்=எத்தத் தொழிலுமில்லாதிருப்பேன். 'உத்தம என்பெயர் அல்லமன் உனக்குப் பெயர் என் என்று அத்தனும் வினவ' என ஒட்டுக. அறைந்தவன்=தன் பெயர் சொன்ன கொக்கிதேவன். (10)

அருங்குரு லிங்கசங் கமத்திற் காகமெய்
வருந்துறு தொழிலற வறிதி ருப்பவன்
அருந்துறு பிணமென வறையு மாற்றநீ
தெரிந்திலை யோவெனச் செப்பன் மேயினன்.

(கு - ரை.) குரு=பரமாசாரியன். லிங்கம்=பரமான்மா. சங்கம்=
இருப்புணர்ந்த சாதுக்கள். அருந்துறு=சோறு உண்ணும். அறை
மாற்றம்=வேதவசனம். (11)

## வேறு

...ற் கரிய யாக்கைதனக் கெய்திற் றென்று லதுகொண்டு
...தற் கரிய வறங்கள்பல செய்து துயர்கூர் பிறவியினின் [தில்
...ற் கொருமை பெறவெண்ணு துழல்வோ னுடம்பு பொற்கலத்
...தற் குரிய பால்கமரிற் பெய்த தொக்கு மென்பரால்.

(கு - ரை.) யாக்கை=(எழுவகை தாதுக்களால் யாத்த) உடல்.
...மைபெற வொண்ணுத=ஒன்றுதல் நிலையடைய வியலாது. கமரில்=
...ப்பில். வெறும் தருமத்தால் முத்தி வாய்க்காது என்பது கருத்து.
...=அசை. (12)

...போ லழியு முடல்கொடுநல் வினைசெய் தழியா வுடம்பெய்தி
...போ டமர்த லாயிருப்ப யாக்கை வருந்து மென்றெண்ணி
...போ டறஞ்செய் திலையாம லருந்தி வாளா விருக்குமவன் [றான்.
...போன் மருள ரிலையென்றான் றண்பூம் பொழில்வைத் தளிக்கின்

(கு - ரை.) அமர்தலாயிருப்ப = அமர்ந்திருத்தற்கு. அருந்தி =
...லை தவராது உணவு) புசித்து. அவன்தன்போல்=அவனைப்போல்.
...ளர்=மயங்கிய அறிவு உடையார். அளிக்கின்றான்=காக்கும் கொக்கி
...வன். அறஞ்செய்யான் பயனற்றவன் என்பது கருத்து. (13)

...ரைத்த மொழியை யல்லமப்பே ருடையான் கேட்டுக் கைகுலைத்து
...த்து வினைநல் லனசெய்து சிதையா வின்பம் பெறுவானேல் [ச்
...த்த லுறுமும் மலங்களினோர் மலமா கியவா ணவத்தாலும்
...ருத்த முறுபே ரின்பநாம் புணர லாமென் றியம்பியே.

(கு - ரை.) கைகுலைத்து=கைகொட்டி. வினை நல்லன=புண்ணிய
...யங்கள். சிதையா=கெடாத. பெறுவானேல்=பெறுபவனொருவனுள
...ன். ஆணவத்தாலும் என்றவிடத்து வந்த உம்மை இழிவு சிறப்பு. (14)

...ன்செய் வினையா லோருடம்பிற் சாரு மின்ப மென்றனையவ்
...ன்செ யுடல மொழியவுட னழியு மம்மெய் யழியாமல்
...ன்செய் பதத்தி லிருக்குமெனின் மாயை தந்த தன்றாகும் [ய்.
...ன்செய் மலர்நந் தனஞ்செய்து கருவைத் துடைப்ப வெண்ணுவோ

(கு - ரை.) ஒருடம்பில்=ஒரே பிறவியில். சாரும்இன்பம்=பேரின்ப மெய்தும். உடனொழியும்=அவ்வின்பமும் அவ்வுடலுடன் நீங்கும். அம்மெய்=அத்தேகம். வான்செய்பதம்=வீடுபேறு. கான்=மணம். கருவைத் துடைத்தல்=இனிப் பிறவாவழி செய்தல். (15)

இன்ப நனிசெய் நல்வினையி னிறப்பி னிறப்ப வுடம்பினிடைத்
துன்ப மதுசெய் தீயவினை தோன்று மத்தி வினைமாய்வின்
முன்பு செயுநல் வினைவருமிம் முறையா லிரண்டு மாறிவரும்
என்ப வுலகி லொண்பகலு மிரவு மாறி வருதல்போல்.

(கு - ரை.) நனிசெய்=பெரிது விளைக்கும். இறப்பின்=இறுதியில். இறப்ப=அதிகமாக. மாய்வின்=அழிவில். இரண்டும்=(நல்வினை, தீவினை) இரண்டும். (16)

புறத்துக் கருமம் பலசெய்து பொருப்பை யகழ்ந்திட் டெலிபிடித்தாங்
கிறப்பச் சிறிய விண்ணின்ப மெய்து மவனே நோவாமல்
மறுத்துச் செயல்க ளனைத்தினையும் வாளா விருந்து பேரின்பம்
பெறத்தக் கவனே மருளன்யார் பேசு கென்றா னெம்பெருமான்.

(கு - ரை.) பொருப்பை அகழ்ந்திட்டு=மலையைக்கல்லி. இறப்ப=மிகவும். விண்ணின்பம் = சுவர்க்க இன்பம். எய்துமவனே = அடைபவனே. வாளாவிருத்தல்=சும்மாவிருத்தல்; மௌனியாதல். மருளன்=மருண்ட புத்தியையுடையவன். எம்பெருமான்=அல்லமன். (17)

பொறியிற் புறத்து மனஞ்செல்லிற் புலனே தோன்றி யிடுமகத்தில்
செறியக் கரணம் பராநந்த சிவமே தோன்றுஞ் சிவந்தோன்ற
அறிவிற் பரந்த விடயமய மாகு முலகந் தோன்றாமல்
பிறவித் துயரக் கடல்கடந்து பேரின் பஞ்சார் குவரென்று.

(கு - ரை.) பொறி=மெய், வாய், கண், மூக்கு, செவி. புறத்து=பகிர்முகத்தில். செறிய=ஒன்றுபட. புலன்=சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம். கரணம்=மனம், புத்தி, சித்தம், அகங்காரம். (18)

கண்ணாற் காணக் காட்டியிவன் கருத்தைத் திருத்து வேமென்ன
எண்ணாக் கருணைக் கடலனையா னிவணீ யகழ்தி யென்றுரைப்ப
நண்ணாப் பெரும நன்றென்று நவின்ற நிலத்தை யகழ்கின்றான்
பண்ணாற் சிறந்த பொறிவண்டு பாடு மலர்ப்பூம் பொழிலுடையான்.

(கு - ரை.) கருத்து=கொள்கை. அகழ்தி=தோண்டுக. நண்ணாப்பெரும=(பிறர்) அடைதற்கரிய பெரியோனே. நவின்ற=(அல்லமர்) கூறிய. பண்=இசை. பொறி=புள்ளிகளை யுடைய. (19)

தொடலுஞ் செம்பொற் சிகரமொன்று தோன்றச் செய்யுட் பொருள்போலக், கடிதி னகழ்ந்து புகுந்ததனுட் கண்டார் நிலத்தை யகழ்ந்திட்டு, மிடியன் கண்ட பொருள்போல விடயம் புறத்துக்

ணமல், வடிவஞ் சிறிது மசையாமல் வசமற் றிருக்கும் யோகி
யே.

(கு - ரை.) தொடலும்=தோண்டுதலும். புகுந்து=(அதனுள்)
ழந்து. மிடியன்=வறுமையாளன். பொருள்=புதையல். புறப்
ருளைக் காணமல் என்க. வசம் அற்று=தன்வசம் கெட்டு. (20)

யிற் சிவலிங் கத்தின்மேற் கண்கள் வைத்திட் டெலும்பலால்
ய்யிற் றசையொன் றின்றியே மேவும் புனிதன் றனைநோக்கிச்
ய்ய செயலி லாதசெயற் சிவயோ கியைக்கண் டனையோவென்
யத் தடைந்த வவனறிய வறிவித் துயரல் லமதேவன்.

(கு - ரை.) கையில் உள்ள என்க. புனிதன்=யோகி. செய்ய
யல்=நல்வினை. ஐயம்=சந்தேகம். அவன்=கொக்கிதேவன். (21)

லின் விழுந்து துயர்பவர்க்குக் கலமொன் றருகு வந்ததெனக்
டலில் பரம குருவெனக்குக் கிடைத்த தாவா வற்புதமென்
டலம் விதிர்ப்பக் கண்கணீ ரொழுக வுருகித் தொழுதனனல்
லின் மரபிற் குருசிட விதியை விளக்க வுளங்கொண்டு.

(கு - ரை.) கலம்=மரக்கலம். விதிர்ப்ப=நடுங்க. உருகி=மனங்
ந்து. விடல்இல்=இடைவிடாத. ஆஆ=வியப்புக்கிளவி. (22)

ந்தங் கண்ட விரும்புபோற் கண்ட பொழுதே யநிமிடன்றன்
ந்துஞ் செங்கைச் சிவலிங்க மெங்கள் பெருமா னங்கைமலர்
ராந்தங் கிருந்த கதுபொழுதிற் புனிதன் சீவ கலைதானும்
ர்ந்தங் கிருந்த சிவலிங்கந் தன்னோ டவன்பாற் சார்ந்ததால்.

(கு - ரை.) அநிமிடன் எனும் யோகியினது என்விரிக்க. செங்கை
ந்தும் என்க. போந்து=வந்து. பெருமான்=அல்லமர். புனிதன்=அநி
னது. சார்ந்து=வந்து. அவன்பால்=அல்லமரிடத்து. (23)

ந்து பரம சிவலிங்க மருவப் பெறுமல் லமன்றனையும்
ந்த விமல லிங்கமுட னடைந்த ஞானக் குரவனையும்
ந்த மலர்நல் வனமுடையான் கண்டு மகிழ்வுற் றிவர்பெருமை
ந்த மறைதேர் நான்முகனுஞ் சாற்றற் கரிதென் றறைகுவான்.

(கு - ரை.) மருவப்பெறும்=(தன்னிற்) கலக்கப்பெற்ற. விமலம்=
லமற்ற. வனமுடையான்=கொக்கிதேவன். சந்தம்=அழகு. (24)

ன்னுற் கண்டேன் சிவலிங்க நிஷ்டை ஞான யோகிதனை
ன்னுட் கரும மனைத்துமினி முடித்தேன் ஞான நிலைநின்றேன்
ன்னுற் செய்யப் படுமுதவிக் குதவி வேறு நெடுந்தகாய்
ன்னுற் செய்வ தொன்றுளதோ வெழிலிக் குதவி யார்செய்வார்.

(கு - ரை.) நெடுந்தகாய்=பெருந்தகையே. எழிலுக்கு=மேகத்
ற்கு. (25)

ஐய நினையு நின்கரத்தி னடைந்த சிவலிங் கத்தினையும் [று
பொய்யில் குரவன் றனையுமொரு பொருளென் றறிந்தே னின்றென்
செய்ய கமலத் திருவடியிற் சென்று தொழுதல் லமனுமை
மெய்ய னெதிர்நின் றன்பினால் விளம்பும் வணங்கா வலனன்றே.

(கு - ரை.) வணங்காவலன்=கொக்கிதேவன். (26)

என்னை யறிவித் ததுபோலிவ் விஷ்ட லிங்க மகம்புறமும்
மன்னி யிருக்கு நெறியினைநின் மலர்த்தாள் பரவு மடியார்க்குப்
பன்னி யுணர்த்திச் சரமாகிப் பாரிற் சரிப்பா யெனத்தொழுதான்
தன்னி னிலத்தி னரரெல்லாந் தகும்பே ரின்பம் பெறநினைந்தான்.

(கு - ரை.) பன்னியுணர்த்தி=முறைப்பட அடுக்கிச்சொல்லி. சர மாகி=இயங்குதிணையாயிருந்து. பாரில் சரிப்பாய்=பூவுலகில் வசிப்பீராக. தன்னில்=தன்னைப்போல. நிலத்தின் நரர்=பூவுலக மக்கள். (27)

கொக்கி தேவ னிரந்தமொழி கொண்டு கிளரல் லமதேவன்
தக்க பெரியோர் தமக்கியல்பு தாம்பெற் றுள்ள பேறெல்லாம்
மிக்க வுலகம் பெறுகவென வேண்டிக் கோட லெனப்புகழ்ந்து
செக்கர் மலர்ப்பூங் கைகளாற் றீண்டித் தழுவி யருள்செய்தான்.

(கு - ரை.) கிளர்=பிரகாசிக்கும். செக்கர்=சிவந்த. பூ=அழகிய.

அங்கைச் சிவலிங் கத்தினிடை யமைத்த நோக்கு நெஞ்சகமும்
தங்கச் சிவயோ கத்தினையே சார்ந்தங் கிருந்தா னோவியம்போல்
மங்கைக் கிடந்தந் தருளினோன் மலர்த்தாட் கிடுபூ வனமாக்கிப்
பொங்கப் புரந்த தவத்தால்மெய்ப் பொருளா சிரியற் கண்ணுற்றான்.

(கு - ரை.) அமைத்த=ஊன்றிய. தங்க=பொருந்த. ஓவியம்போல் இருந்தான்=சித்திரம்போல் அசைவின்றி யிருந்தான். இடம்=இடப் பாகம். பூவனம்=பூஞ்சோலை. புரந்த=காத்த. பொருளாசிரியன்கண் ணுற்றான்=ஞானசிரியரைத்தரிசித்த கொக்கிதேவன். (29)

அடியர் வேண்டிற் றேபுரியு மல்ல மப்பே ரெம்பெருமான்
நெடிய விழிக ளருள்சுரப்ப நிமல லிங்கங் கரத்தேந்திப்
படியி லரிய தவஞ்செய்யும் பத்த ருள்ளங் களிகூர
அடிய விளமாத் தழைப்பவரு மந்தா நிலம்போற் சரிக்கின்றான்.

(கு - ரை.) படியில்=நிலவுலகில். அடிய=பருத்த அடிப்பாகத்தை யுடைய. இள மா=இளமையான மாமரங்கள். மந்தாநிலம்=தென்றல் காற்று. சரித்தல்=சஞ்சரித்தல். (30)

பதினோராவது
கொக்கிதேவர்கதி முற்றிற்று.

கதி 11 - க்கு திருவிருத்தங்கள் - 621.

பன்னிரண்டாவது

# முத்தாயி அம்மைகதி

கண்டி லேனச கண்ணனை யென்றனர்
கொண்டு வாடுங் கொடியிடை யாடியர்
விண்டு போக விரைந்துவந் தல்லமன்
பண்டு கூறும் பரிசு விளம்புவாம்.

(கு - ரை) அசகண்ணன்=பெயர். அனர்=துன்பம். கொடியிடையாள்=முத்தாயி அம்மை. விண்டு=நீங்கி. பரிசு=தன்மை. (1)

பொடிய ணிந்தெழில் பொங்குறு மல்லமன்
அடியர் தங்க ளகத்திற் றுயரினை
உடையி ழந்த வொருவன் கரமெனக்
கடித டைந்து களைந்தருள் செய்யுநாள்.

(கு - ரை.) பொடி=திருநீறு. "உடுக்கை இழந்தவன் கைபோல வாங்கே இடுக்கண் களைவதாம் நட்பு" என்பதறிக. (2)

மறைத்தி ருந்த மலிசிவ பத்தியைப்
புறத்த றிந்த பொழுதே யுடம்பினை
வெறுத்த கன்று வெளியுரு வாயினன்
அறுத்த பந்த வசகண னென்பவே.

(கு - ரை.) வெளியுருவாயினன்=ஞானகாய உருவாயினன். தன்னால் நேர்ந்ததாகலின் பந்தத்தைத் தானே அறுத்தான் என்க. (3)

அறைந்த தூயவ னங்க வுபாதிபோய்
நிறைந்த நீர்மை நினைந்திலள் போயுயிர்
இறந்து போயின னென்னத் தளர்ந்துடன்
பிறந்த மாது பெரிதுள மாழ்கியே.

(கு - ரை.) அங்கஉபாதி = உடலாகிய நோய். நிறைந்தநீர்மை= (அசகண்ணன்) பரிபூர்ணம் எய்தியதன்மையை. உடன்பிறந்த மாது= அசகண்ணர் சகோதரியான முத்தாயி அம்மை. (4)

புலம்பி நைந்திருக் கின்றவப் போதினில்
இலிங்க முங்கர முந்திகழ் வெய்துற
நலங்கொ ளல்லம னண்ணின னண்ணலும்
கலங்கி நின்றவக் காரிகை கண்டனள்.

(கு - ரை.) நைந்து=மனம் புண்பட்டு. திகழ்வெய்துற = மிக்கு விளங்க. அக்காரிகை=முத்தாயி அம்மை. (5)

கண்ட போதச கண்ணனைக் காண்கிலாள்
கொண்ட பீழை குறைய வழுதடிப்

புண்ட ரீகப் புதுமலர் வீழ்ந்துகண்
மண்டு நீருக வாய்விட் டரற்றினள்.

(கு - ரை.) பீழை = துன்பம். அடிப்புண்டரீகம் = (அல்லமரது) திருவடித்தாமரையாகிய. கண்மண்டு = கண் ததும்பிய. உக = சிந்த. (6)

பாவி யேன்முகம் பார்க்க வொண்ணுதெனு
ஆவி யாமச கண்ண னகன்றுசெய்
நோவெ லாமிவ னுாக்க வருளினல்
மேவி னுயென மீண்டும் வணங்கினள்.

(கு - ரை.) நோ = பிரிவுத்துயர். நூக்க = தொலைக்க. (7)

வணங்கு மாதின் மலர்முக நோக்கியே
அணங்க னய்நல் லசகணன் றன்மையை
உணர்ந்தி டாம லுளைத லுணர்வுளார்க்
கிணங்கு ருதெதன் றெந்தை யியம்புவான்.

(கு - ரை.) உளைதல் = துன்புறல். உணர்வுளார்க்கு = அறிவுடையவர்கட்கு. இணங்குறுதது = பொருந்துவதன்று. (8)

அழிவி லானை யழிந்தன னென்றுநீ
விழியி னுன்மிகு வெள்ளம் பெருக்கினை
கழிவி லாதவா காயங் கழிந்ததென்
ருெழிவி லாம லுளமெலி வார்கள்போல்.

(கு - ரை.) அழிவிலானை = என்றும் கெடாத அசகண்ணனை. பெருக்கினை = பெருகச்செய்தாய். கழிவிலாத = அழியாத. ஒழிவிலாமல் = ஓயாமல். (9)

சச்சி தானந்த சங்கர னுகவே
அச்ச நீங்குபு தன்னை யறிந்தவன்
துச்ச மாந்துயர் தோன்மலி யாக்கையை
இச்சி யானதை யானென வெண்ணியே.

(கு - ரை) நீங்குபு = நீங்கி. துச்சமாம்துயர் = கேவலமான துன்பம். தோல்மலி யாக்கையை = தூலதேகத்தை. (10)

ஒண்ட ரைக்க ணெழிவி லருளுருக்
கொண்ட டுத்த குருவரு ளாற்றனைக்
கண்ட மெய்த்தவன் காயந் தனையன
முண்ட நெட்டிலை யொப்ப விடுப்பனல்.

(கு - ரை.) ஒண்தரைக்கண் = ஒள்ளிய நிலவுலகில். காயம்தனை = தேகத்தை. அனம் = அன்னம்; இடைக்குறை. நெட்டிலை = நீண்ட இலை. ()

படியில் வந்த பரம குரவனல்
தடைய றும்படி தன்னை யறிந்தவன்

உடல்வி டும்பொழு தொன்றொரு மண்மயக்
கடமு டைந்தவா காய நிகர்ப்பனால்.

(கு - ரை.) படியில் வந்த=உலகில் எழுந்தருளி வந்த. தன்னை யறிதற்குத் தடையாயுள்ள சந்தேக, விபரீத, அஞ்ஞானங்களை நீக்கித் தன்னையறிந்தவன் என்க. ஒன்றொரு=ஒவ்வொரு. கடம்=குடம். (12)

பந்த பாச முழுதும் பரிந்திட
நந்து மோர்சிவ ஞானி நரர்வினை
சிந்து மாறு செறிந்த வுடம்புதான்
வெந்த தூசின் விழியெதிர் தோன்றுமே.

(கு - ரை.) பந்தம் விளக்கும் பாசம் என்க. பரிந்திட=கெட. நந்தும்=வளரும். நரர்வினை=மக்களது (நல்வினை, தீவினையாகிய இரு வகை வினையில் சஞ்சித, பிராரத்வ, ஆகாமியமாகிய மூன்று கூறுபட்ட) வினைகள். செறிந்த = தான் அடைந்த. உடம்புதான் = உடலானது. தூசின்=ஆடையைப்போல. ஞானிகள் தம் தேகத்திற்கு அயலாயிருப் பார் என்றபடி. (13)

யாவு மாகி யிருக்குஞ் சிவத்தொடு
மேவு ஞான விழியுடை யான்றனக்
கோவு மாறி லுறவு பகையெனும்
பாவ மோவிலை யென்றறி பாவையே.

(கு - ரை.) ஓவும் ஆறு இல் = தீரும் வழியில்லாத. பாவம்= பாவனை; கல்பனை நினைவு. ஞானவிழியுடையான் தனக்கு=ஞானக்கண் உடையவனுக்கு. பாவை=உவமையாகு பெயர். (14)

யாக்கை தாமென் றிருந்தழி கின்றவர்
ஊக்கி லாவறி வாகி யுடம்பொடு
தாக்கி லாதவர் தம்மையுந் தாமென
நோக்கு வாரவ ருண்மையை நோக்குறார்.

(கு - ரை.) யாக்கை தாமென்றிருத்தல்=தேகமே நானெனவிருத் தல். தாமென நோக்குவார்=தங்களையொத்து காண்பார். ஊக்கிலாமை= கெடாமை. உடம்பொடு தாக்கிலாதவர் தம்மையும்=உடலோடிருந்து பாச பந்தங்கள் தாக்காதிருப்பவர்களையும். (15)

கூத்த ருடகக் கோல நடிப்பினைப்
பார்த்து வாய்மையென் றெண்ணிலர் பாருளார்
ஏத்து ஞானிதன் யாக்கை நடிப்பினை
ஓர்த்து மாதவ ருண்மையென் றுன்னுறார்.

(கு - ரை.) பாருளார்=உலகர். ஓர்த்து=உணர்ந்து. (16)

அறிந்தி டாம லசகணன் றன்மையை
இறந்து ளானென் றிரங்கினை யன்னைநீ

மறந்தி டாயிம் மதியென் றணல்சொல
நிறைந்த ஞானமுத் தாயி நிகழ்த்துவாள்.

(கு - ரை.) அணல்=அண்ணல்; சொல=சொல்ல: இடைக்குறை.

அரவின் காலர வன்றி யறிபவர்
தரையி னில்லை யசகணன் றன்னைநீ
தெரியி னன்றிச் சிறிய ளறிவலோ
பெரும யான்செய் பிழைபொறுப் பாயென்று.

(கு - ரை.) தெரியினன்றி = அறிவித்தாலன்றி. பாம்பின்கால் பாம்பறியும் என்பது பழமொழி. சிறியள்=பக்குவமில்லாத யான். (18)

## வேறு

பங்க னிருந்த பதிக்கருள் செய்து
கங்கை யடைந்த கணக்கென வென்பால்
இங்குற வந்தனை யெங்குடி யுள்ளார்
தங்க டவந்தரு தன்மையி னென்று.

(கு - ரை.) பங்கன் = உமைபாகத்தன். பதிக்கு = கயிலைக்கு. கங்கை அடைந்த கணக்கென எங்குடியுள்ளார் தங்கள் தவம்தரு தன்மையின் என்பாலிங்குற வந்தனை என ஒட்டுக. (19)

வந்தனை செய்து வழுத்திமு னின்று
பந்த மகன்ற பதம்பெறும் வண்ணம்
எந்தை யியம்பி யெனக்கருள் செய்யென்
றந்த மடந்தை யறைந்தன ளன்றே.

(கு - ரை.) பந்தமகன்ற பதம்=பாசபந்தம் நாசமான நிலை. (20)

தேசிக னல்லம தேவன் மகிழ்ந்து
பாச மகன்று பரம்பொருள் காணும்
நேச மடைந்தனை நின்னை நிகர்ப்பார்
காசினி யின்மிசை கண்டில மென்று.

(கு - ரை.) தேசிகன் = குரு மூர்த்தியான. பாசமகன்று=பாசங்களினின்று விலகி. நேசம்=விருப்பம். நிகர்ப்பார்=ஒப்பாவார். (21)

பிறப்பொரு கோடி பிறந்து பிறந்து
புறக்கரு மங்கள் புரிந்திடி னும்பொய்
மறப்புறு மாணவ வல்லிரு ளின்றிச்
சிறப்புறு முத்தி செறிந்திடு வாரோ.

(கு - ரை.) புறக்கருமம்=புறப்பூசை. பொய்=பொய்யான; உள்ளீடில்லாத. மறப்புறும்=மறைப்புத்தரும். ஆணவம் அற்றுப்பெறும் முத்தி ஆணவத்தோடு கூடிய நல்வினையால் பெற வியலாது என்றபடி. (22)

மரிப்பொ டுதிப்பு மறிக்குது மென்று
கருத்தை வெளிக்கரு மத்தின் விடுத்து

விரிக்குத னெய்யை விடுத்தெரி கின்ற
நெருப்பை யவிப்ப நினைப்பதை யொக்கும்.

(கு - ரை.) மரிப்பு=இறப்பு. உதிப்பு=பிறப்பு. மறிக்குதும்=தடுப்பேம். விரிக்குதல்=விரியுமாறு செய்தல். (23)

மட்டற வோடு மனத்தை நிறுத்திக்
கட்டுதல் வீடு விடுத்திடல் கட்டன்
றொட்டிய பண்பி னுரைத்தல மப்பேர்ச்
சிட்ட னவட்கருள் செய்தன னன்றே.

(கு - ரை.) மட்டற—அளவில்லாதபடி. கட்டுதல்=தம் வயப்படுத்தல். வீடு=முத்தி. விடுத்திடல் கட்டன்று=மனத்தை புறக்கருமத்தில் விடுத்திடல் தம் வயப்படுத்துதலாகாது என்று. ஒட்டிய=பொருந்திய. சிட்டன்=மேலானவன்; சிரேட்டன் என்பதன் மரூஉ. (24)

தத்துவ முற்று மயக்குவ தள்ளி
மெய்த்த தனைப்பெற வேறு கொடுத்தான்
பொய்த்துறு குப்பை கிளைத்தொளி பொங்கும்
முத்தை யளித்தென முத்தை தனக்கு.

(கு - ரை.) மயக்குவதான தத்துவம்முற்றும்=ஆன்மதத்துவம்-24. வித்யாதத்துவம்-7. சிவதத்துவம்-5. ஆக 36 தத்துவமும். கிளைத்து=சீய்த்து. முத்தை தனக்கு=முத்தாயி அம்மைக்கு. (25)

வீடு விரும்பி வெறுத்திலன் மெய்யைத்
தாடரு மொண்குர வன்றனை யெங்கும்
நாடி யுழன்றில னுய்ய வென்னைத்
தேடி யடைந்தருள் செய்தனை யென்று.

(கு - ரை.) மெய்யை வெறுத்திலன்=தேகாபிமானத்தை அகற்றிலேன். தாள்தரும்=திருவடி தீட்சைசெய்யும். எங்கும் நாடியுழன்றிலன்=எங்குந்தேடி அலைந்தேனில்லை. நான் உய்ய என்க. (26)

அல்லம னென்னு மருட்குர வன்றாள்
புல்லி வணங்குபு பொற்கொடி யன்னாள்
செல்ல லகன்று சிதம்பர மெய்தி
எல்லையி லின்பொ டிருந்தன ளம்மா.

(கு - ரை.) தாள்=திருவடிகளை. செல்லல் அகன்று=துன்பம் நீங்கி. சிதம்பரம்=ஞானாகாயத்தலம். அம்மா=வியப்புக்கிளவி. (27)

பன்னிரண்டாவது

முத்தாயி அம்மைகதி முற்றிற்று.

கதி 12-க்கு திருவிருத்தங்கள் - 648.

பதின்மூன்றாவது

# சித்தராமையர்கதி

## வேறு

காமரு சித்த
ராம னிடத்தில்
போமணல் சொற்ற
சீர்மை யுரைப்பாம். (1)

செல்லல் களைந்து
நல்லறி வின்பம்
சொல்லுவ னென்னும்
அல்லம னென்பான். (2)

கருமயோ கமும்
கிரியை யாவையும்
மருவி ராமன்வாழ்
புரியை மேவினன். (3)

வாவி யாலயம்
காவி ராமனர்
ஏவ லாளர்செய்
தோவி லாமையை. (4)

பார்த்தரு ளண்ணல்
மூத்த விராமன்
வார்த்தை யறிந்த
கூத்தின னென்றே. (5)

பேரறி வின்னன்
சார விருந்த
ஊரினு மில்லென்
றூர விகழ்ந்தே. (6)

இல்ல மகன்றிவ்
அல்ல லடைந்தான்
நல்ல பசும்பொன்
வல்லி யுவந்தான். (7)

என்று நினைந்து
நன்றுற வாவி
ஒன்றகழ் வார்பால்
சென்றிது சொல்வான். (8)

---

1. (கு - ரை.) காமரு=விரும்பத்தக்க அழகுடைய. அணல்= அண்ணல்; அல்லமன். சொற்ற=கூறிய. சீர்மை=சிறந்த நிலையை.

2. (கு - ரை.) செல்லல்களைந்து=(பிறவித்) துன்பம் நீக்கி. நல்லறிவு இன்பம்=மெய்ஞ்ஞானமும், (அதனால் ஆம்)பேரின்பமும். சொல்லுவன்=அருள் செய்வன்.

3. (கு - ரை.) மருவி=அநுட்டித்து. புரியை=பட்டணத்தை.

4. (கு - ரை.) வாவி=தடாகங்களையும். கா = பூஞ்சோலைகளையும். இராமனர்=சித்தராமையர். செய்து ஓவிலாமையை=ஒழிவிலாமல் செய்தலை.

5. (கு - ரை.) அண்ணல்=அல்லமர். மூத்த=நல்வினை முதிர்ந்த. வார்த்தை யறிந்தகூத்தினன் = பயனிலாச் செயலைச் செய்தலின் பயனிலாச் சொற்களைப் பயின்று, அதற்குத்தகச்செய்யும் நடிகன்.

6. (கு - ரை.) பேரறிவு=ஞானமென்பது. இன்னன்=இச்சித்தராமையன். சார இருந்த=தங்கி இருந்த. ஆர=மிகவும்.

7. (கு - ரை.) இல்லம் அகன்று=இல்லறம் நீங்கியும்; அதாவது துறவறம் பெற்றும். அல்லல்=(ஆலயம், தடாகம், பூங்காவாதிய அமைக்கும்) தொல்லையை. இரும்பு விலங்கை யகற்றி பொன் விலங்கை பூட்டிக் கொண்டவன் இவன் என்பது பின்னிரண்டடிகளின் பொருள்.

8. (கு - ரை.) நன்றுற=நன்றாக. வாவி=தடாகம். அகழ்வார் பால்=தோண்டும்சித்தராமரது ஏவலாட்களிடத்தில்.

வேறு

ஒட்ட ராம னுளத்தினில்
இட்டம் யாதுகொ லித்தொழின்
முட்டி லாமன் முயன்றனன்
கொட்டி வீழுமி குத்தல்போல்.

(கு - ரை.) தொழில் = திருப்பணிகளை. முட்டு = தடைப்பாடு. கொட்டிவீழ்=குத்திப்பின் விழுகிற. கொல்=ஐயப்பொருளது. உமிகுத்திக் கைசலிப்பார்போல் பயனில் திருப்பணிகள் செய்கிறார் என்பது கருத்து. (9)

விழற்கி றைப்ப விடுத்தல்போல்
தொழிற்கு ளெய்த்துறு தொழினுமை
இழைக்க விட்டதெ னென்றிடர்
ஒழிக்க லுற்றவ னோதினன்.

(கு - ரை.) விழல்=வீண்; ஒருவகைப் புல்லுமாம். இறைப்ப = நீர் பாய்ச்ச. எய்ப்பு=இளைப்பு. இழைக்க=செய்ய. இடர் ஒழிக்கல் உற்றவன்=துன்பம் ஒழிக்க வந்த அல்லமன். (10)

சாந்த னோதிய தாழ்மொழி
காய்ந்த வேலிரு காதினும்
போந்த போன்று புகுந்தன
மாந்த ராகுல மன்னினார்.

(கு - ரை.) சாந்தன் = அமைதி வடிவாம் அல்லமன். தாழ்மொழி= இழிவுடைச் சொற்களானவை. காய்ந்தவேல்=சூட்டுக்கோல். மாந்தர்= அங்குள்ள ஏவலாளர். ஆகுலம்=துன்பம். (11)

அறம ழித்தனை யன்றியும்
நெறிய றக்குரு நிந்தனை
பெறவு ரைத்தனை பித்தவென்
றுறவு றுத்தன ரொட்டலர்.

(கு - ரை.) நெறிஅற=நோன்பை வழுவ. பெற=தோன்ற. உற உறுத்தனர்=மிகக்கோபித்தனர். ஒட்டலர்=அல்லமர் மொழியில் பற்றில்லாத அந்த ஏவலாட்கள். ஒட்டு=பற்று. அலர்=அல்லாதவர். (12)

ஒட்ட னென்றனை யும்பரும்
சிட்ட னென்றுகொள் சித்தனைத்
துட்ட வென்று சுளித்தனர்
வெட்டி ருந்தட மேவினோர்.

(கு - ரை.) வெட்டுஇரும்=வெட்டுகின்ற பெரிய. மேவினோர்= இருந்த ஏவலாளர். 'துட்ட! உம்பரும் சிட்டன் என்று கொள் சித்தனை ஒட்டனென்றனை என்று சுளித்தனர்' என ஒட்டுக. சிட்டன்=மேலோன். சுளித்தனர்=சினந்து முகங் கடுகடுத்தனர். (13)

## வேறு

மெய்த்தட மகழ்பவர் வினையை யன்றியே
சித்தர்தஞ் செயலொரு சிறிது மின்மையான்
மத்தர்நுங் குரவனை மண்ணி னும்மினும்
உத்தம வொட்டனென் றுரைத்து மென்றனன்.

(கு - ரை.) ஒட்டன் = குளம் முதலிய தோண்டும்தொழிலாளன்; இது இரட்டுறமொழிதல். மெய்=தேகத்தால்; மெய்ம்மையாக. வினையை =தொழிலை. மத்தர்=உன்மத்தரான. நும்மினும்=உங்களைப்பார்க்கிலும்.

நிகழ்ந்துல கிடைநிலை நிற்கு நல்லறம்
உகந்துசெய் பவன்றனை யும்ப னேயெனப்
புகழ்ந்தவர் புண்ணியர் பொறுமை யாணிழித்
திகழ்ந்தவர் நரகரென் றிசைப்பர் நல்லவர்.

(கு - ரை.) நிகழ்ந்து = அறிஞரால் நியமிக்கப்பட்டு. உகந்து= விரும்பி. உம்பனே என = தேவர்களுள் ஒருவனே என்று. நரகர்= பாபிகள். புகழ்ந்தவர் புண்ணியர்; இகழ்ந்தவர் நரகர் என்க. (15)

மறவினை யுடையரை மாற்றித் தூயநல்
அறவினை யுடையரை யறிந்திட் டன்னரோ
டுறவினை யடைந்திலை யொப்பக் கண்டறத்
துறவினை யுளையென வொட்டர் சொல்லினர்.

(கு - ரை.) மறவினை=தீக்கருமம். மாற்றி=ஒழித்து. அறவினை= நற்கருமம். அறிந்திட்டு = தெரிந்துகொண்டு. அன்னரோடு = அவர்களுடன். உறவினை அடைந்திலை=உறவு செய்தாயில்லை. ஒப்பக்கண்டு= (மறவினையாரையும், அறவினையாரையும்) ஒன்றாக நோக்கி. அறத்துறவினையுளை =தருமமார்க்கத்தைத் துறந்தவனாகிறாய் என்றபடி. (16)

ஒங்கிரு வினைகளு மொப்பக் கண்டவர்
தாங்களென் றனையொரு தமரிற் பேணுவர்
ஆங்கவை யிரண்டையு மடைந்து போயுழல்
நீங்களென் றனையுணர் நெறியிலீ ரென்றான்.

(கு - ரை.) ஒப்பக் காண்பவர்=நல்வினை தீவினைகளிரண்டினையும் ஒருபெற்றித்தென ஆய்ந்து உணர்பவர். தமரில்=உறவினர்போல். ஆங்கவை இரண்டையு மடைந்து=அந்த இரண்டு வினைகளின் வயப்பட்டு. போய் உழல்=பிறவிகள்தோறும் சென்று உழலும். (17)

எனக்கற வினையுமி லென்று கூறிநாய்
உனக்கொரு கதியிலென் றுண்மை கூறியே
சினத்தனர் நிலனகழ் சிறியர் யாவரும்
தனக்கிணை தானெனுந் தம்பி ரானையே.

(கு - ரை.) அறவினையும் இல்=தருமச் செயலுமில்லை. கதியில்=நற்பேறும் இல்லை. சினத்தனர்=கோபித்தனர். (18)

முற்றிய கல்வியின் மூடர் நீவிர்நும்
கற்றறி மூடனுக் கறைமி னன்னவன்
உற்றன னெனிலவ னுணர்வுஞ் சொல்லினல்
இற்றென வுணர்வமென் றெந்தை கூறினன்.

(கு - ரை.) முற்றிய = முதிர்ந்த. கல்வி இல் = கல்வி இல்லாத. சொல்லினல்=அவன் சொல்லினல். இற்று=இத்தன்மைத்து. (19)

சேடனும் புகழ்வுறுஞ் சித்த ராமனை
மூடனென் றுரைத்தவம் மொழிக யந்தொடாத்
தோடருங் கொட்டினோர் சீற்றத் துப்பெனும்
நீடுவெங் தழல்சொரி நெய்கி கர்த்ததால்.

(கு - ரை.) சேடனும்=ஈராயிரம் நாவுள ஆதிசேடனும். கயம் தொடா=குளம் தோண்டி. தோள்தரும் என்க. கொட்டினோர்=மண்வெட்டியுடைய ஒட்டர்கள். சீற்றத்துப்பு=கோபப்பெருக்கம். (20)

இறுக்கின ரழுக்குடை யெயிறு மென்றனர்
உறுக்கின ரதர்த்தன ருயிர்த்து மீசையை
முறுக்கினர் நகைத்தனர் முருட்டுக் கைகளால்
பெறுக்கினர் சிலைகளைப் பெருஞ்சி னத்தராய்.

(கு - ரை.) அழுக்குடை=அழுக்குத்துணி. எயிறு மென்றனர்=பற்களைக் கடித்தனர். உறுக்கினர்=உறுக்கிப் பார்த்தனர். அதிர்த்தனர்=அதட்டிக் கூவினர். உயிர்த்து = பெருமூச்செறிந்து. முருட்டு=முரட்டுத்தனமான. சிலைகளைப் பொறுக்கினர் என்க. சிலைகள்=கற்கள். ()

நங்குர வனையிகழ் நயமி லான்றனை
இங்கொரு சிலையினு லெறிந்து கொல்லுதல்
பொங்குறு மறமொடு புகழு மாகுமென்
றெங்குர வனையவ ரெதிர்ந்து சூழ்ந்தனர்.

(கு - ரை.) நயம்=நன்மை; இனிமை; பயன். (22)

கட்டுமி னடிமினுங் கரத்திற் கொட்டினல்
வெட்டுமி னிந்தைசொல் வாயின் வெண்பலைத்
தட்டுமி னெறிமின்வன் றலைகுமைந்திடக்
குட்டுமி னெனவுளங் கொதித்துக் கூடினர்.

(கு - ரை.) நுங்கரத்தில் கொட்டினல்=உமது கையிலுள்ள மண்வெட்டியால். பலை=பல்லை; சாரியை தொக்கது. வன்தலை எறியின்=வலிய தலையை வெட்டுங்கள். குமைந்திட=நொறுங்கிட. (23)

என்மன விருளற வெழுந்த வல்லமண்
மின்மலி வுறுதிரு மேனி மீதிடிச்

சொன்மலி யொட்டலர் சூழ்ந்து கொண்டுவன்
கன்மழை சொரிந்தனர் கைச விப்பவே.

(கு - ரை.) மின்மலி = ஒளிமிக்க. இடிமலி சொல் = இடியென ஒலிமிக்க சொல். ஓட்டலர் = பகைமை நிகழ்த்துபவர். (24)

சாக்கிய ஞெறி தனிக்க லன்றிமெய்
நோக்கிலர் தாமொரு நூறு கோடிகல்
மீக்கிளர் சோதிதன் மீது வீசினும்
தாக்குறு மோவவை தாக்கு றுவரோ.

(கு - ரை.) தனி = ஒப்பற்ற. கலன்றி = கல்லன்றி. மெய் நோக்கு இலர் = உண்மையான ஞானக்கண் இலாதவர். தாம் = தாங்கள். மீக்கிளர் சோதிதன் = பிற ஒளிகளின் மேலாக விளங்கும் சுயஞ்ஜோதியின். ()

கொடியவ ரெறிந்தகல் குவியக் குன்றென
முடிமிசை நின்றனன் முத்த னல்லமன்
புடவியி னுடனிழல் புதைப்ப வந்நிழல்
கடிதினின் மீமிசை காணுந் தன்மைபோல்.

(கு - ரை.) குன்றெனக்குவிய = மலைபோல் குவிய. முடிமிசை = அக்குவியலின் முடிமேல். 'முத்தன் அல்லமன் நின்றனன்' என ஒட்டுக. புடவியின் = பூமியின்கண். உடல்நிழல் புதைப்ப = தேக நிழலை மூட. ஒருவன் தன் சரீர நிழலைப் பூமியில் புதைப்பானுயின் புதைக்குந்தோறும் அந்நிழல் மேலெழுந்து புதைபடாமல் நிற்குமாறுபோல் அவ்வொட்டர் எறிந்த கல் குவியலின்மேல் அல்லமர் நின்றார் என்க. (26)

ஒறுப்பவ னிழிந்தவ னொருவன் செய்தநோய்
பொறுப்பவ னடுவுளான் பொறுக்கு நெஞ்சமும்
மறப்பவ னுயர்ந்தவ னென்று வாய்மையால்
சிறப்பவ ரிம்முறை செப்பு வாரரோ.

(கு - ரை.) ஒறுப்பவன் = தண்டிப்பவன். இழிந்தவன் = அதமன். ஒருவன் செய்த நோய் என்பதை, நோய் செய்த ஒருவன் என மாற்றுக; ஒருவனை என விரிக்க. நடுவுளன் = மத்திமன். பொறுக்கு நெஞ்சமு மறப்பவன் எனவே தனக்கிழைத்த தீங்கையே மறந்துவிடுபவன் என்றபடி. உயர்ந்தவன் = உத்தமன். சிறப்பவர் = பெரியவர். அதம மத்திம உத்தம இலக்கணமிதிற் காண்க. (27)

தீங்கினை யெதிர்நின்று செய்த போதினே
தாங்கிலன் முனிவினை மறந்து தாமரைத்
தேங்கமழ் மலரென முகஞ்சி றப்புறீஇ
ஈங்குநின் றிடுமிவன் யாண்டு ளான்கொலோ.

(கு -ரை.) 'எதிர் நின்று தீங்கினைசெய்த போதினே' என இயைக்க. செய்த போதினே = செய்த பொழுதும். தாங்கிலன் = அதை மனதில்

வையாமல். சிறப்புறீஇ=மலர்ச்சியுற்று. யாண்டுளான் கொலோ=எந்த உலகத்து மகானோ. (28)

மலர்மிசை வேதனோ மலர்க்கண் மாயனோ
பலர்புகழ் மழவிடைப் பாக னோவெனில்
அலனிவன் பிழைசெயு மவரி டத்தினும்
நலனுள னென்றுகண் டவர்ந வின்றனர்.

(கு - ரை.) வேதனோ = பிரமனோ. பாகனோ = உருத்திரனோ. அலன்=அல்லன். நலனுளன்=இதமானவன். (29)

கல்லெறி படாமையைக் கண்ட வொட்டலர்
சொல்லுறி [illegible]வனொரு சூழ்ச்சி மந்திரம்
வல்லவ [illegible]ன்றனை வலிந்து பற்றியே
கொல்[illegible]மனவெதிர் குறுகி னாரரோ.

(கு - ரை[illegible]ல்லெறி=கல்வீச்சு. சொல்லுமிடத்து என்க. (30)

குறுகலு மவன்பல கோலங் கொண்டனன்
நிறைபுனற் கடந்தொறு நிலவு தோன்றல்போல்
மறுகினர் நிலனகழ் மனிதர் பற்றுதற்
கறிகில ரினையனென் றனையன் றன்மையே.

(கு - ரை.) குறுகலும் புனல்நிறை கடந்தொறும் நிலவு தோன்றல் போல் அவன் பலகோலம் கொண்டனன் என ஒட்டுக. கோலம்=சரீரம். மறுகினர்=மனக்கலக்கம் கொண்டனராகி. (31)

மருண்டனர் சித்தரா மப்பெ ருந்தகை
இருந்தரு ளிடத்துமெய் யிளைப்ப வோடியே
திருந்திய வடிமிசைச் சென்று வீழ்ந்தெழுந்
தரந்தையோ டனையவ ரறைதன் மேயினார்.

(கு - ரை.) அரந்தை=துன்பம். அறைதல்=கூறல். (32)

யாந்தொழில் செயுமிடத் தேது வின்றியே
போந்தன னொருமகன் புதிய னின்புகழ்
ஓர்ந்தில னுரைக்கொணா விழிபு ரைத்தனன்
மாய்ந்தில முடனசை மருவி யாங்களே.

(கு - ரை.) ஏது=காரணம். ஓர்ந்திலன்=நினைத்திலன். இழிபுரைத்தனன்=இகழ்ந்து பேசினான். உடல்நசை=தேகாபிமானம். (33)

என்றவ ரறைதலு மிராமன் சிந்தையில்
புன்றொழி லகன்றுமெய்ப் போதம் பெற்றிட
அன்றரு ளல்லம னடிகள் காட்டுறும்
ஒன்றொரு சிற்றம்வந் துதித்தெ ழுந்ததே.

(கு - ரை.) தொழில்=கிரியாமார்க்கம்: மெய்ப்போதம்=உண்மை ஞானம். அன்று = அவ்வமயம். அடிகள் = திருவடிகளை. ஒன்று =

பொருந்திய. அல்லமர் திருவடியடைந்து உண்மை ஞானம் பெறுதற்குக் கருவியாகிய ஒரு பெருஞ் சீற்றம் உண்டாயிற்றென்க. (34)

யாவனென் றன்னையின் றிகழ்ந்து ளானவன்
நாவரிந் திடுவனு னெனவெ ழுந்தனன்
மேவுறுந் தவமத வெகுளி தானினி
ஓவுறுந் தரத்ததன் றொருவ ராலுமே.

(கு - ரை.) நா=நாக்கை. தவமதம்=தவகொள்கை; தவசெருக்கால் என்க. ஓவுறும்=தணியும். தரத்ததன்று=தகுதியன்று. சீற்றம் ஒருவராலும் தணிக்க முடியாததாய் எழுந்ததென்க. (35)

## வேறு

என்னை வைதவன் யாரவ னெனமுனிந் தெரிபோல்
முன்ன ரெய்தினன் சித்தரா மப்பெயர் முதல்வன்
அன்னை யன்னநம் மல்லம னவன்சின மறிந்து
சென்னி யொண்கர மசைத்துவெண் ணகைசெய்து செப்பும்.

(கு - ரை.) எரி=நெருப்பு. முதல்வன்=ஷே பணியாளர் தலைவன். சென்னி=திருமுடி. வெண்ணகை=புன்னகை. (36)

அகழ்கின் றார்தமைத் தாங்குறு மகனில மென்ன
இகழ்கின் றார்தமைப் பொறுக்குமித் தன்மையெய் தலினால்
நிகழ்கின் றாருண்மா தவமுடை யோகிநீ யென்று
புகழ்கின் றானென விகழ்ந்தனன் பின்னரும் புகல்வான்.

(கு - ரை.) நிகழ்கின்றாருள்=தவமிக்கு விளங்குபவருள். "அகழ்வாரைத்தாங்கு நிலம்போலத் தம்மை,'இகழ்வார்ப் பொறுத்தல்தலை" என்பது குறள். புகழ்கின்றானென இகழ்தல்=புகழ்ப்பழிப்பணி. (37)

சிறப்புப் பெற்றநல் யோகிதன் மனத்தெழு சினந்தன்
அறத்தைக் கொன்றிடு முன்புபஞ் சியிற்புகு மழல்போல்
ஒறுக்கப் பட்டவன் பவம்பினை யொழித்திடு மதனால்
பொறுத்தற் கொப்பிலை யென்றுநன் றறிந்தனை போலும்.

(கு - ரை.) பவம்=பிறவிநோயை. பினை=பின்னை. (38)

கால னின்முனம் பொறையுள ளுருவன் கடல்சேர்
ஆல நல்லமு தாகுமென் றவன்றவம் புகழ்வான்
போல வைதனன் கொடியவ னெனும்பொரு டோன்றச்
சீல நல்குமோர் தொழில்செயு மல்லம தேவன்.

(கு - ரை.) பொறை = பொறுமை. வைதனன் = நிந்தித்தான்; சீலம்=தூய்மை. புகழ்வான்போல, கொடியவன் எனும் பொருடோன்ற வைதனனென் றியைக்க; இஃதும் புகழ்ப்பழிப்பணி (39)

பொறையு றும்படி யல்லமன் சூழ்ச்சியிற் புகலக்
குறையு றுஞ்சின மிகுந்தன னெருப்பெனக் கொதித்தே

அறையு றுந்திரள் பந்தெனச் சித்தரா மையன்
நிறையு றுந்திரு வருளுடைப் பிரானொடு நிகழ்த்தும்.

(கு - ரை.) குறையுறும் சினம்=தணிவதற்கியைந்த சீற்றம். அறையுறும் திரள் பந்தென=அடிக்குந்தோறும் விரைந்து எழும் உருண்ட வடிவான பந்தொத்து விரைந்தும். நிறை=பூரணம். (40)

குறிப்பில் வைதனை வெளிப்படை யிகழ்வினுங் கொடிதாய்
வெறுப்பு முன்செயா வென்னைநீ யீண்டிகழ்ந் தமையால்
பொறுப்ப னல்லன்யா னுதல்விழித் தீயிடைப் பொடிப்ப
வறுப்ப னென்றன னிகழ்வினுக் காருள மறுகார்.

(கு - ரை.) வெறுப்பு முன்செயா = வெறுக்கத்தக்க அபராதம் ஒன்றும் முன்னே செய்யாதிருந்த. பொடிப்ப வறுப்பன்=உன்னை வறுத்துப் பொடியாக்கிவிடுகிறேன். இகழ்வினுக்கு=வீணாக இகழ்ந்து பேசுதலுக்கு. மறுகார்=வருந்தார். (41)

தன்னைக் கொல்லினுந் தான்பிறி தொன்றினைக் கோறல்
பன்னிற் பாவமென் றறைகுவர் கற்றுணர் பழையோர்
நின்னைச் சொல்லிய வறத்தினை நிந்தையென் றெண்ணி
என்னைக் கொல்லுவ னென்றநீ யறவனே யென்று.

(கு - ரை.) கோறல்=கொல்லுதல். நின்னை=நினக்கு. சொல்லிய=போதித்த. அறவனே என மீட்டும் பரிகசித்தமையறிக. "தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான் பிறிது இன்னுயிர் நீக்கும் வினை" என்னும் குறள் கருத்து ஈண்டு நோக்குக. (42)

சாத னங்களு ணீறுமுந் தியதென்பர் சாற்றும்
மாத வங்களு ளுயிர்செகா மையுமற்று மதிப்பில்
பாத கங்களிற் கொலைசிறந் தன்றெனப் பார்த்து
நீதெ ரிந்திலை யரக்கனே யென்றன னிமலன்.

(கு - ரை.) நீறு=விபூதி. செகாமையும்=கொல்லாமையும். மற்றும்=இதுபோன்றவைகளும். சிறந்தன்று=முதன்மையானது. அரக்கனே=கொடூரனே. சாதனத்தின் முந்தியது நீறு, மாதவத்தி லுயர்ந்தது கொல்லாமை, பாதகத்தி லுயர்ந்தது கொலை. கொலையின் பாப மிகுதியை அறியாதார் அரக்கரே என விரிக்க. (43)

செருக்கொ ழிந்திலை யென்னெதிர் செவிசுடு தீச்சொல்
உரைத்து நின்றனை யுனைவிடு கிலனென வுறுத்து
நெருப்பெ ழுந்திரு நுதல்விழி திறந்தன னினைத்து
மரிப்பி னுந்தரு வேனுயி ரென்றிரா மன்றான்.

(கு - ரை.) செருக்கு=கர்வம். தீச்சொல்=தீயசொல். உறுத்து=சினந்து. நுதல்விழி = நெற்றிக்கண்ணை. மரிப்பினும் நினைத்து உயிர் தருவேனென இயைக்க. (44)

நெற்றித் தீவிழி காமனை நீற்றுவ தன்றிப்
பற்றிக் காமமில் யோகியைப் படுத்திட வற்றோ
செற்றத் தானுதல் விழியழ லல்லம தேவன்
வெற்றித் தாண்மலர்க் கீழ்ச்சென்று பணிந்தது விரைந்து.

(கு - ரை.) நீற்றுவது = எரிப்பது. படுத்திடவற்றோ = கொல்லுமோ; செற்றத்தான்=சினந்த சித்தராமையனது. (45)

பணிந்து மீளுமவ் வழலொரு வீரன்மேற் பாயத்
துணிந்து போயவ ளாற்றல்கண் டௌவலி தொலைந்து
தணிந்து பேடிமேற் செல்லுமா றலைவன சரன்போல்
அணைந்தி ராமன்வாழ் நகரினிற் பற்றிய தன்றே.

(கு - ரை.) பாய=பாயும்படி. ஆறலை வனசரன்=வழியில் சூறையாடும் வேடன். அணைந்து=சார்ந்து. (46)

கங்கை வார்சடைக் கறைமிடற் றிறைநகைக் கனல்போய்த்
துங்க மாமதில் சூழ்தரு புரத்தினைச் சுடல்போல்
எங்க ளையகன் மேல்விடு மிராமனன் னுதற்கண்
அங்கி போகியந் நகரினைச் சுட்டதை யன்றே.

(கு - ரை.) துங்கம்=உயர்ச்சி. புரம்=முப்புரம். அங்கி=அக்கினி. போகி=போய். ஐ, அன்று, எ செய்யுள் அசைகள். (47)

அணியெ ரிந்தன மென்றுகி லெரிந்தன வாரத்
துணியெ ரிந்தன கலவைக ளெரிந்தன சுதையின்
பணியெ ரிந்தன மனைவள மெரிந்தன பகரும்
மணியெ ரிந்தன வெரிந்தன கண்டவர் வயிறு.

(கு - ரை.) ஆரத்துணி = சந்தனக் கட்டைகள்; முத்துமாலைத் துண்டங்களுமாம். கலவைகள்=பரிமளப் பொருள்கள். சுதையின்பணி= சுண்ணம்பாற் செய்த சுவற்றுச் சித்திர வேலைப்பாடுகள். வளம்=பண்டம். பகரும்மணி=சிறந்த இரத்தினங்கள். (48)

சேயெ டுப்பவர் விருத்தரை யீர்ப்பவர் சேமம்
போயெ டுப்பவர் புகவரி தாகிமண் புரண்டு
வாய டிப்பவர் மனையெரி யவிப்பவர் மறுகிப்
பாய லைக்கட லெனவழு திரங்கினர் பதைத்து.

(கு - ரை.) சேய் எடுப்பவர் = குழந்தைகளை அவசரத்திலோடி எடுப்பவர்களும். சேமம்=சேமித்தபொருள். புக=வீட்டுள் நுழைய. மறுகி=மனங்கலங்கி. பாய்கிற அலைகளையுடைய கடல்போலென்க. (49)

உதித்த ஞாயிறு போன்றுசெம் மணியின மொளிரப்
பதித்த மாளிகை மீதுபற் றியவழற் கொழுந்தால்
கதிர்த்த வாடகச் செங்கம லத்துவான் கங்கை
கொதித்த தாயிடைக் கொதிபொரு தன்னங்கள் குழைய.

(கு - ரை.) மணியினம்=இரத்தினக் கூட்டம். கதிர்த்த=ஒளி வீசுகின்ற. ஆடகச்செங்கமலத்து=பொன் தாமரைகளையுடைய. அன்னப் பறவை வருந்த ஆகாய கங்கையும் கொதிபொருது கொதித்தது என்க.

அன்ன காலைபி லருட்கட லல்லம தேவன்
சொன்ன லாபுரத் தவர்துய ரனைத்தையுந் தொலைப்ப
உன்னி யோர்விழி யழலினை யிமைப்பினி லொழித்தான்
முன்ன மாலமுண் டமரரைக் காத்தருண் முறைபோல்.

(கு - ரை.) சொன்னலாபுரம்=ஓர் ஊரின் பெயர். உன்னி = நினைத்து. (51)

எந்தை யல்லம னருளினு னுதல்விழி யெரிபால்
வெந்த வந்நகர் பண்டையின் மும்மடி விளக்கம்
வந்த பல்வள மொடுசிறந் ததுநரர் மகிழ
உந்து வெவ்வழ லிடைவெந்த வாடக மொத்து.

(கு - ரை.) மும்மடி=மூன்று பங்கு. நரர்=மக்கள். உந்து=வளரும். 'வெந்த ஆடகமொத்துச் சிறந்தது' என முடிக்க. (52)

ஒருத்தன் வந்தவா றுக்கிய பொற்பணி யொன்றைத்
திருத்த வல்லவ னழித்ததைச் சிறந்திடச் செயல்போல்
புரத்தை நன்றுற வல்லமன் புரிதலும் புரத்தோர்
கருத்தில் வந்தெழுந் தோங்கிய தார்வமா கடலே.

(கு - ரை.) வந்தவாறு=கண்டபடி. திருத்தவல்லவன்=திருந்தச் செய்யவல்லவன். ஆர்வமாகடல்=ஆநந்தப்பெருங்கடல். (53)

ஒருக ணாற்றல்போ யொழிந்திட வலியறு மிராமன்
இருக ணுலுங்கண் டுளச்செருக் கென்பதொன் றின்றிப்
பெருகு நாணொடும் புனல்கொளப் பேரழல் விழுந்து
கருகு நாண்மல ரெனமுகங் கரிந்திது கருதும்.

(கு - ரை.) ஆற்றல்=வலிமை. நாண்=நாணம். (54)

## வேறு

என்னொரு நுதல்வி ழித்தீ யிவன்றனை யிறைஞ்ச லாலே
தன்னரு ளதனு லென்னைத் தடுத்துவந் தாள வேண்டிப்
பொன்னவிர் சுணங்கு பூத்த புணர்முலை மடந்தை பாகன்
இந்நில வரைப்பிற் கோல மிதுகொடு வந்தா னென்று.

(கு - ரை.) பொன்னவிர் சுணங்கு=பொன்போல் பிரகாசிக்கும் தேமல் படர்ந்த. கோலமிது=இத் திருமேனி (55)

தீயனே னறிவி லாமற் செய்பிழை பொறுத்தாட் கோடி
பேயனு னொருவன் செய்த பிழையினை யவனை யீன்ற
தாயலாற் பொறுப்பார் யாவர் தானுவே யென்றி ராமன்
போயெனு ரமுதின் செந்தாட் போதினைப் பற்றி வீழ்ந்தான்.

(கு - ரை.) கோடி = கொள்ளுதி. போய் என் ஆர் அமுதின் என்க. தாணுவே=மலைபோலுயர்ந்த கருணையனே. (56)

தன்னின மாமி ராமன் சரண்புகி லவன்செய் தீமை
உன்னுவ னலனெங் கோமா னுடன்றுவந் திலங்கை காக்கும்
மன்னவன் கவின்கூர் வெள்ளி மலையெடுத் தலைத்து வந்து
பின்னவன் வணங்கி நிற்பப் பிழையுளங் கொண்ட துண்டோ.

(கு - ரை.) 'தன்இனமாம் இராமன்' என்க. எங்கோமான் உன்னுவன் அலன் என்க. மன்னவன் = இராவணன். (57)

செய்யதாண் மலரின் வீழ்ந்த சித்தனை யருளா னோக்கி
ஐயநீ யெழுக நெஞ்சி லஞ்சலை யென்று கூறிக்
கையினு லெடுத்த ணைத்துக் கல்வியுந் தவமு மாய்க்கும்
வெய்யதாம் வெகுளி தன்னை விட்டிடென் றெந்தை சொல்வான்.

(கு - ரை.) செம்மையான திருவடித் தாமரைகளில் என்க. சித்தனை = சித்தராமையரை. வெய்யதாம் = கொடியதான. (58)

வலியவ னிடத்து மொத்தான் மாட்டினும் வெகுளி காத்தல்
பொலிவுசெ யறமதென்னப் பொருந்துறு தனையர் தம்பால்
நலிவுறு வெகுளி செல்லா தாதலா னலிய லாற்று
மெலியவ னிடத்திற் காக்கும் வெகுளியே யறம தென்பர்.

(கு - ரை.) ஒத்தான் மாட்டினும் = தனக்குச் சமானமானவனிடத்தினும். அறமெனப் பொருந்துறுது = நீதி என்றல் பொருந்ாது. நலிவுறு = வருத்துகின்ற. நலியல் ஆற்று = வருத்தம் பொறுத. தன்னின் வலியானிடத்தும் ஒத்தான் மாட்டும் தன் கோபம் செல்லாதாகலின் அவரிடம் பொறுமை காட்டுவது அறமன்று; தன்னின் மெலியாரிடத்துப் பொறுமை காட்டுதலே அறமாம். "செல்லிடத்துக்காப்பான் சினங்காப்பான் அல்லிடத்துக் காக்கிலென் காவாக்காலென்" என்பது குறள். (59)

வைதவன் றன்னை நன்று வாழ்த்தின னெனவுந் தீய
செய்தவன் றன்னை நல்ல செய்தவ னெனவுங் கொள்வோன்
கைதவ மகன்ற முத்தி கண்டவ னவ்வா றுன்னான்
பொய்தவ னென்ப தென்று புகன்றனர் புலவ ரன்றே.

(கு - ரை.) வைதவன் தன்னை = நிந்தித்தவனை. கைதவம் = வஞ்சகம்; தகாத தவமுமாம். உன்னான் = நினையான். என்பதென்று = எனக்கலைகள் கூறுமென்று. (60)

பெரியவர் தம்மைக் காய்ந்தான் பிறங்கல்கல் லியகோ லொப்பான்
புரிவன புரியப் பட்டுப் புலம்புவ னொத்தார்க் காய்ந்தான்
எரிநர கதனில் வீழ்வ னிழிந்தவர்க் காய்ந்தா னென்றால்
ஒருவர்தம் மிடத்துஞ் சீற்ற முறாமையே நன்று மாதோ.

(கு - ரை.) காய்ந்தான்=சினந்தவன். பிறங்கல்=மலை. கல்லிய=பேர்த்த. ஒத்தார்=சமமானவர். புரிவன=செய்யத்தக்க தீங்குகள் அனைத்தும். புரியப்பட்டு=அவர்களால் செய்யப்பட்டு. "செல்லாவிடத்துச் சினந்தீது செல்லிடத்து மில்லதனிற்றீய பிற" "மறத்தல் வெகுளியை யார்மாட்டும் தீயபிறத்தலதனால் வரும்" என்பன குறள். (61)

யாவர்க்கு மொப்ப நன்று மென்னினுஞ் சினமி லாமை
மூவர்க்கு மரிய செய்யு முனிவர்க்குஞ் சிறந்த தென்று
தேவர்க்கு மரிய வின்பஞ் சித்தரா மப்பே ரண்ணல்
மேவற்கு வடிவங் கொண்டு மேவிய விமலன் சொன்னான்.

(கு - ரை.) நன்றும்=(சினத்தல்) நல்லதாம். மூவர்க்கும்=திரிமூர்த்திகட்கும். அரிய செய்யும்=அருந்தவத்தைச் செய்யும். (62)

அல்லம னறைந்த மாற்ற மறிந்துநஞ் சித்த ராமன்
சொல்லுவன் முத்தி யெய்துந் துணையசா தனங்க ளெல்லாம்
இல்லையென் னிடத்தி லேனும் மென்னைநீ வலிந்தாட் கொள்ள
நல்லவ னாகச் செய்த நன்மையே நன்மை யென்று.

(கு - ரை.) மாற்றம்=வார்த்தை. துணைய=துணைக் கருவிகளாக வுள்ள. என்னிடத்திலேனுமென்பதி லும்மை இழிவு சிறப்பு. (63)

கருத்தழி கடமி றங்கு கவுட்கரி வலிந்து பற்றித்
திருத்துபு தன்கா லேவுஞ் செயல்செயக் கொள்வ தன்றி
ஒருத்தல்வந் தறிந்து தானே யுறவுகொண் டிடுவ துண்டோ
தெரித்திடி லடிய னேனின் றிருவடிக் கத்தி றத்தேன்.

(கு - ரை.) கருத்தழி=(யாவர்) நினைவையும் கலக்கும். கடம் இறங்கு=மதநீர்பொழியும். கவுள்கரி=கன்னமுடைய யானையை. தன்கா லேவும் செயல் = தன்காலாலிட்ட வேலையை. ஒருத்தல்வந்து=யானை தானே வலிய வந்து. அறிந்து=பாகனை யறிந்து. தெரித்திடில்=தெரியக் கூறில். அத்திறத்தேன்=அவ் யானைத்தன்மையை ஒத்தவனேயான். (64)

அடன்மலி வீரன் வீர மவனெதிர் மலைந்து நின்றோன்
படைமிசை கொண்டு காணப் படுமது போல வுன்றன்
கடன்மலி யருளி னாற்றல் கண்டிடப் படுமிங் கென்றன்
கொடுமையின் மிகையா லென்று குடந்தம்பட் டழுங்கிக் கூறி.

(கு - ரை.) அடல்மலிவீரன்=வன்மை மிகுந்த வீரனது. படைமிசை=சேனைமேல். கடல்=கடல்போல். கொடுமையின்மிகை=தீமையின் மிகுதி. குடந்தம் பட்டு=கைகூப்பி வணங்கி. அழுங்கி=வருந்தி.(65)

என்குறை நினையா தெந்தா யினித்திரு வுளமி ரங்கி
நன்குறு முத்தி சேரு நன்னெறி காட்டு கென்று

தன்குறை யிரந்து ளைந்து தனைநிகர் சித்த ராமன்
முன்கரை யிறந்த வன்பான் முதல்வனை வணங்கி னானால்.

(கு - ரை.) நன்குறு=நலம்பொருந்திய. உளைந்து=மனம் வருந்தி. கரையிறந்த=எல்லையில்லாத. (66)

வணங்கிய வவனை ஞான வாரிதி யருளா னோக்கி
இணங்கிய பருவங் காணு மிவன்றனக் கின்ப முத்தி
அணைந்திடு நெறியீ தென்ன வறைவமென் றுளத்துட் கொண்டு
பிணங்குறு பிறவி யென்னும் பிணிமருந் தனையான் சொல்வான்.

(கு - ரை.) பிணக்கம்=முரண்பாடு. பிணி=பிறவிநோய்க்கு. (67)

பருவமுற் றிலர்க்கு முக்கட் பகவனு கமத்தி னுண்மைப்
பெருமையைப் பொருளை யெண்ணிப் பெருமிதத் துரைப்பி லன்னான்
குரவரிற் பதடி யென்ப குறித்துநற் பருவ நோக்கி
அருள்செயிற் குரவ சிங்க மவனென வறைவ னையன்.

(கு - ரை.) பருவம்=பக்குவம். முக்கட் பகவன்=மூன்று கண்களை யுடைய சிவபிரான். பதடி=பதட்டமானவன். (68)

உரைசெயிற் பரம ஞான மொன்றுமே முத்திக் கேது
சரிதைநற் கிரியை யோகந் தாமொரு மூன்று ஞான
மருவுதற் கேது வென்று மறைபுகன் றுரைக்கு மிந்தக்
கருவியைப் பொருளென் றெண்ணிக் களிப்பவர் கயவ ரன்றே.

(கு - ரை.) சரிதை=சரியை. கயவர்=கீழ்மக்கள். (69)

கருமமும் யோகந் தானுங் கரணத்தைப் புனித மாக்கிப்
பொருமிடர் வாயி றோறும் புக்குழல் கறங்கு போலத்
தெருமரா துண்ணி றுத்துந் தெளிந்தவக் கரணந் தன்னால்
நிருமல னுரு மீச னித்தனென் றுணர்வு திக்கும்.

(கு - ரை.) கரணத்தை=மனத்தை. பொருமிடர்வாயில்தோறும்= மோதும் துன்பமயமான ஐம்புல வழிகள் தோறும். கறங்கு=காற்றாடி. தெருமராது=சுழலாது. உள்=உள்ளத்தில். (70)

நித்திய னிமல னென்னு நினைவுறி னனித்த மாகிப்
பொய்த்தழி யுடம்பு டம்பைப் பொருந்திய பொருள்வெ றுத்து
மெய்த்தருள் குரவன் றன்னை விரும்பினன் சென்று சார்ந்து
தத்துவ முதறி நின்ற தனியறி வினையே காணும்.

(கு - ரை.) நினைவுறின்=நினைவு உதிக்கின். உடம்பு=தேகத்தையும். பொருள்=பொருளையும். மெய்த்தருள்=மெய்ம்மையை உபதேசிக்கும். ()

புலன்களை யொழித்த போதே பொறிகளும் பூத மைந்தும்
கலங்குறு கரண நான்குங் கலாதியுஞ் சுத்த மைந்தும்

விலங்குறு மடியில் வைத்த வெறுங்குடந் தள்ளின் மேன்மேன்
மலங்குற வொருங்க டுக்கு மட்கலம் விழுத லேபோல்.

(கு - ரை.) கலாதியும்=கலை முதலான ஐந்தும்; கலை, வித்தை, அராகம், புருடன், மாயை என ஐந்தும். சுத்தம் ஐந்தும்=சிவம், சத்தி, சாதாக்கியம், சுத்தவித்தை, ஈசுரம் எனும் சுத்த தத்துவங்கள் ஐந்தும். விலக்குறும்=தானே அகலும். அடியில்=கீழ்ப்பாகத்தில். மலங்குற=சுழல்வுற. (72)

இந்திய மோரொன் றுய்விட் டிடின்மற்றை யொன்று சாரும்
முந்திய மனம ழிப்ப முற்றும்போ மணிய பாம்பின்
ஐந்தலை களினு ளொன்றை யரிந்திடின் மற்றொன் றாலம்
சிந்திடு மிடற ரிந்தாற் றீர்ந்திடு மொருங்கு மாதோ.

(கு - ரை.) ஓரொன்றாய் விட்டிடின்=ஒவ்வொன்றாகக் கழித்தால். மற்றையொன்று=வேறொரு பொறி. மணிய=மாணிக்கத்தை யுடைய. ஆலம்=விடம். மிடறு=கழுத்து. ஒருங்கு தீர்ந்திடுமென்க. (73)

ஆதலான் மனம டங்கி லங்கலிங் கங்க டம்முள்
பேதமோ வபேத மோவென் றழிவுறு பித்து நீங்கும்
தீதிலா யென்றி யம்பிச் சித்தரா மற்கு நாவால்
ஓதொணா வுணர்வி னுண்மை யுணர்த்தினன் குருகு கேசன்.

(கு - ரை.) அபேதம்=பேதமின்மை. உணர்வினுண்மை=உணர்ச்சியில் விளங்கும் மெய்ஞ்ஞானத்தை. (74)

மனிதரு ளுரகர் சித்தர் வானவர் கணங்க டம்முள்
முனிவரு ளென்போ னின்றன் முழுதருள் பெற்றா ரில்லை
இனியெனை நிகர்வார் யாவ ரென்றருட் குரவ னார்தம்
பனிமல ரடியில் வீழ்ந்து பணிந்தனன் சித்த ராமன்.

(கு - ரை.) உரகர்=நாகலோகத்தார். கணங்கள் தம்முள்=கூட்டத்துள். பனிமலர்=குளிர்ந்த மலர்போன்ற. (75)

இப்பரி சருளி னாலே யிராமனுக் குபதே சித்துச்
செப்பரு மவன்குற் றேவல் செய்யிய வுளம கிழ்ந்து
கைப்படு மமிர்த மன்ன கருணைவா ரிதியி ருந்தான்
துப்புர வமைந்து சீர்சால் சொன்னலா புரத்து மாதோ.

(கு - ரை.) அவன்=சித்தராமன். செய்யிய=செய்திட. கைப்படும்=கையிற் கிடைத்த. துப்புரவு=தூய்மை. (76)

பதின்மூன்றாவது
சித்தராமையர்கதி முற்றிற்று.

கதி 13 - க்கு திருவிருத்தங்கள் - 724.

பதினைன்காவது

# வசவண்ணர்கதி

## வேறு

சித்த ராமனோ டாரிய னல்லம தேவன்
பத்த ராகிய பயிர்செய்கல் யாணமாம் பழனத்
துய்த்த நீரெனும் வசவனை யுழவரிற் கண்டு
மெய்த்து மார்வமங் கடைந்தமை யாமினி விரிப்பாம்.

(கு - ரை.) பழனத்து=வயலில். உய்த்த=பாய்ச்சிய. உழவரில்=பயிரிடும் மக்கள்போல. மெய்த்தும் ஆர்வம்=உண்மையாகிய விருப்பம். ()

அன்ன மீனுட னிகழ்வறக் கொண்டமை யாமல்
செந்நெ லார்வய றீப்பசி யாற்றுபு சிறந்த
சொன்ன லாபுரந் தவஞ்செய்த தென்றுவான் றுதிப்ப
என்னை யாளுடை யல்லம னிருந்தரு ளுளில்.

(கு - ரை.) கொண்டமையாமல்=உறவுகொண்டிராமல். ஆற்றுபு=தணித்து. வான்=இடவாகு பெயராய் தேவரை யுணர்த்திற்று. (2)

சந்த மேவுகல் யாணமா நந்தனந் தன்னில்
நந்தி நாண்மலர்ப் புகழ்மண நயந்தசொல் வளியால்
வந்து காதெனு நாசியிற் புகமிக மகிழ்ந்த
துந்து வார்திரைக் கருங்கட லுடுத்தபே ருலகம்.

(கு - ரை.) சந்தம்=அழகு. நந்தி = வசவண்ணர். நயந்த சொல் வளியால்=(அவரது) இன்மொழியாகிய காற்றினால். உந்தும்=மோதும். முதல் மூன்றடி உருவகம். திரை=அலைகளையுடைய. (3)

முக்க ணாயகன் புகழெனு மூரலுண் பதற்குத்
தக்க தீஞ்சுவைக் கறியெனச் சமைந்தது வசவன்
மிக்க வான்புக ழுவற்றினை மாதவர் விரவித்
துய்க்கு நாவினிற் றுய்த்தனர் பவப்பசி தொலைய.

(கு - ரை.) மூரல்=சோறு. புகழ் கறியெனச் சமைந்ததென்க. விரவி=கலந்து. பவப்பசி=பிறவிக்கவலை. துய்க்கும்=உண்ணும். (4)

விலக்கு முற்பவச் சித்தரா மற்குமுன் விளம்புமு
இலக்க ணத்தினுக் கருணந்தி யெனுமிலக் கியத்தைக்
கலக்க மற்றறிந் திடுவதற் குதாரணங் காட்ட
மலக்க மற்றநம் மல்லமன் றிருவுளம் வலித்தான்.

(கு - ரை.) உற்பவம்=பிறவிப்பிணி. இலக்கணத்தினுக்கு=சச்சிதானந்தமாகிய இலக்கணங்களுக்கு. மலக்கம்=விபரீதஞானம். வலித்தல்=உறுதியாக நினைத்தல். (5)

அடிய வர்க்கெளி யானெனு மவனெம தகத்தில்
குடியி ருக்குமவ் விராமனை யுடன்கொடு குறிலோர்
நெடில டுத்தநன் னிரையென வந்நகர் நீங்கிக்
கொடும திற்கலி யாணமா நகர்வழிக் கொண்டான்.

(கு - ரை.) அவன்=அல்லம தேவன். குறில் நெடிலிணையின் நிரையசையாகும்; சித்தராமையர் குறிலும், அல்லமர் நெடிலு மென்க. (6)

நறும்ப ழஞ்செறி தனியிட மொய்த்திட நண்ணும்
எறும்பொ ழுங்கென வரனடி யவர்திர ளெழுந்து
மறந்தும் வெஞ்சமண் குண்டரை யிணங்குறு வசவன்
உறும்பு ரம்புக லிருவருங் கண்டுள முவந்தார்.

(கு - ரை.) நறும் = இனிய. செறி = நிறைந்த. தனியிடம் = தனித்த இடத்தில். ஒழுங்கென = வரிசைபோல். திரள்=கூட்டம். இணங்குறு=சேராத. புரம்=நகரத்திற்கு. (7)

தம்பி ரானருள் வசவனுக் கியவறச் சாலைக்
கும்ப வாசநீர் முதலிய வேண்டுவ கொண்டு
வம்பு லாமலர் வனத்தயர் வுயிர்த்துநல் வழிசேர்ந்
தெம்பி ரானடி யவர்திர ளேகுதல் கண்டார்.

(கு - ரை.) தம்பிரான்=அல்லம தேவரது. அறச்சாலை=தரும சத்திரத்தில் உள்ள. கும்பம்=குடத்திலிருக்கும். கொண்டு=பருகி. வம்பு=மணம். அயர்வுயிர்த்து=இளைப்பாறி. நல்வழி சேர்ந்து=நன் மார்க்கம் அடைந்து. (8)

பாண்டின் மாவளஞ் சிவிகையூர்ந் தேகுநர் பரிந்து
வேண்டு மாறுகொள் வேடத்தர் துறந்தவர் விரதர்
ஈண்டு மாறுகண் டுவந்துசென் றெழிலலங் கார
காண்ட மாமெனு மங்கல புரத்தினைக் கண்டார்.

(கு - ரை.) பாண்டில்=வண்டி. வளம்=வளத்துடன். ஈண்டு மாறு=நெருங்கிச் செல்லுதலை. அலங்கார காண்டமாமெனும் மங்கல புரம்=அலங்கரிப்பின் நிலயமான கலியாணபுரம். (9)

கண்டு செல்லுமப் போதிலந் நகர்வளங் கருத்தில்
கொண்ட வல்லமன் றிருவுள மிகக்களி கூர்ந்து
பண்டை நல்லிசைப் புலவர்சொல் லிராமனைப் பார்த்து
மண்டு பல்வளங் காட்டுவன் றனித்தனி வகுத்து.

(கு - ரை.) பண்டை=பழமை. சொல்=துதிக்கும். மண்டு=மிகுந்த.

தனைவி ரும்பிவந் தடைந்தவர் தம்மைமுன் வெறுத்த
தினக ரன்கதிர் விரும்புறச் செய்தளித் திரள்கள்
நனிவி ருந்துணுங் கடிமலர் சுமந்துபொன் னகரார்
கனிவி ரும்புதண் பொழினிகழ் வனத்தெதிர் காணாய்.

(கு - ரை.) தினகரன்கதிர் = சூரிய கிரணத்தை. அளித்திரள்கள் = வண்டின் கூட்டங்கள். நனி = மிகவும். கடி = மணம். பொழில் = சோலை. நிகழ்வதை = விளங்குவதை. (11)

பூவி னோடுசெந் தேன்மழை யொழிவறப் பொழியுங்
காவி னோடுவள் ளிதழவிழ்ந் தொழுகுதேங் கமல
வாவி யோடுநல் லிசைபயி லஞ்சிறை வண்டு
பாவி னோடுவண் குழலெனத் திரிதலைப் பாராய்.

(கு - ரை.) ஒழிவறப் பொழியும் = இடைவிடாமல் சொரியும். காவினோடு = சோலைகளுடன். சிறை = இறகுகளையுடைய. பாவினோடு (செய்யப்படும்) பாவினிடத்து. குழல் = மூங்கில் குழல். (12)

கடிம லர்ப்பசுந் தேன்றுளி பிலிற்றுபைங் காவைக்
குடியி ருக்குமவ் வளவெனக் கொண்டுவெண் குருகு
மடிய டுத்தவ ரெனவிருந் திளங்கயல் வரலும்
நொடியி னிற்கவர் தண்பணை மருதமு நோக்காய்.

(கு - ரை.) குடியிருக்கும் = தாம் குடி யிருப்பதற் கியைந்த. அவ்வளவு என = எல்லையாம் என்று கருதி. குருகு = நாரைகள். மடி = சோம்பல். இருந்து = அசைவற இருந்து. பிலிற்றுதல் = சிந்துதல். பணை = வயல்கள். மருதமும் = மருத நிலத்தையும். (13)

குதிரை யங்கதிர் மணிக்குட நீர்குடிப் பதுபோல்
அதிரி ளங்கமஞ் சூல்வளை தவழ்வய லணிநெல்
கதிர்வ ளைந்துசெந் தாமரை வாயுறக் கவிழ்ந்து
நுதிபொ ருந்திய வழகையு மையநீ நோக்காய்.

(கு - ரை.) கதிர் = பிரகாசத்தையுடைய. குடம் = குடத்தில். அதிர் இளம் கமம் சூல்வளை = ஒலிக்கும் இளமையுடைய நிறைந்த கருக்கொண்ட சங்குகள். அணிநெல் கதிர் பாரத்தால் வளைந்தது என்க. வாய் = இடத்தில். நுதி = நுனி. (14)

இங்குத் தன்னுள்வாழ் பயிர்சியா லிறந்துயிர் போயும்
அங்குப் பொன்னெயில் வட்டத்து ளிருண்மனத் தமணர்
தங்கற் குன்னுமிப் பொன்னெயில் வட்டமுஞ் சடைமேல்
கங்கைப் பெண்ணமர் பரனடிக் கன்பநீ காணாய்.

(கு - ரை.) இங்கு = இவ்வுலகில். அங்கு = அவ்வுலகில். எயில் வட்டத்துள் = மதில் சூழ்ந்த நிலப்பரப்பில். இறந்தபின் ஆன்மா மேலுலகத்தில் தங்குதற்குச் சமைத்த பொன் எயில் வட்டம்போல் உடல் தங்குதற்கு இவ்வுலகில் அமைத்த பொன் எயில் வட்டம் இது என்பதுபடக் கூறினர். (15)

திறந்து மூடுநின் னுதலிமை விழியெனச் சேர்ந்து
பிறங்கு மாமணிக் கதவிரு புடையினும் பெற்றுச்

சிறந்த கோபுர வாய்தலு மலர்மிசைத் தெய்வம்
பறந்து நாடிய முடியிறைக் கன்பநீ பாராய்.

(கு - ரை.) வாய்தலும்=வாயிற்படியும். தெய்வம்=பிரமன். பறந்து நாடிய=அன்னப் பறவையாய்ப் பறந்து தேடிய. (16)

இலங்கு நீறெனுங் கவசமிட் டக்கமென் றியம்பும்
அலங்கல் வாகைவேய்ந் தஞ்செழுத் தத்திர மடுத்த
நலங்கொள் வீரராம் பத்தர்த மறுகமணள்ளார்
கலங்கு பாசறை போன்றெதிர் நிகழ்வது காணாய்.

(கு - ரை.) அக்கம் = உருத்திராக்ஷம். அலங்கல் = மாலை. வேய்ந்து=சூடி. அஞ்செழுத்தத்திரம் அடுத்த=பஞ்சாக்ஷரமாகிய பாணத் தொடு கூடிய. வீரராம் பத்தர்தம்=வீர சைவர்களுடைய. மறுகு=வீதி. அமண் கள்ளார்=சமணப் பகைவர். பாசறை=போர்ப்படை தங்குமிடம். நிகழ்வது=விளங்குவதை. (17)

கட்டு வார்சடைக் கண்ணுதல் பூசனைக் கருமம
மட்டு மாதவர் தீப்பசி யாற்றுறு மறமுள்
ளிட்டு மேற்புறங் கண்டவர் கொடியன வென்னப்
பட்டு மாளிகை பற்பல நிகழ்வன பாராய்.

(கு - ரை.) கருமமட்டுமாக என்க. அறம் உள்ளிட்டு=அறத்தை நினைத்து. மேற்புறம்=மேலுப்பரிகை. கொடியன=கொடிகள். என்னப் பட்டு=என்று சொல்லப்பட்டு. (18)

பொறித்த வாழையின் கனியினைக் கடைத்தலை பொருந்தக்
குறித்தி டாதுண வெனக்கறித் தலகுநோய் கொண்டு
நிறுத்து வாழையின் கனியுமச் செய்கையாய் நினைந்து
கறித்தி டாதமர் செம்முகப் பசுங்கிளி காணாய்.

(கு - ரை.) பொறித்த=சித்தரித்த. கடைத்தலை=முழுதும். குறித் திடாது=இது சித்திரமென்று குறித்து உணராமல். கறித்திடாது=கடிக் காமல். அலகு=வாயலகு. நிறுத்து=(வாயில் தோறும் உண்மையாக) நிறுத்தியிருந்த. இது மயக்கவணி. (19)

வள்ள னல்வச வன்புகழ் வாயினால் வழுத்தா
தெள்ளும் வல்லமண் குண்டர்தம் பிறப்பினு மிழிப்பில்
புள்ளு நல்லன வெனவிளம் பூவையோ டிருந்து
கிள்ளை யவ்வச வன்புகழ் சொல்வது கேளாய்.

(கு - ரை.) எள்ளும் = இகழும். இழிப்பு இல் = இழிவில்லாத. புள்ளும்=பறவைப் பிறப்பும். நல்லனவென=நற்பிறப்பின எனக் கூறு மாறு. பூவை=நாகணவாய்ப் பறவை. (20)

என்று கூறியவ் விராமனை மகிழ்வுசெய் தின்ப
மன்றல் வீதியில் வசவநா யகன்றிரு மனைமுன்

குன்று போலுயர் கோபுர வாய்தலைக் குறுகச்
சென்று மேவின னெம்மையா ளல்லம தேவன்.

(கு - ரை.) மன்றல்=மங்களகரமான. மேவினன்=அடைந்தான். ()

தொடர்த்து ளைக்கைவெண் மருப்புரற் காற்கருந் தோற்றோல்
உடுத்த மெய்ப்பரன் கொலைகுறித் தெடாமழு வொப்ப
அடைத்த லைக்குயித் திடாதசெம் மணிக்கத வடுத்த
கடைத்த லைக்கண்மா தவர்குழா நெருங்குதல் கண்டார்.

(கு - ரை.) தொடர்த்துளைக்கை=நீண்ட துளையுடைய துதிக்கையை யும். மருப்பு=தந்தமும். உரல்கால்=உரல்போன்ற காலும். கருந்தோல்=கருமை நிறமுமுடைய யானையினது. எடா=எடுக்காத. மழுப்ப=மழுவாயுதம்போல. அடைத்தலை=மூடிதலை. கடைத்தலை=கடைவாயிலின் கண். (22)

## வேறு

அறுசுவை யடிசி லுண்பா னடைகுவா ரடிசி லுண்டு
மறுகிடை வருவார் சான்றோர் வைகிய விடங்க ளேடிக்
கறியொடு மருவு சோற்றுக் காவடி சுமந்து செல்வார்
நறுமலர் சுமந்து தண்ட நாதன்பூ சனைக்குப் போவார்.

(கு - ரை.) உண்பான்=உண்ணும் பொருட்டு. அடிசில்=சோறு. மறுகிடை=வீதியில். தண்டநாதன்=சிவபிரான். (23)

செஞ்சர ணிறைஞ்சி நல்குஞ் செழுந்துகில் கிழித்துக் கீழ்கொண்
டெஞ்சிய மிகையென் றெண்ணி யிட்டவ னகன்று போவார்
அஞ்சுடர் மணிப்ப சும்பொன் னணிதுகி லலங்கல் சாந்தம்
வஞ்சியர் தமக்க ளிப்பத் தருகென வாங்கிச் செல்வார்.

(கு - ரை.) கீழ்கொண்டு = கௌபீனமாகத் தரித்துக்கொண்டு. எஞ்சிய = மிகுதி துணிகளை. மிகை = பயனில்லை. இட்டு = பிறர்க்குக் கொடுத்திட்டு. வஞ்சியர் தமக்கு=பெண்களுக்கு. மணி=இரத்தினங் களையும். (24)

நிந்தைசெய் தமையெ திர்ந்த நெறியில்புன் சமணர் தங்கள்
மைந்தினை யறியச் சொல்வம் வசவனுக் கென்று செல்வார்
நந்தியை வணங்க வேறு நகர்தொறு நின்று போந்து
சிந்துரம் வயமா வம்பொற் சிவிகைவிட் டிழிந்து செல்வார்.

(கு - ரை.) நெறியில்=சேர்மையில்லாத. மைந்தினை=வலிமையை. சிந்துரம்=யானை. வயமா=வெற்றியுடைய குதிரை. (25)

சீர்செழு வசவன் பாடத் திவவியாழ் கொண்டு செல்வார்
ஆகிவின மதனை வென்றோ னடியவர் குழாநெ ருங்கும்

ர்கெழு மணிப்ப சும்பொ னிருங்கடை நோக்கி நின்றார்
ஓகையோ டலம னுமத் தொருவனு மிராமன் றானும்.

(கு - ரை.) வசவன் = வசவனை. திவவு = வருகின்ற. வென் றோன்=வென்ற சிவபிரானது. கடை=கடைவாயிலை. ஓகை=மகிழ்ச்சி.

ஆயிடை நின்றோர் தம்மை யப்பணப் பெயரின் மிக்க
தூயவ னெதிர்கண் டோகை சொல்லுவ லையற் கென்று
கோயிலு ளமல பூசை குழாத்தொடு செய்யும் போதில்
போயினன் வசவ னோடு புகழ்ந்திது புகல லுற்றான்.

(கு - ரை.) நின்றோர்தம்மை=நின்ற அவ்விருவரையும். ஓகை= இம்மகிழ்வுச் செய்தியை. (27)

மாதவ ரிருவ ரையு மழைமதர் நெடுங்கண் மங்கை
பாதிய னுருவி ரண்டு படைத்துவந் தனனே யென்னச்
சோதிய தரளக் கோவைத் தோரண வாய்தன் முன்னம்
வீதியி னின்றா ரென்று விளம்பினன் றவத்தின் மிக்கான்.

(கு - ரை.) மழை=குளிர்ச்சி. மதர்=கொழுமை. தரளக்கோவைத் தோரணம்=முத்துமாலைத் தோரணங்கள். வாய்தல்=வாயிற்படி. (28)

என்றவ னியம்ப நந்தி யெனும்பெயர்க் கருணைக் குன்றம்
கன்றினை நினைந்து நெஞ்சங் கரைந்துவந் தணையுந் தாய்க்கிங்
கொன்றொரு தடையு முண்டோ வொல்லைநீ தருதி யென்னச்
சென்றவ னமல னோடு சித்தரா மனைவ ணங்கி.

(கு - ரை.) ஒன்றொரு தடையுமுண்டோ=யாதொரு தடைப்பாடும் உளதோ; இல்லை: ஆகலின் அவரை. ஒல்லை=விரைவில். தருதி=அவர் களை அழைத்துவருக. அவன்=அப்பணப் பெயரினன். (29)

பரசிவ லிங்க பூசை பண்ணிய பயனே யுங்கள்
வரவென வுளம கிழ்ந்தான் வசவனீர் வருக வென்ன
வெருவொடு முளமு ளைந்து மெய்த்தவன் விளம்ப வெங்கள்
குருபரன் முனிவான் போலக் குறுநகை கொண்டு கூறும்.

(கு - ரை.) வெருவு=அச்சம். உளம் உளைந்து=மனம் நடுங்கி. மெய்த்தவன்=அப்பணன். குருபரன்=அல்லமன். (30)

அரசிய லடைந்தார் தம்பா லையமேற் றருந்து நின்றோர்
வருசெயல் வரிசை யன்று மறித்துநீ போதி யென்னா
உரைசெய·வமல னப்ப னுளம்வெரீஇக் கடிது மீண்டு
வரைசெயும் வயிரத் திண்டோள் வசவநா யகற்குச் சொன்னான்.

(கு - ரை.) வரிசை=முறை. மறித்து=திரும்பி. அப்பன்=அப் பணன். வெரீஇ=அஞ்சி. வரைசெயும்=மலை ஒக்கும். (31)

அல்லமன் புகன்ற மாற்ற மப்பணன் சென்று நின்று
சொல்லலுந் துணுக்கென் றுள்ளஞ் சொற்றளர்ந் துடல்வி யர்த்துப்
புல்லவந் தணையுந் தாய்முன் பொறுதுதும் பறுத்திட் டோடும்
நல்லிளங் கன்று போன்முன் ஞன்செலா திருந்தே னென்று.

(கு - ரை.) மாற்றம்=சொற்களை. உள்ளம்துணுக்கென்று=மனந் திடுக்குற்று. புல்ல=தழுவ. தும்பு=கயிறு. (32)

கரைந்துகு மனமு ளைந்து கவலைகொண் டழுங்க நந்தி
பெருந்தகை மாச்சி தேவன் பெருங்கடற் பிறந்த சாவா
மருந்துதன் னெதிர்கி டைத்து மற்றதை வாரிக் கையால்
அருந்துற வலசு வான்போ லாயினை நீயு மென்றான்.

(கு - ரை.) உகும்=உருகும். சாவாமருந்து=அமுதம். அலசுதல்=கழுவுதல். மருந்து=அல்லமன். அலசுதல்போல் அவனை யிழத்தலின் இது எடுத்துக்காட் டுவமையணி. (33)

பெருந்தகை மாச்சி தேவன் பேசுசொல் விளக்குத் தூண்டும்
துரும்பென வுதவச் செம்பொற் றாளெணுந் தோளான் மாழ்கி
இருந்தவப் பிழையென் மேற்றே யென்றடி யிறைஞ்சி யொய்யென்
றருந்தவ ரொடுபுறப்பட் டல்லம னருகு வந்தான்.

(கு - ரை.) தோளான்=தோள்களையுடைய வசவண்ணன். மாழ்கி இருந்த=மயங்கிஇருந்த. ஒய்யென்று=விரைந்து. (34)

என்குண மறமே யாகி யானதிற் றிரித லில்லேன்
நின்குண மருளே யென்று னீயதி னிற்றி யெந்தாய்
புன்குண மகவின் றீமை பொறுத்தருள் செய்கை யென்னும்
தன்குணம் விடுத்தொ ழிக்குந் தாய்விய னுலகி லுண்டோ.

(கு - ரை.) மறம்=பாவம். திரிதல்இல்லேன்=மாறாதிருக்கின்றேன்.

சூத்திரப் பாவை யானச் சூத்திரி நீய ருட்கண்
பார்த்தெனைக் குறைய கற்றிப் பணிசெயக் கோடி யென்று
வாய்த்தநற் குரவன் செந்தா மரையடி மிசைவி ழுந்தான்
ஏத்திமெய்ப் பத்தி நீத்த மெனப்படும் வசவ தேவன்.

(கு - ரை.) சூத்திரப்பாவை=யான்கயிற்றினாலாடும்பதுமை; பதுமை யாகிய என்னை ஆட்டுவிப்பவர் நீர் என்றபடி. எனவே தனக்குச் சுதந்திர மின்மையை விளக்கினர். (36)

நிலமகள் பொறுது தள்ளி னிறுத்துநர் யாவ ரோதை
மலிகடல் புரளு மாயின் மறிப்பவ ருளரோ வெங்கள்
தலைவநீ முனிவை யாயிற் றடுப்பவ ருலகில் யாண்டும்
இலையிலை யருள்செ யெந்தா யெனச்சென்ன வசவன் றாழ்ந்தான்.

(கு - ரை.) நிறுத்துநர்=(கீழ்வீழாதபடி) தடுப்பவர்கள். ஓதை மலி=ஒலிநிறைந்த. மறிப்பவர்=தடுப்பவர்கள். (37)

சொற்றிடுங் குதலைச் சொல்லிற் சொற்றிறந் தெரிதல் போலிச்
சிற்றிளங் குமர னன்பு செயவடி யிடுமு னோக்கேல்
சற்குரு நின் கடைக்கண் வைத்துத் தண்ணளி புரிக வென்று
நற்றவ மாச்சி தேவ னங்குர வனைப்ப ணிந்தான்.

(கு-ரை.) குதலை=மழலை. அடியிடுமுன்=துவக்கும் முன். நோக்கேல்=குற்றம் காணுதீர். தண்ணளி=குளிர்ந்த அருள். (38)

உரைமன மெய்யொ ருங்கி யுன்பணி செய்ய வல்லோன்
தரைமிசை யிவன லாது தாரொரு வரையுங் காணேம்
அருள்செய வேண்டு மென்ன வல்லம னடிப ணிந்தான்
கிரிமகள் கொழுநற் கன்பன் கின்னரப் பிரம னம்மா.

(கு-ரை.) உரைமனமெய்=வாக்கு மனம் காயம் ஆகிய திரிகரணமும். ஒருங்கி=ஒன்றுதல் அடைந்து. தரைமிசை=பூவுலகில். (39)

எமையெலா மடிமை வேண்டி னிவன்பிழை பொறுத்தி யென்று
அமையுலாம் பணைமென் றோட்சே யரிமதர் மழைக்கட் செவ்வாய்
உமைமணு ளனையு வந்த வொண்டவ ரெலாம்ப ணிந்தார்
சமையுளா ருணரு மெங்க டம்பிரான் சாற்ற லுற்றான்.

(கு-ரை.) அடிமை வேண்டின்=அடிமைகொள்ள விரும்பினுல். அமை உலாம்=மூங்கில்போலும். பணை=பருத்த. சமையுளார்=சாந்த குணத் தவத்தர். சிவந்த செவ்வரிபடர்ந்த கொழுவிய குளிர்ந்த கண்களையும் (பவளம்போல்) சிவந்த வாயையும் உடைய உமை யென்க. (40)

சொல்லிய சொற்கள் கற்றீர் சொற்றவங் நெறியி னிற்கும்
நல்லிய லில்லை நும்பா னவிறரு மாற்ற மொன்று
புல்லிய செயலோன் றாகப் பொருந்துநர் தம்மி லார்க்கும்
பல்லிய மொடுந டிக்கும் பரதரே பெரிய ராவார்.

(கு-ரை.) நல்லியல் = நல்லொழுக்கம். நவில்தரும் மாற்றம்= சொல்லும்சொல். புல்லிய=மேற்கொண்ட; அற்பமான. பொருந்துநர் தம்மில்=கொண்டவரைக்காட்டிலும். ஆர்க்கும்=ஒலிக்கும். பல் இயம்= பல வாத்தியங்களுடன். பரதரே=கூத்தாடிகளே. (41)

ஆதர வில்லையேல் வேண்டு மறத்தினிற் பொருளோர் செம்பொன்
பூதர வளவ ளித்தும் பொருளழி வளவே யாகும்
ஆதர வுளதே னல்கும் பொருளணு வளவென் றூலும்
பூதர மெனவ ளர்ந்து புண்ணியப் பொருள ளிக்கும்.

(கு-ரை.) வேண்டும் = விரும்பிச்செய்யும். ஆதரவு = அன்பு. பூதரவளவு=மலையளவு. வேண்டும் அறத்தினில் ஆதரவிலையே லென இயைக்க. (42)

துறவற மனைய றஞ்சேர் தூய்மைநற் கல்வி நல்லோர்
உறவொடு மகங்க டான மொண்டவம் விரதம் பூசை

அறிவிவை யனைத்து மில்லை யாதர வில்லை யாயில்
பெறுவன மெய்வ ருத்தம் பெரும்பொரு ளழிவு மாதோ.

(கு - ரை.) அறிவு=ஞானமுமாகிய. அன்பில்லையேல் இவையனைத்தும் இருந்தும் இல்லை என்க. (43)

ஆதர வுடையான் செய்யு மல்லவு நல்ல வாகும்
ஆதர விலாதான் செய்யு நல்லவு மல்ல வாகும்
ஆதர வதனா லாவிக் கருந்துணை யின்ப முத்தி
ஆதர வலாது வேறொன் றளித்திடக் கண்ட துண்டோ.

(கு - ரை.) அல்லவும் = தீயனவும். ஆதரவதனால் = அன்பினால். துணையாவது பேரின்ப முத்தியாம். (44)

ஆதலா லன்பி னுஞ்சொல் லகமகிழ் வினைசெ யாவென்
றோதினா னடியர் தீமை யொழித்தரு டொழிலி னின்றோன்
காதலால் வணங்கி னோர்நின் கருணையா லன்றி யாங்கள்
எதினா னல்ல ராவே மென்றடி தொழுது நின்றார்.

(கு - ரை.) சொல்=பயனில் சொற்கள். நின்றோன்=நின்ற அல்லமன். எதினால்=எதனால். நல்லர் ஆவேம் எனப் பிரிக்க. (45)

காஞ்சிரங் கனிதின் றுங்குக் கடையனே னிழைபொ றுத்தாய்
தீஞ்சுவை யமிர்த மன்ன திவ்விய கறியிற் குற்றம்
ஆஞ்சுவை யறைதல் போலிவ் வன்பனைச் சீறே லென்று
பூஞ்சரண் மிசைவ ணங்கிப் போற்றினன் சித்த ராமன்.

(கு - ரை.) காஞ்சிரங்கனி=எட்டிக்கனி. கறியில்=பதார்த்தத்தில். சுவைக் குற்றம் அறைதல்போல் என்க. (46)

அடைக்கல மென்னை யாளா யண்ணலே யென்று நந்தி
கடிக்கம லங்கள் வென்ற கான்மிசை மீண்டுந் தாழ்ந்தான்
விடுத்திடே லென்று சென்ன வசவனும் வீழ்ந்தி றைஞ்சித்
தொடிக்கரந் தொழுதா னன்பர் துதித்தனர் சூழ்ந்து கொண்டு.

(கு - ரை.) கடி=மணம். விடுத்திடேல்=(என்னைக்) கைவிடாதீர். தொடிக்கரம்=கங்கணமணிந்த கரத்தால். (47)

அல்லம னெனுமெங் கோமா னருட்கடைக் கண்வைத் தைய
சொல்லுவ னெழுதி யென்று துணைக்கையா லெடுத்த ணைத்து
நல்லருள் புரிந்து தண்ட நாயகன் றிருமடத்துள்
எல்லையி லடியர் சூழ வினிதெழுந் தருளி னானால்.

(கு - ரை.) எழுதி=எழுந்திருப்பாயாக. துணை=இரண்டு. தண்டநாயகன்=வசவண்ணாரது. (48)

பதினான்காவது
வசவண்ணர்கதி முற்றிற்று.

கதி 14 - க்கு திருவிருத்தங்கள் - 772.

பதினைந்தாவது

# மருளசங்கரதேவர்கதி

## வேறு

தாணுவி னுயர்பிர சாத குண்டத்தில்
காணரு மருளசங் கரனைக் கண்டருள்
பூணணி யல்லமன் போத நல்கிய
மாணுறு நெறியினை வகுத்துக் கூறுவாம்.

(கு - ரை.) தாணுவின்=மலைபோல. பிரசாத குண்டம்=அடிய வர் உண்டு கழித்ததையிடும் இடம். அருள்பூணணி=அருளை யாபரண மாகத் தரித்த. போதம்=ஞானோபதேசம். நெறி=முறை. (1)

மாதவ ரெண்ணிலர் மருங்கு சூழ்தர
ஆதல ரெதிர்பொரு ளாக வல்லம
நாதனை யறிவறி நந்தி கொண்டுதன்
ஏதமின் மனையிடை யெய்தன் மேயினான்.

(கு - ரை.) ஆதலர்=வறிஞர்களுக்கு. எதிர்பொருளாக=எதிரில் இடைத்த (புதையற்) பொருளாக. அறிவறி=ஞானமுணர்ந்த. கொண்டு= அழைத்துக்கொண்டு. ஏதமில்=குற்றமில்லாத. (2)

அவத்தைகள் பற்பல வகன்று மெய்ப்பர
சிவத்தினை யடைபவர் செய்கை போற்கடை
தவப்பல கடந்துபோய்ச் சாதகுண் டத்தை
உவப்புட னடைந்தன னெப்பி லல்லமன்.

(கு - ரை.) அவத்தைகள்=சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரி யம், துரியாதீதம், மூர்ச்சை, மரணம் ஆதிய; விரிப்பிற் பெருகும். கடை = கடைவாயில் முதலாக. தவ = மிக்குள்ள. பல=பல வாயில் களையும். (3)

உயர்பிர சாதகுண் டத்தி னெண்கரை
மயன்மலி பித்தரின் மருள சங்கரன்
பயிலுதல் கண்ணுறீஇப் பரம யோகிதன்
இயலினை யுணர்ந்தன னெம்பி ரானரோ.

(கு - ரை.) கரை=ஓரத்தில். மயல்=மயக்கம். பயிலுதல்=சஞ் சரித்தலை. கண்ணுறீஇ=கண்டு. இயலினை=இயல்பை. (4)

கண்டரு ளமலனைக் கண்டு தானெதிர்
வெண்டிரை யமுதினை மிடியன் மேவியே

உண்டன னெனமகிழ்ந் தோடி வீழ்ந்தனன்
வண்டிரு வடிமிசை மருள சங்கரன்.

(கு - ரை.) கண்டருள் = தன்னைக்கண்ட. வெண்டிரை = பாற்கடலை யுணர்த்திற்று. வண் = வளப்பம். (5)

வணங்கிய வறவனை வந்தெ டுத்துமெய்
அணைந்தெழு மூவகையோ டருள்செய் தல்லமன்
இணங்குற வருணிலை யிராமற் பார்த்தவன்
குணங்களை வியந்திது கூறன் மேயினன்.

(கு - ரை.) அறவனை = தருமவுருவானவனை. மெய் = திருமேனியில். அணைந்து = தழுவிக்கொண்டு. அவன் = அம்மருள சங்கரன். (6)

குண்டமே வுறுபிர சாதங் கொள்ளைகொண்
டுண்டுவாழ் மாதவ னுண்மைத் தன்மையைத்
தண்டநா யகன்முதற் சரணர் யாவரும்
கண்டிலர் யாரினிக் காண வல்லவர்.

(கு - ரை.) பிரசாதம் = ஈண்டு அடியர் உண்டு கழித்த எச்சில் உணவு. கொள்ளை கொள்ளையாக ஏற்று. மாதவன் = மருளசங்கரன் (7)

சரிதையொண் கிரியைகா றடுக்கும் யோகிவை
புரிபவர் தம்மையப் புரியுஞ் செய்கையால்
தெரிதர லாகுமோர் செயலு மின்றிவாழ்
அரியநன் ஞானியை யறிய லாகுமோ.

(கு - ரை.) கால் = பிராண வாயுவை. அப்புரியும் = அங்ஙனம் செய்யும். தெரிதரலாகும் = அறிதற்கு இயலும். (8)

நலமுறு மோர்சிவ ஞானி யில்லில்வாழ்
நிலையற மாகினு நீத்து நிற்குமோர்
தலையற மாகினுந் தரித்து ஞாலமேல்
இலைமறை காயென விருக்கு மென்பவே.

(கு - ரை.) ஓர் = ஒப்பற்ற. நிலையறமாகினும் = நிலைத்த இல்லறத்தானாயினும். நீத்து நிற்கும் = மனத்தில் பற்றற்றிருக்கும். தலையறம் = துறவறம். ஞாலமேல் தரித்து = நிலவுலகில் இருந்து. (9)

வல்லனென் றிருப்பினு மிருக்கும் வன்மையொன்
றில்லனென் றிருப்பினு மிருக்கு மெள்ளுறப்
புல்லனென் றிருப்பினு மிருக்கும் புண்ணிய
நல்லனென் றிருப்பினு மிருக்கு ஞானியே.

(கு - ரை.) வல்லன் = வலி மிக்கவன். இல்லன் = இல்லாதவன். எள்ளுற = இகழ. புல்லன் = புன்மையன்; அற்பன். (10)

அறிவறி ஞானியா லன்றி வன்பவம்
மறிவுறு கருமியான் மாய்வு றாதுகாண்
எறிகதி ரிரவிவந் தெழுந்தி டாவிடில்
செறியிரு ளகலுமோ சித்த ராமனே.

(கு - ரை.) வன்பவம்=கொடிய பிறவிநோய். மறிவுறு=(அறிவு) மடங்கிய; ஞானமில்லாத. மாய்வுறாது=அழியாது. எறிகதிர்=வீசும் கிரணங்களையுடைய. இரவி=சூரியன். (11)

சங்கர முனிநிலை தனைக்கண் டாய்கொலென்
றெங்குரு பரன்சொல விராமன் கைதொழு
திங்கிவன் மருளரி லிருந்த தன்மையென்
அங்கண வறைகென வறைதன் மேயினன்.

(கு - ரை.) சங்கரமுனி=மருள சங்கரதேவர். மருளரில்=பித்தரைப்போல். அங்கண=அழகிய அருட்கண்ணை; விளி. (12)

## வேறு

தொழிலான் முயன்று நுகர்வமெனிற் றுயரொன் றுயிர்க்கு விளையு
ஒழியா வமல சரமூர்த்தி யுண்ட மிச்சி னுகர்வமெனில் [மென
பழியா துமிலை யகன்றுபோம் பவமு மென்னப் பிரசாதக்
குழியா னதனை யகலாமற் கொண்டிங் கிருந்தான் குணமிக்கான்.

(கு - ரை.) நுகர்வம் = உண்பம். அமல சரமூர்த்தி = தூயராய் உலவும் சாதுக்கள்; நடமாடும் தெய்வங்கள் என்றபடி. மிச்சில்=மீதம். ()

பந்த மகன்ற சிவபத்தர் பாதம் விளக்கும் புனற்குழியில்
வந்து பிறந்து மூழ்கியதில் வைகும் புழுவின் பெரும்பேறு
முந்து கங்கை முதலவா முற்றும் படிந்து தீவினைகள்
சிந்து மந்த ணளருமே சேரா ரென்று மறைசாற்றும்.

(கு - ரை) புனல் குழியில் = நீர் நிறைந்த பள்ளத்தில். பெரும்பேறு=பெரிய பயன். முந்து=முதன்மையான. முதலவா=முதலான நதிகள். படிந்து=மூழ்கி. சிந்தும்=ஒழிக்கும். (14)

தாய்க்கு வழுவின் மகளிர்க்குத் தந்தை தனக்குப் பசுவிற்குச்
சேய்க்கு மறையோர் தமக்கிடர்செய் தீர்வில் கொடிய பாதகமும்
போக்கு மிமைப்பிற் கரணத்தைப் புனித மாக்கிச் சிவமாக
ஆக்கு மரன்றன் பிரசாத மாயி னதற்கு நிகருண்டோ.

(கு - ரை.) தீர்வில்=கழுவாயில்லாத. இமைப்பில்=இமையளவு பொழுதில். பாதகம்போக்கி சிவமாக்குமென்க. (15)

பசிக்கு மருந்து மாய்வீடு பயக்கும் வண்மை சேர்ந்துபவம்
ஒசிக்கு மரன்றன் பிரசாத வூதி யந்தா னுணர்ந்திங்கு

வசிக்குந் தகைமை சங்கரற்கே வருவ தன்றிப் பசிக்குணவு
புசிக்கு மனிதர் தமக்கென்றும் பொருந்தா தென்று னெம்பிரான்.

(கு - ரை.) பிரசாத வூதியந்தான் மருந்தாய், வீடுபயக்கும்; வண்மை சேர்ந்து பவமொசிக்கும் என்க. வண்மை=வளப்பம். ஊதியம்=இலாபம். ஒசிக்கும்=அழிக்கும். பொருந்தாது=வாய்க்காது. (16)

நின்னை யறிவன் சங்கரனே நீயே யவனை யறிகுவாய்
பின்னை யுலகில் யாரறிவார் பேசிற் பாம்பே பாம்பின்கால்
தன்னை யறியு மெனவமலன் றுட்டா மரையின் கீழ்ப்பணிந்தான்
என்னை யடிமை யாவுடைய விராம னென்னு மிணையில்லான்.

(கு - ரை.) பேசில்=கூறுமிடத்து. என=என்று கூறி. (17)

அம்பொன் வைப்பின் மீதிருந்து மறியா தல்லற் படுவான்போல்
நம்பன் மருள சங்கரனை நானே வறியா திருந்தழிந்தேன்
இம்பர் மருவி நிரஞ்சனநீ யெனக்குக் காட்டித் தந்தனையென்
றும்பர் பரவு மல்லமனை யுவந்து பணிந்தா னருணந்தி.

(கு - ரை.) வைப்பின்மீது=புதையல் பொருள்மேல். நம்பன்= நம்பிச் சரணடையத்தக்கவனான. அறியாது இருந்து அழிந்தேன் எனப் பிரிக்க. இம்பர்=இவ்விடத்தில். நிரஞ்சன=மலமில்லாதவனே. (18)

இணங்கு மிக்க காமிதனக் கின்ப மூடல் சரலிங்கம்
பிணங்கன் முத்தி காமிக்குப் பேரின் பென்ப துணர்த்தற்குக் [ரவின்
குணங்கண் மிக்காய் நினைச்சினந்தாங் குறையொன் றுளதோ நினக்க
டணங்கொ ணிலத்திற் பரமசிவ பத்திக் குவானீ யென்றக்கால்.

(கு - ரை.) இணங்கும் = உடன்பட்ட. ஊடல் = (தலைவி தன்னொடு) பிணங்கலாம். சரலிங்கம் பிணங்கல்=சிறந்த அடியார்கள். (தம் மீது) சினத்தல். முத்தி காமிக்கு = வீடுபேறு விரும்பினோனுக்கு. உணர்த்தற்கு=(பிறருக்கு) அறிவித்தற்கு. வான்=மேகம். உலகை விழைந்தோனுக்கு இல்லாள் ஊடலில் இன்பமும், வீடுபேற்றின் விழைவுடையோனுக்கு குரவன் சினத்தலில் பேரின்பமும் விளையுமென்றபடி. ()

இங்கு மருள சங்கரன்போ லெண்ணரி லார்நின் மனைவாய்தல்
கங்குல் பகலு மகலாமற் காப்ப ரென்னி னின்முன்றில்
பங்க வினையின் வலிகடந்த பலருந் தாஞ்செய் தவப்பயனால்
தங்கு கயிலை மலையன்றோ தண்ட நாத வென்றமலன்.

(கு - ரை.) வாய்தல்=கடைவாயிலில். என்னின்=என்றால். முன்றில்=முன் வாசல்; இலக்கணப்போலி. பங்கவினையின்=சேறான கன்மத்தின். நின்முன்றில் கயிலைமலை யன்றோ என முடிக்க. (20)

வெம்மை யெதன்க ணிகழ்ந்திடினும் வெந்தீக் குணமென் பதுபோல
மும்மை யுலகின் யாண்டேனு முளைக்கிற் பத்தி யதைநினதென்
றிம்மை யுலக மியம்புமெனி லெங்கள் வசவ நின்பெருமை
கொம்மை யிளமென் முலைமடந்தை கூற னன்றி யாரறிவார்.

(கு - ரை.) வெம்மை=வெப்பம். நிகழ்ந்திடினும் = உற்பவித்தாலும். தீக்குணம்=அக்கினியின் குணம். மும்மை யுலகில்=விண் மண் பாதலமான மூவுலகத்தில். இம்மை யுலகம்=இவ் வுலகம்; இடவாகு பெயராய் உயர்ந்தவரை யுணர்த்திற்று. மடந்தை கூறன்=தேவிபாகனான சிவபிரான். (21)

பத்திக் கடலே குணக்குன்றே பாசப் பகையே யெம்முறவே
முத்திக் கரசே சிவானந்த முதலே ஞான மணிவிளக்கே
சித்திப் பொருளே யருணந்தித் தேவே நின்னைத் தொழுமடியார்
புத்திக் கமுதே யாவர்நினைப் போல்வா ரவரை யறியேமால்.

(கு - ரை.) பாசப்பகையே=பாசங்களைச் சேதிக்கும் பகைவனே. சித்தி=எண்வகைச் சித்தியின். அமுதே=அமுதுபோல்பவனே. (22)

என்று கூற வெமையுடையா னெனக்குப் புகன்ற நலமெல்லாம்
சென்ற நாளி லில்லினது செந்தா மரைத்தா டொழப்பெற்ற
இன்று தொடங்கி யுளவாமென் றெந்தை நந்தி வணங்கியெழ
நின்ற வமல சிவசரணர் நெஞ்ச முவகை பூத்தனரால்.

(கு - ரை.) எமையுடையான் = எங்களை (அடிமையாக) உடைய அல்லமர். உவகை பூத்தனர்=மகிழ்வில் மலர்ந்தனர். ஆல்=அசை. (23)

அருளான் மருள சங்கரனுக் கமரர் தாமு மறிவரிய
பொருளா கியபே ரின்பவநு பூதி விளக்க மருள்செய் தான்
உரையா னினைவா லருணோக்கா லுலக ருணர்வைப் பிணித்தமல
இருளா னதனை யறமாற்ற வெழுந்த ஞான சூரியனே.

(கு - ரை.) பொருளாகிய=மெய்ப்பொருளான. அநுபூதி=சுவாநுபூதி. உரையால்=வாசக தீக்கையால். நினைவால்=மானததீக்கையால். அருணோக்கால்=சட்சு தீக்கையால். பிணித்த=பந்தித்த. (24)

பதினைந்தாவது

மருளசங்கரதேவர்கதி முற்றிற்று.

கதி 15 - க்கு திருவிருத்தங்கள் - 796.

பதினாறாவது

# இட்டலிங்ககதி

## வேறு

சிட்ட னல்லம தேவ னருளுறீஇ
நட்ட நண்பொடு நந்தி யுணர்வுற
இட்ட லிங்கத் தியல்பு புகன்றமை
கட்டு வல்வினைக் கட்டற வோதுவாம்.

(கு - ரை.) சிட்டன்=மேலோன். அருள்உறீஇ=அருள் சுரந்து. நந்தி=வசவண்ணர். உணர்வுற=ஞானமடைய. கட்டு=கட்டிய; கூட்டமாகிய. கட்டற=பந்தமற. (1)

சங்க ரற்குத் தனிநிக ரின்பவீ
டங்க ளித்தரு ளல்லம னந்திதன்
மங்க லத்திரு மாளிகை கட்செவிக்
கங்க ணற்கினி யாரொடு கண்டனன்.

(கு - ரை.) கட்செவிக்கங்கணற்கினியாரொடு=பாம்பைக் கங்கணமாக்கொண்ட சிவபிரானுக்கு அன்பர்களுடன். கண்ணையே காதாகவுடைமையால் பாப்புகட்குக் கட்செவி யெனும் பெயரெய்திய தென்க. ()

மண்டு பேரொளி மாடத்து நாப்பணம்
தண்ட நாதன் றவிசொன் றமைத்திட
அண்ட நாயக னல்லம னாயிடைக்
கண்ட நோக்கங் களிப்ப விருந்தனன்.

(கு - ரை.) நாப்பண்=நடுவில். தவிசு=பீடம். கண்டநோக்கம்=(தன்னை) நோக்கிய அன்பர் கண்கள் எலாம். (3)

ஆத னத்தி லமர்ந்தரு ளல்லமன்
பாத மன்பொடு பன்மலர் தூயிது
மாத வத்தின் வலியெனத் தாழ்ந்தெழு
காதன் மிக்குக் கசிந்துள நந்திதான்.

(கு - ரை.) தூய்=தூவி. இது=இவ்வர்ச்சனை. காதல்=அன்பு. ()

அடிய னேன்சிவ பத்தி யறிந்தமை
படியி லூமன் கனவெனப் பட்டது
முடியு மாறு மொழிந்தரு ளென்றுபொன்
தொடியு லாங்கை தொழுது விளம்பினான்.

(கு - ரை.) படியில்=இவ்வுலகில். ஊமைகண்ட கனவுபோலுமென்க. முடியுமாறு=(அவ்வன்பு)நிறைவழியை. மொழிந்தருள்=அநுக்ரகிப்பீராக.

கேட்ட வாரியன் கேடில் சிவநெறிக்
கூட்ட மேவுறு கொள்கையி னுய்தினைக்
காட்டு வாருள ரோசெங் கதிர்க்கிருள்
ஓட்டு சோதியு முண்டுகொ லோவென்றான்.

(கு - ரை.) ஆரியன்=அல்லமன். கேடில்=அழிவில்லாத. சிவநெறிக்கூட்டம்=சிவத்திருப்பணியுடையார் கூட்டம். மேவுறும்=விரும்பும். இனை=உனக்கு; வேற்றுமை மயக்கம். காட்டுவார்=(சிவபக்தியைக்) காட்டுவாரும். செங்கதிர்க்கு=சூரியனுக்கு. (6)

வள்ள லின்றெனை வந்து புகழ்ந்தனன்
தெள்ளு தண்புனற் றேக்கு மூளைத்தலைக்
கிள்ளி நின்றெறி கின்றவர் போலெனை
உள்ளு டைந்திட் டுரைக்கும் வசவனே.

(கு - ரை.) வள்ளல் = அல்லமன். தெள்ளு = தெளிவாகிய. புனல்=நீரில். தேக்கு=தேக்குமரத்தை. மூளைத்தலை=மூளையிலேயே. உள் உடைந்திட்டு=மனம் நெகிழ்ந்து. (7)

## வேறு

இகழ்ந்தென துளச்செருக் கினைய கற்றிலாய்
புகழ்ந்தனை விழைபுளிங் கறியிட் டாறுநோய்
மிகுந்தெழ வளர்த்தல்போ லெனவி ளம்புபு
தகுங்கழ லிறைஞ்சினன் றண்ட நாயகன்.

(கு - ரை.) உளச்செருக்கு=மனத்தி னகங்காரம். போன நோயைப் புளியிட் டழைத்தல்போல் என்னும் பழமொழியை யிதனிற் காண்க. (8)

அருளினு னினதடி யருச்சிக் கும்படி
தெருளிலா வெனக்குரை செய்தி யென்றுநும்
மருளனு மெனுமொரு மதினுற் கீந்தருள்
பொருளினு னினையன புகறன் மேயினான்.

(கு - ரை.) தெருள்=தெளிவு. உரைசெய்தி=அநுக்கிரகஞ் செய்தி. மருளனும் ஒரு மதினுற்கு=மருள சங்கரனெனும் ஒப்பற்ற ஞானிக்கு. ஈந்தருள்=அநுக்ரகித்த. பொருளினான்=சிறந்த பொருளான அல்லமன்.

புன்மர நெளிபுழுப் புள்வி லங்கெனும்
பன்மைய துயர்செயும் பவங்க டப்பியே
வன்மைகொ ணிலமிசை மக்க ளாகுதல்
நன்மைகொ ளுயிர்க்கலா லரிது நந்தியே.

(கு - ரை.) பன்மைய=பலவேறுபட்ட. பவங்கள்=பிறப்புக்கள். நன்மைகொளுயிர்க்கலால்=புண்ணிய ஆன்மாக்களுக்கல்லாமல். (10)

நரர்வடி வாயினு நன்மை யாற்றுரு
மரபினி னுலகினில் வருத றப்புதல்
அரிதுநல் லறம்புரி வழிய டுப்பினும்
மருவுத லரிதறம் வளர்க்கு மங்கமே.

(கு - ரை.) நரர்வடிவாயினும்=மானுடராய்ப் பிறந்தாலும். நன்மை ஆற்றுருமரபில்=நல்லறம் செய்யா சந்ததியில். வருதல் தப்புதல்=வந்து பிறத்தலைத் தவிர்தல். வழிஅடுப்பினும்=சந்ததியிற் பிறந்தாலும். அங்கம்=தேகம். மருவுதல் அரிது=பெறுவது அருமை. (11)

அறத்துறுப் பெய்தினு மன்பி னுலறம்
சிறப்புறச் செய்தலிங் கரிது செய்யினும்
புறச்சம யங்களைப் போக்கி யாகம
நெறிச்சம யங்களை யரிது நேர்தலே.

(கு - ரை.) உலகாயதம், பௌத்தம், மாத்யமிகம், யோகசாரம், சௌத்ராந்திகம், வைபாடிகம், ஆருகதம் ஆதிய புறப்புறச் சமயங்களும்; தருக்கம், மீமாஞ்சை, ஏகான்மவாதம், சாங்கியம், யோகம், பாஞ்சராத்திரம் ஆதிய புறச்சமயங்களும்; பாசுபதம், மாவிரதம், காபாலம், வாமம், வைரவம், ஐக்யவாதம் ஆதிய அகப்புறச்சமயங்களுமாதியவை, யீண்டு புறச்சமயங்கள் எனப்பெற்றன. நேர்தல்=அனுசரித்தல். (12)

ஆகமம் புகனெறி யடைவ னுயினும்
சோகமில் சைவநற் றுறையை நன்றெனச்
சேர்குத லரிதது சேர்வ னுயினும்
ஏகலிங் கயிக்யனு குதலன் றெண்மையே.

(கு - ரை.) சோகம்இல்=சோர்வு இல்லாத. பேரின்பக்கடலில் மூழ்குவிக்கும் நிலையமாகலின் 'துறை' யென்றார். அன்றெண்மையே=எண்மையன்றே; எளிதல்லவே என்றபடி. (13)

புண்ணிய முதிர்வினுற் பொருந்தி யங்கையில்
கண்ணுற நிகழ்வுறு சிவலிங் கத்தினை
எண்ணிய மனமுட னென்றும் வந்தனை
பண்ணிய முயல்பவன் பத்த னென்பவே.

(கு - ரை.) கண்ணுற=கண்ணிற்பட. பண்ணிய=செய்ய. (14)

ஆவுறு பிணிகெட வாவின் பால்கறந்
தாவினை யூட்டல்போ லாண வங்கெட
ஆவியு ளமலனை யங்கை தந்துபின்
ஆவியு ளமைவுற வாக்கு மாரியன்.

(கு - ரை.) ஆ=பசுவிற்கு. உறு=நேர்ந்த. பிணிகெட=நோய் அகல. உயிரிற் பிரிவறநின்ற இறைவனை உள்ளங்கையில் வரவைத்து, பின்

.பிநள் பேதாபேதம் கடந்தமையக் குரவன் புரிவனென்றபடி: இதுவே ரீசைவ சமய உட்கோள். (15 )

கருங்கொடி யிருவிழிக் கண்ணு மோர்மணி
திரிந்திடு செயலெனத் திரித லின்றியே
பொருந்துறு மகமொடு புறமுந் தீர்வற
இருந்தில குறுமரு ளிட்ட லிங்கமே.

(கு - ரை.) "காகத் திருகண்ணிற் கொன்றே மணிகலந் தாங்கு" ன்பது எட்டாம் திருமுறை. கருங்கொடி=காகத்தின். விழிக்கண் ணும்=கண்களிலும். திரிந்திடு=திரியும். திரிதல்=அலைதல். தீர்வற= ீக்கமின்றி. (16)

குறிபல பலமுறை கொண்டு பல்வகைப்
பொறிதொறு மருவியொண் புலனு கர்ந்துமாய்ந்
தறிவருந் நிலையவா தார மேவியும்
நிறைவுறு மங்கையி னிகழு மிட்டமே.

(கு - ரை.) அம்கையின் நிகழும் இட்டலிங்கம் பல குறிகளை பல முறை கொண்டு என இயைக்க. நுகர்ந்து=அநுபவித்து. மாய்ந்து=(பின் ரு பெயரு மின்றி) அழிந்து. அறிவருநிலைய=அறிதற்கரிய அநுபூதி. நிலை களுக்கு. ஆதாரமேவியும்=ஆதாரமான தன்மை யடைந்தும். (17)

அடைந்துள வுருச்சுவை யமைதி யென்பன
உடம்பொரு மூன்றினு முற்ற டைந்திடும்
தொடர்ந்துள வினைவலி தொலைத்தி யானெனும்
இடும்பையி லின்பரு ளிட்ட லிங்கமே.

(கு - ரை.) பல் பிறவியில் தொடர்ந்த வினைகளை நீக்கி, யான் என் னும் அகங்காரத்தால் விளையும் துன்பமில்லா இன்பம் அருளும் இட்ட லிங்கமானது, ஆன்மா தூல உடலில் உள்ள வமயம் உருவலிங்கமாகியும், சூக்கும உடலில் உள்ளவமயம் சுவைமயமாகியும், காரண உடலில் உள்ள அமயம் அமைதியாயும் விளங்கும் என்றபடி. (18)

என்றறி வறவறிந் திட்ட லிங்கமாம்
ஒன்றொரு பொருளிலே யுறவி ழித்தவன்
பொன்றுறு சகமெனப் புணர்ந்த மாயையை
வென்றவ னவனென்று விளம்பும் வேதமே.

(கு - ரை.) என்று அறிவு அற அறிந்து=என்றிங்ஙனம் அறிவின் முழுமையையும் அறிந்து. ஒன்றொரு பொருளிலே=ஒப்பற்ற பொருளிலே. றவிழித்தவன்=இடையறாது விழித்துக் கொண்டிருப்பவன். பொன்றுறு கம் என=அழிந்திடும் உலகம் ஒத்து. (19)

பொருவில்சற் பத்தியாந் தாரம் பூண்டொரு
வரவயி ராகமாம் வத்தி ரம்புனைந்

தொருவலி னுணர்வெனுஞ் செச்சை யொன்றுறப்
பரமனை யிருத்துவோன் பத்த னுருவான்.

(கு - ரை.) ஒரு=ஒப்பற்ற. தாரம்=கயிற்றில். வர=மேலான. வத்திரம் = ஆடை. ஒருவலில் = நீங்காத. செச்சை = அரைக்கச்சு. ஒன்றுற=பொருந்த. (20)

ஒன்றினொன் றுள்ளுற வுடம்பு மூன்றையும்
மன்றநல் வத்திர மடிய தாக்கியே
என்றுமங் கமைவுற விட்டம் வைப்பனேல்
அன்றவன் சிவமய மாகு மென்பவே.

(கு - ரை.) உள்ளுற=பொருந்த. மன்ற=பெரிதும். மடியதாக்கி= மடிப்பாக்கி. அமைவுற=அமைதியுண்டாக. இட்டம்=இட்டலிங்கம். சிவ மயம்=சிவத்துடன் கலந்து விளங்கல். ஆகும்=நேரும். (21)

அருளெனும் புனலினை யாட்டிச் சாந்தமாம்
வரைநறுஞ் சந்தொடு மருவ விந்திய
விரைமலர் புனைந்தறி வினைய ருத்துறில்
பரமனை யவன்சிவ பத்த னுருவான்.

(கு - ரை.) புனலினை ஆட்டி=நீராட்டி. சாந்தம்=பொறை. சந்து= சந்தனம். இந்தியம்=பஞ்சேந்திரியங்களான. அறிவினைப் பரமனை அருத் துறில்=அறிவாகிய நிவேதனத்தைப் பரமனுக்கு சமர்ப்பித்தால். (22)

ஆசறு மனத்தெழு மன்பை யன்றியே
பூசனை யுவக்கிலென் புராரி சென்னிமேல்
வீசுறு திரையினு மிக்க தோசொலாய்
ஊசல்செய் மனமுடை யொருவ னட்டுநீர்.

(கு - ரை.) ஆசு=குற்றம். புராரி=முப்புரமெரித்த இறைவன். திரையினும்=அலைகளையுடைய கங்கையினும். (23)

பூப்புனை கையுமெம் புனிதன் றன்புகழ்
பாப்புனை நாவுமே படைத்து ளான்றனைச்
சேப்புனை கொடியுடைத் தேவ னேயென
நாப்புனை புகழொடு நாக ரேத்துவார்.

(கு - ரை.) பூப்புனை=பூவினால் அருச்சிக்கும். பா=பாக்களால். சேப்புனைகொடி=இடபக்கொடி. நாகர்=வானவர். (24)

பூசனை செயாதகை புராந்த கன்புகழ்
பேசுத லிலாதவாய் பெற்று முன்றிடும்
நீசரா னவர்தமி னெடுவ னத்திடைக்
கூசுத லிலாதபுன் குரங்கு நன்றரோ.

(கு - ரை.) "வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும் தாழ்த்த சென்னியும்" என்பது தமிழ்மறை. புராந்தகன்=சிவபிரான். (25)

குடிப்பன விழுங்குவ கூரெ யிற்றினல்
கடிப்பன நக்குவ வனைத்துங் கைம்மலர்
அடுத்துள சிவன்றனக் கர்ப்பித் துண்பவன்
விடுத்தவன் மேல்வரும் வினைகள் யாவுமே.

(கு - ரை.) எயிறு=பல். கைம்மலர்=கையாகிய மலரில். அர்ப்பித்து=நிவேதனம்செய்து. வினைகள் விடுத்தவன் என்க. (26)

தானுறு முடன்மனந் தனமென் றுள்ளவை
ஈனமில் குருசிவ சரங்கட் கீந்துதான்
யானென தென்குத லின்றி வைகுமேவோன்
மேனிகழ் சிவமொடு வேற லானரோ.

(கு - ரை.) தான் உறும் உடல் = தான் அடைந்த தேகமும். தனம்=பொருளும். குரு சிவசரங்கட்கு=குருலிங்க சங்கமர்களுக்கு. மேல் நிகழ்=யாவருக்கும் மேலாக விளங்கும். (27)

குருசிவ சரங்கொளக் கொடுத்த மெய்மனம்
பொருளிவை நமவெனப் புந்தி செய்துகொள்
ஒருவனில் வழிமறித் தொறுத்துக் கொள்வன
சரனனி நல்லன்மெய் தவறி லாமையால்.

(கு - ரை.) நம = நம்முடையன. புந்தி செய்தல் = நினைத்தல். ஒருவனில்=ஒருவனைக்காட்டிலும். ஒறுத்து=தண்டித்து. கொள்=அபகரித்துக்கொள்ளும். வனசரன் = வேடன்; 'ஆறலைப்பவன்' என்னும் தன் பெயருக்கு ஒப்பக் கவர்பவனுதலின் 'மெய்தவறிலாமையால் வனசரன் னனிநல்லன்' என்றூர். (28)

விடுவன காமம்வெவ் வெகுளி மாலிவை
தொடுவன குருசிவ சரங்க டொல்பவம்
கடுவென வெருவிய கருத்து ளார்க்கிவண்
அடுவன வெனப்புல னட்ட வாற்றலாய்.

(கு - ரை.) மால் = மயக்கம். பவம் = பிறப்பை. கடு = விடம். அடுவன=ஒழிக்கத்தக்கன. அட்ட=வென்ற. (29)

அங்கையி னமர்தரு மரனை விட்டொரு
வெங்கட வுளர்தமை விழைந்து போற்றுவார்
கங்கையை யகன்றுவர்க் கழியின் மூழ்குநர்
தங்களின் வேறலர் தரும மூர்த்தியே.

(கு - ரை.) வெம்கடவுளர்தமை=கொடியதேவதைகளை. விழைந்து=விரும்பி. உவர்க்கழி=உப்பங்கழி. அரனை=இட்டலிங்கமூர்த்தியை.

மோகமில் குருசர முனியின் முன்னுள
தாகிய செயிர்முழு தகன்று வண்டுறை
போகிய மடியெனப் புனித னுருமேல்
பாகியன் மொழியுமை பாகற் கன்பனும்.

(கு - ரை.) குருசரமுனியின்முன்=குருலிங்க சங்கமர்களுக்குமுன். செயிர்=குற்றம். வண் துறை=தெள்ளிய (நீர்த்) துறை. போகியமடி என=மாசகன்ற ஆடை என. பாகியல்=வெல்லப்பாகுபோன்ற. (31)

விள்ளரு நற்சிவ வேடத் தோர்பொருள்
கொள்ளைகொள் கிற்பினுங் குறைகள் கூறினும்
பிள்ளையை யறுப்பினும் பிழைகள் செய்யினும்
எள்ளுத லிலனெனி லீசற் கன்பனும்.

(கு - ரை.) இயற்பகை, திருநீலகண்டர், மெய்ப்பொருளார், சிறுத்தொண்டராதியரை நினைக்க. எள்ளுதல்=சிவசரணரை யிகழ்தல். (32)

சங்கமந் தனக்கொரு சாதி யுன்னினன்
அங்கையி னமர்தரு மாற்கு முன்னினன்
சங்கர னொடுசரந் தம்மில் வேறெனும்
அங்கவ னறிவரு மளற்ற ழுங்குவான்.

(கு - ரை.) சங்கமந் தனக்கு=அடியார்களுக்கு. ஒரு சாதி=சாதி வேற்றுமை. சரம் தம்மில்=அடியர் தங்களில். வேறு எனும்=வேறு வேறெனக் கருதும். அளற்று=நரகத்து. (33)

தலைமைகொள் குருசிவ சரங்கட் காகவே
உலையிடு மரிசியன் றேரங்கன் மத்தெறி
அலையமு தாந்தமக் காக வாக்குறில்
கொலைசெயு நஞ்சினுங் கொடிய தாகுமால்.

(கு - ரை.) அன்று=அந்நாள். ஓங்கல்மத்து=மந்தர மலையாகிய மத்து. எறி=கடைந்த. அலை=பாற்கடலி லுண்டான. அமுதாம்=அமுது போல்வதாம். தமக்காக=தமக்கு இயைந்ததாக எண்ணி. ஆக்குறில்= சமைத்தால். (34)

தனுவுள வளவுமோர் தகுநற் செய்கையும்
மனமுள வளவும்பா வனையு ஞானமுண்
டெனவுள வளவுஞே யமுமி யைந்தவன்
பிணையுள வளவுநோய் பிறர்க்க கற்றுமே.

(கு - ரை.) தனு உள அளவும்=தேகம் உள்ளவரை. ஞேயம்= காட்சிப்பொருளும்; இன்பமும். நோய்=(பிறவி) நோயை. (35)

ஈசனை யிருத்துறு மிதயத் தோர்பொருள்
ஆசையை யிருத்துத லந்த ணுளர்தாம்

வாசமுற் றிடுமொரு மனையிற் புன்செயல்
நீசரை யிருத்துத னிகர்க்கு மென்பரால்.

(கு-ரை.) இறைதங்கு மிதயத்துள் பொருளாசை தங்கல் அந்தண ரில்லில் ஒழுக்க ஈனரை யிருத்தல்போலாம் என்க. (36)

சினமுத லிபமய றீர மாற்றுபு
வினை தபு வாய்மையா மெழுக்கை யன்பெனும்
புனலொடு விரவியே பூசி னல்லது
மனமெனு மனையிடை வாரா லிங்கமே.

(கு-ரை.) மயறீர=மயக்கம் அகல. மெழுக்கை=சாணத்தை. விரவியே=கலந்து. பூசின்=மெழுகினல். ஆலயத்தில் திருவலகிடல், மெழுகிடல் ஆதியவற்றின் தத்துவ நுட்பமிது. (37)

காலமுங் கருமமுங் கடந்த காரணன்
பாலுறும் பரிசறப் பார்ம டந்தையர்
கோலமும் பொருளையுங் குறித்து நச்சுநர்
சீலமும் விரதமுந் தீய வென்பரால்.

(கு-ரை.) காரணன்பால் = நிமித்த காரணனிடத்து. உறும்= வைத்த. பரிசு அற=அன்புத் தன்மை நீங்க. கோலமும்=அலங்கரிப் பையும். நச்சுநர்=விரும்புபவர். கருமமும்=செயலும். (38)

வெங்கொலை களவுபொய் வெகுளி யாசையென்
றிங்கிவை யொடுமரீஇ யிருக்கின் றூர்தமக்
கங்கையி னெல்லிபோ லவிர்ச டைப்பிரான்
செங்கையி லிருப்பினுஞ் சேயன் சேயனே.

(கு-ரை.) மரீஇ=கூடி. சேயன்=தூரமாயிருப்பவன். (39)

பத்தரைப் புகழ்வுறப் பணிய வுண்டவர்
வைத்தன கொளவுடன் மருவப் பெற்றவர்
சித்தியுங் கடவுளர் சிறப்பும் வேறொரு
முத்தியும் பொருளென முன்னு றூர்களால்.

(கு-ரை.) பணிய உண்டவர்=வணங்கப் பெற்றவர்களும். வைத்தன கொள=தாம் வைத்துள செல்வங்களை (அவ் அடியவர்கள்) பெற்றுக் கொள்ள. சித்தியும்=அட்டமாசித்திகளையும். (40)

இன்னண நன்னெறி யாவு மாயிடைத்
துன்னிய சிவகணந் துணிந்து கொள்ளவே
மன்னவ னெனுமருள் வசவ நாயகன்
தன்னொடு புகன்றனன் றலைவ னல்லமன்.

(கு-ரை.) துணிந்துகொள்ளவே=நிச்சயித்துக் கொள்ளுமாறு. (41)

பாடினன் பரவினன் பணிந்த சொல்லுரை
யாடினன் பன்முறை யல்ல மன்றிருத்
தாடலை புனைந்தனன் றண்ட நாயகன்
மூடிய வுவகையின் மூழ்கி னனரோ.

(கு - ரை.) பரவினன் = வணங்கினன். பணிந்தசொல் = வணக்க மாகிய மொழிகளால். உரையாடினன் = கூறினன். தாள் = திருவடிகளை. தலையிற் சூடினன் = தனது திருமுடியில்கொண்டான். தண்டநாயகன் = வசவண்ணன். மூடிய = மேல்போர்த்த. உவகையின் = மகிழ்ச்சிக்கடலில். மூழ்கினன் = படிந்தான். அரோ = ஈற்றசை. (42)

திருந்தவிவ் வகையுப தேசித் தெண்ணிலா
அருந்தவர் குழாத்தொடு மருணந் திப்பெயர்ப்
பெருந்தகை மகிழ்வுறப் பிரிவி லாரியன்
இருந்தனன் மலிகலி யாணத் தென்பவே.

(கு - ரை.) திருந்த = திருத்தமாக. உபதேசித்து = உபதேசம் செய்து. எண்ணிலா என்பதை, எண் இலா = கணக்கில்லாத எனவும்; எள்நிலா எனப்பிரித்து = எள்ளளவேனும் (தியான வுணர்ச்சிக்குப் புறம்பாய்) நில்லாத எனவும்; எள்ளளவும் அருள்வழங்கலில் (தடைப்பட்டு) நில்லாத எனவும்; எண்ணில் ஆ எனப்பிரித்து, மதித்து நோக்கில் ஆ அருமையான தவத்தர் எனவும் பொருள்கொள்ளல் பொருந்துமாறறிக. ஆ = வியப்புணர்த்திற்றெனக. ஆரியன் = அல்லமன். (43)

பதினாறுவது

இட்டலிங்ககதி முற்றிற்று.

~~~~~~

கதி 16 - க்கு திருவிருத்தங்கள் - 839.

~~~~~~

பதினேழாவது

# கதலிவனகதி

## வேறு

வரையிற் புண்ணிய வனத்தினில் வளங்கெழு நதியின்
கரையிற் பன்னெடு நாளருட் குரவனைக் காண்பான்
திரிதற் குற்றுலாய் வந்துமா தேவிகல் யாலை
புரியிற் கண்டுவந் தேகிய முறையினிப் புகல்வாம்.

(கு - ரை.) வரையில்=மலைகளிலும். திரிதற்குற்று=திரிய நிச்சயித்து. உலாய்வந்து=எங்குந் தேடிவந்து. கண்டு உவந்து என்க. (1)

காட்டி னும்பெருங் குன்றினுந் தேடினள் காணாள்
வாட்டு றும்பிறப் பெனும்பிணி மாய்வுற வீட்டில்
கூட்டு நன்மருந் திருப்பதை யறிஞராற் கூறக்
கேட்டு வந்துமா தேவியந் நகரினைக் கிடைத்தாள்.

(கு - ரை.) மாய்வுற=மாய. வீட்டில் கூட்டும்=முத்தியில் சேர்க்கும். மருந்து=அமுதான அல்லமன். கிடைத்தாள்=கிட்டினள். (2)

தலையில் வெண்கலை யொன்றுற வெற்றரை சமைந்து
பலிகொ ளும்படி மனைதொறு முலகெலாம் பழிச்ச
அலம ரும்பரற் கினியவள் வெற்றரை யாய்க்கண்
புலன்வி ருந்துறுங் கடிநகர் வீதியுட் புகுந்தாள்.

(கு - ரை.) கலை=ஆடை; மதியமுமாம். வெற்றரைசமைந்து=ஆடையிலியாய்; திகம்பரனாய். பலி = பிட்சை. அலமரும் = திரியும். இனியவள்=இனிய மாதேவி. கடி=சிறந்த. (3)

நாற்கு ணங்களுண் முதற்குண மாகிய நாணைத்
தீர்க்கு மிம்மட முடையவள் யார்கொலோ தெரியேம்
பார்க்கி லின்னவள் பித்துடை யாளெனப் பலரும்
நோக்கும் வண்ணம்வந் துற்றன ளுலகிய னோக்காள்.

(கு - ரை.) நாற்குணம்=அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு. இயல்=ஒழுக்கம். மடமுடையவள்=பேதைமை யுடையாள். (4)

உலகு ளார்தமைப் பேதையென் றுணர்ந்தன ளோதான்
உலகு ளார்தனைப் பேதையென் றுணர்குவ ரென்றோ
உலகு ளார்தமை நாணில ளீங்கிய வுடையாள்
உலகு ளார்தொழுந் தண்டநா யகன்மடத் துற்றாள்.

(கு - ரை.) உலகுளார்தமை=உலகத்தவரை. பேதை=மூடர்கள். நீங்கிய வுடையாள்=ஆடையில்லா மாதேவியம்மை. (5)

தண்ட நாயக னொடுபலர் நெருங்குறத் தவிசின்
அண்ட நாயக னல்லமன் வீற்றிருந் தருளக்
கண்டு போயரு கிறைஞ்சின ளாண்டமர் கணங்கள்
பண்டு தாமறி யாவியப் படைந்தனர் பார்த்து.

(கு - ரை.) தவிசின்=ஆதனத்து. ஆண்டமர்=அவ்விடத்து அமர்ந்திருந்த. கணங்கள்=அடியவர்கள். (6)

நெஞ்ச மாரழ லரக்கென நெக்குநெக் குருகச்
செஞ்சொல் வாய்தடு மாறவாள் விழிபுனல் சிந்தக்
கஞ்ச நாண்மலர்க் கைதொழு தநங்கனோய் காணாள்
அஞ்சி னேன்பவப் பிணியினி யருள்செயென் றழுதாள்.

(கு - ரை.) ஆர் அழல் அரக்கென=மிக்க நெருப்பில் பட்ட அரக்கைப்போல. செஞ்சொல்=இனிய மொழிகள். கஞ்சம்=தாமரை. அநங்கனோய் காணாள்=காமநோய் கடந்த மாதேவி. (7)

வீடு வப்பவ ராணெனப் பெண்ணென வேறோ
ஏட லர்க்குழ லுமைகலை யேயிவ ளிவள்போல்
நாடு றிற்பரு வம்பெறு மவரிலை ஞானம்
கூடு தற்குரி யாளென வல்லமன் குறித்தான்.

(கு - ரை.) வீடுஉவப்பவர் என்க. கலை=அம்சம்; ஆயிரத்துள் ஓர் கூறு. நாடுறில்=ஆராயின். பருவம்=பக்குவம். (8)

தான லாதொரு பொருளிலைச் சகமென வென்னும்
ஞான மேவலாற் காமவின் பந்தனை நண்ணாள்
தான லாதர வாற்றனைத் தழுவியின் புறுநர்
ஏனை மாந்தரு ளுளர்கொலோ வென்றன ரிருந்தார்.

(கு - ரை.) தானலாது ஜெகமெனஒரு பொருளில்லை என ஒட்டுக. என்னும்=என்று நினைவதற்குரிய. ஆதரவு=அன்பு. (9)

இன்று காமனை வென்றவ ளினையளா யிழையோ
டொன்று மேனிய னாகிய கண்ணுத லொருவன்
வென்று ளானென வுலகினி லெடுத்தசொன் மெய்ம்மை
அன்று போலுமென் றியம்பினர் சிலரவ ணமர்ந்தோர்.

(கு - ரை.) ஆய்இழையோடு=உமாதேவியாருடன். (10)

உடல மானமற் றிவளென வனைத்தையு மொருங்கு
விடவ லார்க்கலா லிளமையுஞ் செல்வமும் விரும்பி
நடலை வாழ்வினில் வெறுப்புறாப் புல்லிய நரர்க்குத்
தொடரு மாவினை தொலையுமோ வெனச்சிலர் சொன்னார்.

(கு - ரை.) உடலமானம்=தேகாபிமானம். அற்றிவனென=அற்ற இவனைப்போல. நடலை=வஞ்சகம். புல்லிய=கேவலமான. தொடரும் மாவினை=தொடர்கிற பெரிய இருவினை. "நடலை வாழ்வுகொண் டென் செய்திர் நாணிலீர்" என்பது தமிழ்மறை. (11)

சென்று தேடிநாந் தத்துவ மருள்செயுஞ் சீடர்
அன்றி ஞானதே சிகனுள னேவென வாய்ந்திட்
டின்று மேவுமா தேவிபோ லிலையென வெம்மான்
நின்ற ஞானமூ லந்தனை யுணர்த்துவா னினைந்தான்.

(கு - ரை.) தத்துவம்=ஞானத்தை. ஆய்ந்திட்டு=ஆய்ந்து; இடு=துணைவினை. நின்ற=(எவற்றிற்கும் மேலாக) நிலைத்த. (12)

பூத நீயலை பொறிகளு மலைபல புந்தி
ஏது நீயலையிவற்றினை மயங்கியா னென்னும்
போத நீயலை யென்றிவை யனைத்தையும் போக்கிச்
சோதி யாகிய பிரமமே நீயெனச் சொல்லி.

(கு - ரை.) பூதம்=மண், நீர், தீ, காற்று, விண். பொறி=மெய், வாய், கண், நாசி, செவி. புந்தி=மனம். போதம்=அறிவு. (13)

ஞேய ஞானஞா தருவெனு மிவைபல நிற்கு
மாயின் வேறறு முத்தியன் றதுசக மாமென்
றேயு மாறிது வதுவெனுஞ் சுட்டிலா வியல்பை
மாயை மாறிய தேவிபா லருளினன் வள்ளல்.

(கு - ரை.) வேறறு=வேறற்ற; ஐக்யமான. அது=அம்முத்தி. சகமாம்=பசமுத்தியாம். ஏயுமாறு=பொருந்தும்படி. இயல்பை=என்றுமுள்ள இருப்பை. மாறிய=கடந்த. தேவி=மாதேவி. காண்பான் காட்சி காணப்படு பொருளில் பலவாய் விரிந்து நிற்றல் முத்தியன்று என்றபடி. ()

தேறு நீரென வெனதுளந் தெளித்ததே சிகனைம்
மாறு காண்கிலே னுடல்பொரு ளாவிகண் மதிப்பில்
வேறு போய்நின வாயின வென்றவள் விழிகள்
ஊறு நீரொடு மல்லமன் றூடொழு துளைந்தாள்.

(கு - ரை.) தேறுநீர்=தெளிந்த நீர். தெளித்த=தெளியும்படிச் செய்த. ஆவிகள்=உயிர்களை. மதிப்பில்=உன்னுமிடத்து. வேறுபோய்=வேற்றுமை அற்று. நினஆயின=உமதாயின. உளைந்து தொழுதாள்=கசிந்து வணங்கினள். (15)

அன்னை நீயினிக் கதலிமா வனத்தினை யடைந்திட்
டென்னை மேவினை கேட்டவிப் பொருளினை யெல்லாம்
நின்னி னீதெளிந் துறுதிகொ ணிதித்தியா சனத்தின்
மன்னு வாயென வேவினன் றற்கொடை வள்ளல்.

(கு - ரை.) மேவினை=மேவி; முற்றெச்சம். நிதித்தியாசனம்= முற்றத்தெளிதலாம். தன்கொடை (துதித்தார்க்குத்) தன்னைத்தரும். ()

வள்ள றுண்மலர்த் திருவடி வணங்கியம் மருங்கில்
கொள்ளை மாதவர் தாமொடூ தருள்விடை கொண்டு
வெள்ள மாகிய வன்புகின் றுய்த்திட மேவித்
தெள்ளு மாரமு தனையவள் பருப்பதஞ் சேர்ந்தாள்.

(கு - ரை.) கொள்ளை=கூட்டம். பருப்பதம்=ஸ்ரீசைலம். (17)

வசவன் பாலரு ளல்லம னுற்றென வானோர்
பசுவின் பானிறை சுனையிடை நழுவிவீழ் பழத்தை
மிசையும் பூங்கிளி மிழற்றொலி கடலென விரவ
இசையும் பாசிலைக் கதலியங் காடதி லிலங்கும்.

(கு - ரை.) உற்றென=வந்ததுபோல. வானோர்பசு=விண்ணுலகத்துள ஒரு காமதேனு. மிசையும்=உண்ணும். விரவ=பரவ. பாசிலை= பசுமையாகிய இலைகளையுடைய. கதலி அம் காடு=வாழைகள் நிறைந்த அழகிய வனம். அதில்=அம்மலையில். (18)

விரிந்த வாழையி னெட்டிலை மிசைநிறை மதியம்
பொருந்து மாறுவிண் முழுதையு மளித்தருள் புத்தேள்
அருந்த வாய்மடைத் தொழிற்றிற நிரம்பிய வடிசில்
சொரிந்த தாமென மனங்களி கூர்தரத் தோன்றும்.

(கு - ரை.) புத்தேள்=பிரமன். வாய்மடைத்தொழில்=சிறந்த அட்டில் தொழில். அடிசில்=உண்டி. வாழையிலைகளின்மேல் முழு நிலவுக் கதிர் விரிதல், பிரமன் அருந்துதற்கு அன்னம் இட்டு வைத்ததுபோல் விளங்குகிறது என்னும் இதனால் கதலிவனச் சிறப்பு விளங்கும். (19)

இனைய வாழையங் காடுகண் டெங்கண்மா தேவி
முனிவர் வானவ ரியாவரு முறைமுறை போற்றத்
தனிய ளாயொரு புறம்பசந் துளசுவை தருசெங்
கனிய வாவிய வுளமொடு மிருந்தனள் களித்து.

(கு - ரை.) பசந்துள=செழித்துள்ள. செங்கனி=சிவந்த கனி. ()

பதினேழாவது

கதலிவனகதி முற்றிற்று.

கதி 17 - க்கு திருவிருத்தங்கள் - 859.

பதினெட்டாவது

# சாதகாங்ககதி

## வேறு

வினைய டுத்த விழுமந் துடைத்தெமக்
கனைய டுத்த வருளுடை யல்லமன்
மனன டக்கம் வசவற் குணர்த்துதல்
தனையெ டுத்தினிச் சாற்றுது நாமரோ.

(கு - ரை.) அடுத்த=(காரணமாக) வந்த. விழுமம்=பிறவித் துன்பம். துடைத்து=நீக்கி. அனை அடுத்த=அன்னையை ஒத்த. மனன் அடக்கம்=மனத்தை. அடக்கம்=அடக்குந் தன்மையை. (1)

காவி னீடுங் கதலி வனத்துமா
தேவி போதத் திருவருள் செய்தவண்
மேவி ஞான விளக்குற வெம்முடை
ஆவி போலும் வசவ னறைகுவான்.

(கு - ரை.) காவின்=பூஞ்சோலையில். போதத்திருவருள்=ஞானோபதேசம். ஞானவிளக்கு உற=ஞானதீபமான அல்லமனிருக்க. (2)

மத்தர் வாத மயக்க மிலாதுயர்
முத்தி சாதன மொன்று மொழிக்கருள்
அத்த நீயென் றடிக டொழுதெழப்
பத்தி வேண்டும் பரமன் பகருமால்.

(கு - ரை.) மத்தர் = உன்மத்தர். வாதமயக்கம் = தருக்கவாதஞ் செய்யும் மயக்க அறிவு. வேண்டும்=விரும்பும். (3)

பரம முத்தி பதம்பெறு மேதுவுள்
கரண சுத்தி யதனது காரணம்
அரனெ ரித்த வமலற் குறித்தநல்
கிரியை யித்திறம் வேதங் கிளக்குமால்.

(கு - ரை.) எதுவுள்=வழிகளில். கரணசுத்தி=திரிகரணத் தூய்மை. அதனது காரணம்=அம் முத்தி பெறுதற்கு மூலகாரணமாக உளது. அரணெரித்த=திரிபுர மெரித்த. நற்கிரியை=சிறந்த பூசையாம். (4)

மனமி லிங்க மருவிலை யேனுடல்
தனிலி லிங்கந் தரித்து மிலையிலை
எனவி யம்பு மிணையிலி யாகம
நினைவ ரன்கழ னிற்க நிறுத்தினாய்.

(கு - ரை.) மனமிலிங்கம்=மனமானது லிங்காகாரமாய். மருவிலை யேல்=பொருந்தவில்லையானால். இலையிலை யென்னும் அடுக்குத்தொடர் ஒரு சிறிதும் பயனில்லை யென்பதை விளக்கிற்று. (5)

தாவி லாத மனமொடு சார்தரா
தோவு மாயி னுலகிற் புனலுமொண்
பூவு நாடொறும் போக்குறு பூசனை
ஆவி போகிய வாக நிகர்க்குமால்.

(கு - ரை.) தாவிலாத=பற்றுதலில்லாத. ஓவுமாயின்=நீங்குமெனின்.

புறம்பு காண்குவன் புல்லிய னீசனை
அறிந்த ஞானி யகமுறக் காண்பனால்
எறும்பி காணுறி லின்கரும் பேகொளும்
செறிந்த வாடிலை தின்பன வென்பவே.

(கு - ரை.) புறம்பு=வெளியில். காணுறில்=நோக்கில். எறும்பி=யானை. கொளும்=உட்கொள்ளும். ஆடு=ஆடுகள். இலை=தழை. (7)

கரங்க ணல்ல கருமஞ் செயாகிற்பத்
திரிந்து செல்லுஞ் செலாத விடத்துநெஞ்
சொருங்கு றாத வொருமனந் தன்னினும்
பரந்த வல்லற் படுக்கும் பகையிலை.

(கு - ரை.) நெஞ்சுசெலாதவிடத்து திரிந்து செல்லும் என ஒட்டுக. ஒருங்குறாத=ஒன்றுபடாத. அல்லல்படுக்கும்=துன்பம் விளைக்கும். (8)

துயிலை யின்பெனச் சொல்லுத லிந்தியத்
தியலு நெஞ்ச மிலாமையி னாலன்றோ
பயிலு நெஞ்சம் பரந்து திரிதரும்
செயலி லில்லை சிறிதுஞ் சுகமரோ.

(கு - ரை.) இந்தியத்து இயலும்=பஞ்சேந்திரிய வயப்பட்டு நடக்கும்.

மனமொ ருத்தன் வசப்படு மேலவன்
பினைவ ருத்தும் பிறப்பை யடைந்திடான்
மனமொ ருத்தன் வசப்படா தோடுமேல்
நனிபி றப்பிடை நாளுஞ் சுழலுமே.

(கு - ரை.) பினை=பின்னர். நனி=பெரிதும். (10)

அறவி னைக்கு மரும்பொரு ளின்பொடு
பெறுவ தற்கும் பெருங்கல்வி கற்றுயர்
விறலி னுக்குநல் வீரந் தனக்குமொண்
துறவி னுக்குந் துணைமன மென்பவே.

(கு - ரை.) அறவினைக்கும்=தருமச்செயலுக்கும். விறல்=வலிமை. ளறு=சேறு; உவமவாகு பெயராய் நரகத்தை யுணர்த்திற்று. (11)

நல்ல செய்து நரரை யுயர்த்தவும்
அல்ல செய்தங் களற்றிடை யாழ்ப்பவும்
வல்ல திந்த மனமல தையனே
இல்லை யென்ன வியம்பு மறையெலாம். (12)

(கு - ரை) அல்ல=தீவினைகளை; இது, நல்வினைக்கு எதிர்மறை.

நெஞ்ச மாதுமை நேசனை நண்ணுமேல்
விஞ்சு பாதகங் கோடி விளைப்பினும்
அஞ்சு றுனவ னவ்வினை யாவையும்
பஞ்சு தீயிடைப் பட்டென மாயுமே.

(கு - ரை.) விஞ்சு = மிக்க. விளைப்பினும் = செய்யினும் அவன் அஞ்சுறுன் என்க. மாயும்=அவ் வினைகள் அழியும். (13)

மக்கண் மானிட ரென்று மனத்தினுல்
மிக்க மேன்மை விளங்கின ரில்லெனில்
பொக்க மேவும் பொறிகளோ ரைந்தினுல்
ஒக்கு மாவினை யொத்துயர் வுற்றிடார்.

(கு - ரை.) மனத்தினுல்=மனத்தூய்மையினுல். பொக்கம்=பொய்ம் மை. மாவினை ஒத்து=மிருகங்களுக்குச் சமமாகி. உயர்வு உற்றிடாரென்க.

கெடுக்க வல்லதுங் கெட்டவர் தங்களை
எடுக்க வல்லது மிம்மன மென்றதை
அடக்க வல்லவ னைய பவக்கடல்
கடக்க வல்லவ னுவன் கடிதரோ.

(கு - ரை.) "கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றுங்கே யெடுப்பதூஉ மெல்லா மழை" எனும் குறளில் மழையின் செயலாகக் கூறியவற்றை இங்கு மனத்தின் செயலாகக் கூறினர். (15)

ஆயின் மிக்கோ ரரிய செயலெலாம்
நேய மிக்க மனத்தை நிறுத்தல்காண்
வாயு நிற்க மனமு முடனிற்கும்
தோய நிற்குறி னிற்குந் துரும்புமே.

(கு - ரை.) ஆயின்=ஆராயின். மிக்கோர்=பெரியோரது. வாயு= பிராணவாயு. தோயம்=ஓடும் நீர். (16)

ஓடு மாவை நிறுத்துறி னுள்ளுறக்
கோடும் வாய்க்கலி னத்தினைக் கொள்ளுவார்
நீடு மாமன நிற்க நிறுத்துறில்
ஓடும் வாயுவை யுள்ளுற வீர்ப்பரால்.

(கு - ரை.) மாவை = குதிரையை. உள்ளுறக்கோடும் = உள்ளே கொண்டிருக்கும். கலினத்தினை = கடிவாளத்தை. கொள்ளுவார் = இழுத்துப் பற்றுவார். உள்ளுற = உள்ளத்தில் நிலைக்க. (17)

அடுத்த நாடிக ளாங்கொரு மூன்றினும்
விடுத்து வாங்கியு மேவ நிறுத்தியும்
தடுத்தும் வாயுவைத் தன்வச மாக்கில்வாய்
மடுத்தி டாது மனமும் வசப்படும்.

(கு - ரை.) நாடிகள் = இடைகலை, பிங்கலை, சுழுமுனை. (18)

ஓடும் பொன்னு முறவும் பகையுமோர்
கேடுஞ் செல்வமுங் கீர்த்தியு நிந்தையும்
வீடுங் கானமும் வேறற நோக்குதல்
கூடுந் தன்மை கொளுமன நன்மனம்.

(கு - ரை.) கானமும் = காடும். வேறற = வேறுபாடின்றி. (19)

மன்னு காம வெகுளி மயக்கமென்
றின்ன கூடி யெறிவளி முற்சுடர்
என்ன வாடு மியன்மனந் தீமனம்
தன்னை யாருந் தடுக்கத் தகாதரோ.

(கு - ரை.) எறிவளிமுன் = அலைக்காற்றின்முன். சுடர் என்ன = தீபம்போல. ஆடும் இயல் மனம் = அலையும் இயல்புடைய மனம். தீமனம் = தீயமனம். (20)

மறிந்தி டாது மனபவ னங்கடாம்
செறிந்த வாயிற் சிவமய மாகுமால்
அறிந்து வாயுவை யங்ஙன மெய்தினோன்
இறந்தி டாத விலிங்கப் பிராணியாம்.

(கு - ரை.) மனபவனங்கள்தாம் = மனமும் பிராணாதி தசவாயுக்களும். செறிந்தவாயின் = அடங்கிவிடுமாயின். எய்தினோன் = அடங்கியவன். இலிங்கப்பிராணி = இலிங்க வடிவமாவான். (21)

இன்ன வாறு பலவு மியம்பினன்
அன்னை போலுநம் மல்லம தேசிகன்
தன்னை நேர்தரு சைவம் வளர்க்குமோர்
மன்ன னுக்கும் வசவனை நோக்கியே.

(கு - ரை.) தன்னை நேர்தரும் = தனக்குத்தானே சமமான. (22)

நின்னை நோக்கவு நின்னை யிறைஞ்சவும்
நின்னை வாழ்த்தவு நின்மொழி கேட்கவும்
என்ன மாதவ மெய்தின வோவெனப்
பன்னி நாதற் பணிந்தன னந்தியே.

(கு - ரை.) எய்தினவோ=(என்னை) அடைந்தனவோ. (23)

சித்த ராமனுஞ் சென்ன வசவனும்
முத்த னுமருண் மாச்சன் முதலிய
பத்த ராகும் பலருமென் புன்றலை
வைத்த நாதன் மலரடி வாழ்த்தினர்.

(கு - ரை.) முத்தன்=பெரியோன்; பக்தவிடுதலை பெற்றவன் என்க. புன்தலை=அற்பமான தலையில். நாதன்=தலைவனை அல்லமனது. மலரடி=தாமரை மலர்போன்ற திருவடிகளை. வாழ்த்தினர்=துதித்தல் செய்தார்கள். (24)

ஆன காலைபி லல்லம னாகிய
ஞான வாரி நடந்துல கெங்கணும்
ஏனை மாதவர்க் கின்ப மளிக்குவல்
யானெ னுவுளத் தெண்ணின னென்பவே.

(கு - ரை.) ஆனகாலையில்=இது நேர்ந்த அவ்வமயம். ஞானவாரி=ஞானசாகரமான அல்லமன். உலகு எங்கணும் நடந்து என இயைக்க; நடந்து=சென்று. ஏனை=பிற. அளிக்குவல்=அளிப்பேன். யான் ஏனை மாதவர்க்கு இன்பம் அளிக்குவல் என உளத்து எண்ணினன் என்பவே எனக் கூட்டுக. என்பவே=என்று மேலார் கூறுவார்; "அர் ஆர் ப என வரூஉ மூன்றும் பல்லோர் மருங்கிற் படர்க்கைச் சொல்லே" என்பது, தொல்காப்பியம். (25)

பதினெட்டாவது

சாதகாங்ககதி முற்றிற்று.

கதி 18 - க்கு திருவிருத்தங்கள் - 884.

# கோரக்கர்கதி

## வேறு

வசவனை முதலா யுள்ள மாதவர் தமைய கன்று
பசுமதி தவழ்கு வட்டுப் பருப்பத மலையை நண்ணிக்
குசைசுடு மறையோர் போற்றுங் கோரக்க னெனும்போர்ச் சித்தன்
இசைவுற வுண்மை யெந்தை யியம்பிய வாறு சொல்வாம்.

(கு - ரை.) குவடு=சிகரம். பருப்பதம்=ஸ்ரீசைலம். குசை=தருப்பை. இசைவு உற=ஏற்க. உண்மை=உண்மை நிலையை. (1)

பொறிவழி செலாது நெஞ்சம் புனிதமாம் வகைபு கன்ற
நெறிமுறை வழாதி யற்றி நீவிர்நின் மின்கண் மிக்க
அறவரை யுலகிற் கண்டிங் கடைதுமென் றுண்டை யோர்கட்
கிறையவ னினிதி யம்பி யெழுந்துமின் னெனம றைந்தான்.

(கு - ரை.) நின்மின்கள்=தவறுதிருப்பீர்களாக. அறவரை=துறவிகளை. ஆண்டையோர்கட்கு=அங்கிருந்த அன்பர்களுக்கு. (2)

கன்றின்வாய் முலைநெ கிழ்த்துக் கறவைவிட் டகன்ற தென்னச்
சென்றன னைய னென்று திசைதொறு நோக்கி மாழ்கி
வன்றழ லிழுதுபோல மனமுகக் கண்ணீர் மல்கி
நின்றனர் வசவ னாதி நிகரில்சற் பத்த ரெல்லாம்.

(கு - ரை.) வாய்=வாயிலுள்ள. நெகிழ்த்து=தளர்த்தி. கறவை=பசு. நெருப்பிலிட்ட வெண்ணெய்போல் மனமுருகினர் என்க. (3)

காணுத லொழிக நல்லார்க் காணினங் கவர்பா னட்புப்
பேணுத லொழிக பேணிற் பிரிவுற லொழிக வுற்றால்
மாணுயி ருடம்பில் வாழும் வாழ்க்கைபோ யொழிக வென்னு
ஊணிடு மொருதாய் நீத்த பார்ப்பென வுளங்கு லைந்தார்.

(கு - ரை.) நல்லோரைக் காணுதிருத்தல் வேண்டும்; கண்டால் அவருடன் நட்புச் செய்யாதிருத்தல் வேண்டும்; நட்டால் அவரைப் பிரியாதிருத்தல் வேண்டும்; பிரியின் உயிர்விட வேண்டும் என விரிக்க. ஊணிடும்=உணவு கொணர்ந்தளிக்கும். பார்ப்பு=பறவைக்குஞ்சு. (4)

தண்டநா யகன்க ரத்திற் றம்பிரான் றன்னைக் கண்டு
பண்டுபோ லுவகை பூத்துப் பத்திசெய் தாங்கி ருந்தான்
தொண்டனு கியவி ராமன் சொன்னலா புரத்தி னெஞ்சில்
கொண்டவா ரியனை டேகிக் கொடுவழி தப்பி நின்றான்.

(கு - ரை.) தண்டநாயகன் = வசவண்ணன். கரத்தில் = தன் உள்ளங்கையில். தம்பிரான்தன்னை = இஷ்டலிங்கத்தை. ஆங்கு = கல்யாணபுரியிலேயே. கொண்ட = பதித்த. ஆரியன் = அல்லமன். கொடுவழிதப்பி = (முன் தான்) கொண்டிருந்த நெறி நீங்கி. (5)

அல்லம னறைந்த மாற்ற மகங்கொடு பிறருந் தாஞ்செய்
நல்லன புரிந்து தந்த மிடந்தொறு நணுகி வாழ்ந்தார்
தொல்லைநல் வினையாற் றன்னைத் தொழப்பெறு மடியர் தம்பால்
செல்லுவ னென்று சென்றோன் செயலினித் தெரிக்க லுற்றாம்.

(கு - ரை.) மாற்றம் = மெய்ம்மொழிகளை. பிறரும் = மற்றையரும். அகம்கொடு = மனத்திற் கொண்டு. நல்லன = தூய கருமங்களை. சென்றோன் = சென்ற அல்லமன். தெரிக்கலுற்றாம் = சொல்லத் தொடங்கினோம்.

எரிபுரை தளிர்த ளிர்ப்ப விளமரக் காவிற் றென்றல்
மருவுதல் போல வன்பர் மனமொடு கண்க ளிப்பத்
திருவுரு வொன்ற டைந்து சென்றவக் கருணை வள்ளல்
கருமுகி றவழ்ப ராரைப் பருப்பதங் கண்டு சென்றான்.

(கு - ரை.) எரிபுரைதளிர் = நெருப்பை ஒத்த நிறமுள்ள தளிர்கள். காவில் = சோலையில். பராரை = பருத்த அடிப்பாகத்தையுடைய. (7)

அல்லமன் கண்டு செல்லு மப்பருப் பதத்தின் மேன்மை
சொல்லுத லறியா ராகிச் சுரர்முனி வரர்க டம்முள்
வல்லவ ரெனவி ருக்கு மறிஞரு மயங்கி நிற்பப்
புல்லறி வாண்மை கொண்டு புகலுவன் சிறிதஞ் சாமல்.

(கு - ரை.) அறிஞரும் = புலவரும். புல்லறிவாண்மை = அற்பமான எனது அறிவின் வன்மை. அஞ்சாமல் சிறிது புகலுவன் என்றியைக்க. (8)

நாடொறு முதித்தொ டுங்கு ஞாயிறு தனைச்சு மக்கும்
கோடுறு வரைகு ணக்குங் குடக்குமாய்த் திகைத்து நிற்பக்
கூடுதல் பிரித லின்றிக் குறைமதி தலைச்சேர்ந் தின்பம்
தாடரு கதிரைச் சென்னி தரிப்பதக் குன்ற மாதோ.

(கு - ரை.) கோடுறு = சிகரத்தையுடைய. வரை = மேருமலை. இனையதென்றுணராமல் கிழக்கு மேற்காகத் திகைக்க என்க. குறைமதி = (மூன்றாம்) பிறைத் திங்களை. தலைச்சேர்ந்து = சிரசில் சூடி. இன்பம்தாள் தருகதிரை = பேரின்பத்தைத் தன் திருவடியால் தரப்பெற்ற ஞான சூரியனை. பூதசூரியன் திசையறியாது திகைக்குமாறு செய்து, அவனுக்கிடம் கொடாமல், ஞான சூரியனைத் தன் தலையால்தாங்கியது அம்மலை என்க. (9)

பொன்னிற்குன் றெழுவா யாகப் பொருப்பள விறந்து நிற்பச்
சென்னிக்கட் டவழ்வெண் டிங்கட் சிலாதரன் குழவி வெற்புத்

தன்னைக்கண் டவரை யென்னோர் தலைமிசை யேற்று மென்னென்
றின்னற்கட் படிந்தன் றேவவ் விறைமலை விளர்த்த தம்மா.

(கு - ரை.) பொன்னிற்குன்று=மேருமலை. எழுவாயாக=ஆதியாக. பொருப்பளவு இறந்து நிற்ப=மலைகள் அளவின்றி இருக்க. சிலாதர முனிவர் குமாரரான திருநந்திதேவரே ஸ்ரீசைல மலையாக வடிவு கொண்டு சிவபிரானைத் தாங்குதலின், 'சிலாதரன் குழவிவெற்புத் தன்னை' என்றார். ஏற்றும்=சிவபிரான் ஏற்றுகிறான். என் என்று=இது என்னே என்று. இன்னற்கண் படிந்தன்றே=துன்பத்தழுந்தியல்லவா. இறைமலை=கயிலையங்கிரி. விளர்த்தது=வெளுத்தது. இது, தற்குறிப்பேற்றவணி. (10)

பரசிவ லிங்க மொன்று பருப்பதம் போற்ற ரிப்பத்
துரிசற வடைந்தே னில்லை யென்னுமச் சோகத் தீயால்
உருகுறு மமையத் தோடி யொருமலை குழைத்தா னன்றிக்
குருகமர் தளிரி யற்குக் குழைந்தவன் குழைக்கு மோதான்.

(கு - ரை.) துரிசற=குற்றமகல. ஒருமலை=மேருமலையை. குருகு அமர் தளிரியற்கு=(இயற்கை) வளையலையணிந்த மாந்தளிர்போலும் மேனியுடைய உமாதேவிக்கு; உவமத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை. குழைந்தவன்=(உடல்) குழைந்த சிவபிரான். குழைக்குமோ= வளைப்பானோ என்றபடி. (11)

பொருப்பிறை மகனு னெற்குப் பொருந்துறு தீச னுமம்
நெருப்பனை யான்சார்ந் தாங்கு நிகழ்தொடர் மொழியி னன்றிப்
பருப்பத மெனவே கூறப் படுமிது வென்னு நாணல்
திரைப்பொலி கடலிற் சென்று வீழ்ந்தது சிலம்பொன் றம்மா.

(கு - ரை.) பொருப்பிறை = மலைக்கரசான மேருவின். எற்கு= எனக்கு. நெருப்பனையான்=தீவண்ணனான சிவபிரான். தொடர்மொழி= (கயிலைமலை, விந்தமலை, பொதியமலை என்பதுபோல் நேர்ந்த) தொடர் மொழி. சிலம்பு=மைந்நாக பருவதம். ஈச சப்தம், பிரமனுதியர்க்கும் பொது எனினும் சிறப்பு வகையால் சிவத்தையே அடைதல்போல, பிறமலைகளுக்குப் பருவதம் என்பது பொதுப்பெயராய்; சிறப்பினுல், ஸ்ரீசைலத்தையே உணர்த்தும் என்க. (12)

தன்னையோர் கையால் வீழப் பிலத்திடைத் தள்ளி வந்தோன்
சென்னியால் வணங்கி யேத்துஞ் சிலம்பினை விந்த மொக்கும்
என்னலா மென்ன லாமோ வினையறு பருப்ப தத்தைப்
பின்னுவார் திரையி லிட்டுப் பெயர்த்தபுன் மத்தோ வொக்கும்.

(கு - ரை.) வந்தோன்=வந்த அகத்தியன். சிலம்பினை=ஸ்ரீசைலத்தை. விந்தம், தோற்றத்தால் ஒக்குமெனினும், மகிமையா லொக்குமென லியலா தென்க. பின்னுவார் திரையிலிட்டுப் பெயர்த்த புன்மத்தோ=பின்னி

யெழும் அலைகளையுடைய கடலிலிட்டுக் கடைந்த அல்ப மத்தான மந்தரகிரி மோ. ஒக்கும்=ஒக்குமோ; பருப்பதத்தை ஒவ்வாது என்க. (13)

கைமதிப் பிள்ளை போல நரைத்தகூன் கிழவன் சென்றோர்
முகைமலர்ச் சுனையின் மூழ்கி முருகுகொப் புளிக்குந் தோட்டுப்
மகைமலர்க் குழன்ம டந்தை பகர்ந்தவோ ராணை காத்து
மகிழ்மனத் தன்ப னேபோல் வந்துமே லெழுவ னன்றே.

(கு - ரை.) நகை=ஒளி. மதிப்பிள்ளை=இளந்திங்கள். முருகு=தேன். தோட்டு=இதழ்களையுடைய. அன்பன்=திருநீலகண்டநாயனார். ஸ்ரீசைலச்சுனையில் மூழ்கி எழுந்த கிழவன், "எம்மைத் தீண்டுவீராயின் திருநீலகண்டம்" என்று தன் தேவி கூறிய ஆணையைக் காத்த திருநீலகண்டநாயனார்போல் மீட்டும் குமரப்பருவம் எய்துவன் என்றபடி. (14)

சினைமலர் புதன்மென் போது செழும்புனற் பசுந்தாட் செந்தேன்
நனைமலர் தமது தண்பூ நண்ணியீர்ங் கொடிகள் குண்டுச்
சுனைமலர் விழிகள் போலத் தோன்றுமப் பராரைக் குன்றில்
புனைமலர் பலவுங் காட்டும் புரிகுழன் மகளிர் போலும்.

(கு - ரை.) சினை=கிளை. புதல்மென்போது=புதர்களிலுள்ள செடியின் மலர்கள். நனைமலர்=நீர்ப்பூ. குண்டு=ஆழம். சுனைமலர்=குவளை. ()

தூங்கிசை யருவி பாயத் தொளைக்கைவெண் கோட்டு ரற்கால்
ஈர்ங்கவு ளெடுநல் யானை யேற்பவெந் தழல லாமல்
தேங்குதண் புனன்மே னேக்கா தென்பது தீரச் சென்று
பூங்கதிர் பனிவெண் டிங்கள் போன்மெனத் திவலை செய்யும்.

(கு - ரை.) தூங்கு=தொடர்பு. தொளைக்கை=துவாரமுடைய துதிக்கை. வெண்கோடு உரல்கால் எனப் பிரிக்க. என்பது தீர=என்று கூறும் வார்த்தை பொய்ப்பட்டுப் போக. திவலை=நீர்த்துளி. (16)

விஞ்சைய ருளர்ந ரம்பின் வீணையா ழெழுமின் னோசை
குஞ்சர மனைய வென்றிக் குன்றவர் புறத்தி லென்றும்
தஞ்செவி மடுத்துக் கேட்பார் தனிநிலை யோக முற்றோர்
அஞ்செவி நிறைய வுள்ளே யரியயா ழோசை கேட்பார்.

(கு - ரை.) விஞ்சையர்=கந்தருவர். உளர்=விரலால் தெரிக்கும். குஞ்சரமனைய=யானைபோன்று மதர்த்த. குன்றவர்=குறவர். (17)

பீடுறு கருவி னோடு பெயரிய வில்லி னும்பர்
ஓடுறு பசும்பொ னற்செய் தோங்குறு சிகர மொன்று
நீடுறு சிலாத ரன்ற னெடுந்தவப் பிள்ளைக் குன்றில்
மோடுறு முடியின் மீது கவிழ்த்தபொன் முடியை யொக்கும்.

(கு - ரை.) கருவினோடு பெயரிய இல்லின்=கர்ப்பத்துடன் பெயர்பெற்றிருக்கின்ற கிருகத்தில். உம்பர்=மேலே. மோடுறு=மேலாக ஓங்கிய.

செங்கதி ரவனெ ழுந்த திவாவிடைக் குடம்பை தெற்றிப்
பொங்கொளி மரத்திற் சீர்சால் புள்ளினம் பொறையு யிர்த்துக்
கங்குலி னடைகி டப்பக் கருதிவந் ததனைக் கண்டு
வெங்கனல் கொளுந்திற் றென்று மீமிசைச் சுழன்றி ரங்கும்.

(கு - ரை:) திவாவிடை = பகற்காலத்தில். குடம்பைதெற்றி= கூண்டு அமைத்து. பொங்கொளி மரத்தில்=சோதிவிருக்ஷத்தில். பொறை யுயிர்த்து=முட்டையிட்டு. அடைகிடப்ப=அவயங்காக்க. அதனை=அம் மரத்தை. மீமிசை=மேலே சோதிமரம் இரவில் ஒளி வீசும் என்க. (19)

நறுமலர்க் குழன்வெண் முத்த நகைமலை மடந்தை மிக்க
அறம்வளர்ப் பதற்கு நெற்சிற் றளவிரு நாழி யென்று
கறைமிடற் றிறைய ளப்ப வொருபெருங் கருவி தானிவ்
வெறிமலர்க் குடுமிக் குன்றின் வேய்களு ளொன்றிற் பெற்றாள்.

(கு - ரை.) முத்தநகை=முத்துவரிசை யொத்த பற்கள். அறம்= முப்பத்திரண்டு தருமம். உமை அறம் வளர்க்க அதிக நெல்லை இறையிடம் பெற விரும்பி (இயற்கையாயுள்ள) இருநாழி (மரக்கால்) சிறிய அளவினை தெனக்கழித்து, பெருங்கருவியாக அம்மலையிலுள்ள மூங்கில்களுள் ஒன்றை எடுத்து அதனால் அளந்து பெற்றாள் என்க. மூங்கில்களால் அளவு கருவி வைத்தாள்வது, பண்டைய வழக்கு. (20)

நெடியவன் குறுகி யப்பா னின்றுகை தொழுமவ் வெற்பின்
மிடியுடை யொருவன் விற்கும் விறகினைக் குறித்துச் சென்று
வடியுடை நவியங் கொண்டோர் மரத்தினைத் துணித்த லோடும்
படியுறும் பசும்பொ னாகும் பரிசுகொண் டுவந்து செல்வான்.

(கு - ரை.) நெடியவன்குறுகி=திருமால் வந்து. அப்பால்=தூரத் தில். வடியுடைநவியம்=கூர்மையுடைய கோடாரி. (21)

கொண்டல்கண் முழவி னார்க்குங் கோதைவெள் ளருவி வெற்பில்
வண்டுபாண் முரன்று மூசி மலர்திளைத் தூறு செந்தேன்
உண்டுகண் டுயில்பூங் கொம்ப ருயர்மரத் திவர்ந்தி ராசி
ஞெண்டுகண் டஞ்சி மந்தி ஞெரேலென விழியு மன்றே.

(கு - ரை.) முழவின் = பேரிகைபோல். கோதை=மாலைபோல் ஒழுகும். பாண்முரன்று=இராகம் பாடி. மூசி=மொய்த்து. திளைத்து= மூழ்கி. இவர்ந்து=ஏறி. இராசிஞெண்டு=கற்கடக இராசியை. (22)

தளிர்க்குள கினைத்தேன் றேய்த்துத் தனதுவாய் கொடுக்குஞ் செய்
பளிக்கறை யதனுட் கண்டு பரிந்துவே றென்றி னுக்கிங் [கை
களித்ததென் றுளம யங்கி யரும்பிடி யொருகூர்ங் கோட்டுக்
களிற்றினை முனிந்து செல்லுங் கம்பலை யுடைத்தக் குன்றம்.

(கு - ரை.) தளிர்க்குளகினை = தளிராகிய உணவை. செய்கை = செயலை. பளிக்கறையதனுள் = பளிங்கு மண்டபத்தில். பிடி = பெண்யானை. களிற்றினை = ஆண்யானையை. கம்பலை = ஒலி. (23)

கண்ணுறு மதியின் மானைப் பிடித்துநீ நல்கு கென்ன
ஒண்ணுதன் மடந்தை வேண்ட வொருகுற மகன்கேட் டன்று
பெண்ணுரை கொண்டி ராமன் பிடிப்பதற் கெண்ணு மாபோல்
எண்ணில னிதற்கென் செய்வே னென்றுள னைந்து நிற்பான்.

(கு - ரை) மதியின்மானை = சந்திரனிடத்துள்ள (களங்கமாகிய) மானை. எண்ணிலன் = (பிடிக்க) எண்ணம் இல்லாதவனாய். (24)

மேருமந் தரமே யாதி வெற்பெலா மெனைவெ றுப்பச்
சாருமென் மாட்டே முக்கட் டம்பிரா னெனநி னைந்து
சேருமொன் னலரை யஞ்சிச் சிலம்பழு மாறு போல
ஆரவெள் ளருவி பாயு மழகினை யுடைத்து மாதோ.

(கு - ரை.) ஒன்னலரை = பகைஞரை. சிலம்பு = ஸ்ரீசைலம். ஆர = நிறைய. தம்பிரான் என்மாட்டே சாரும்என நினைந்து என்க. (25)

இனையன வளமி குத்த வெந்திருச் சயிலந் தன்னை
அனையினு மினிய னெங்கோ னல்லமன் சென்று நண்ணித்
தனியுடல் சித்தி பெற்றுத் தருக்குமக் கோரக் கன்றான்
நனியுள மகிழ்ந்தி ருக்கு நல்லிடந் தனைய டைந்தான்.

(கு - ரை.) திருச்சயிலந்தன்னை = ஸ்ரீ சைலத்தை. தனி = ஒப்பற்ற. தருக்கும் = அகங்கரிக்கும். உடல்சித்தி = காயசித்தி. (26)

அத்தனேர் வருதல் கண்ணுற் றப்பெருஞ் சித்தன் றன்னோ
டொத்தவோர் சித்த னாக வுன்னுபு தனைவி யந்து
நித்தனுண் மலர்த்தா டாழா நின்றுகை குவித்து ஞான
சித்தநீ வருக வென்றோர் தவிசிடைச் சேர்த்திச் சொல்வான்.

(கு - ரை.) அத்தன் = அல்லமன். நேர் = தனதெதிரில். உன்னுபு = நினைந்து. தனை = தன்னை; அல்லமரை யெனினுமாம். நித்தன் = நித்திய ரான அல்லமருடைய. சேர்த்தி = எழுந்தருளச்செய்து. (27)

## வேறு

இரவி வானவ னெழுந்தது மின்றெனக் கதாஅன்று
தெரிவ வாயின கண்களு மின்றுநின் சிறந்த
வரவு நானெதி ரின்றுபெற் றமையினின் வரவு
பொருவின் மாதவம் புரிந்திடார்க் கெளியதோ புகலின்.

(கு - ரை.) இரவிவானவன் = சூரியன். அதா அன்று = அதுவு மன்றி. சூரிய உதயம் இன்று தான் அதைக் காணப்பெற்ற கண்கள் நேர்ந்ததும் இன்றுதான், என்றார் கோரக்கர் என்க. (28)

மதலை யாகிய நற்குணஞ் சார்ந்துநல் வாய்மை
சிதைவி லாவடி யாரினஞ் சேர்ந்திடா தவன்கண்
நுதலி னானையுஞ் சேர்ந்திடா னென்ப வெந்நூலும்
முதலி லான்பெறு மூதியம் யாதுகொன் மொழியில்.

(கு - ரை.) மதலையாகிய=குழவிப்பருவத்திற்கு உரியதாகிய. சிதைவிலா=அழியாத. கண்நுதலினானையும்=நெற்றிக்கண்ணுடைய சிவபிரானையும். சேராதவனே என்று எல்லா நூற்களும் கூறும் என்றபடி. (29)

ஒருவி ருந்தினர்க் குரைசெயு முகமனே டொப்பக்
குருப ரன்றனக் கிணையன வின்மொழி கூறி
வருபெ ருந்தகை யார்கொனீ யுரையென வாழ்த்தி
அருளி னங்கட றனைவினாய் நின்றன னன்றே.

(கு - ரை.) முகமன்=உபசாரம். அருளின் அம் கடல்தனை=அழகிய அருள் கடலான அல்லமனை. வினாய்=வினவி. (30)

செறிந்த மூலவாங் காரத்தின் வேறெனத் தீர்ந்திட்
டிறந்தி டாதுதற் கண்டவ னென்னையுங் காண்பான்
மறிந்து போமுடன் மானியை யுரைப்பதென் மதித்தென்
றறிந்த ஞானிகள் வேறற வறிபவ னறைந்தான்.

(கு - ரை.) வேறெனத்தீர்ந்திட்டு = வேறாக நீங்கி. தன் கண்டவன்=தன்னை தரிசித்தவன். உடல்மானியை = தேகாபிமானியை. வேறற=வேறுபாடின்றி. அறிபவன்=அறியும் அல்லமன். (31)

ஆதி நாதன தருளினாற் குளிகையா திகளான்
மேதை யாமுடல் சித்திபெற் றவனென்றும் விளியான்
ஆத லாலது பெறுதவ னழியுமென் றறைந்தான்
பூத மேனியே தானெனப் பொருந்துபுந் தியினான்.

(கு - ரை.) மேதையாம்=மேன்மையான. விளியான்=இறவான். பூதமேனியே=ஐம் பூதங்களாலான உடலே. பொருந்து புந்தியினான்=அறியும் அறிவையுடைய கோரக்கன். (32)

உடம்பு வாழ்தரூன் வாழ்தலு மூன்பொதிந் தியற்றும்
உடம்பு சாதரூன் சாதலு மாகவே யுரைத்தாய்
உடம்பு தானுயி ரென்னநீ யுன்னினை போலும்
உடம்பு வேறறி யாவுல காயத னொத்து.

(கு - ரை.) வாழ்தரூன்வாழ்தலும்=வாழ்வது, தான் வாழ்வதாகவும். ஊன்பொதிந்து இயற்றும்=மாமிசம் நிறைந்திருக்கும்படி செய்யும். வேறறியா=தனக்கு அயலாயிருப்பதென்றறியாத. (33)

யாக்கை தானெனி லெனதுடம் பென்பதிங் கென்னை
போக்கு மாடைபொன் முதலிய பொருளுளொன் றெனதென்

ருக்கு வார்தமி லதனையா னென்பவ ரைய
பார்க்கில் யாருளர் பகர்தியென் றல்லமன் பகர.

(கு-ரை.) ஆக்குவார்தமில்=தன்னதாகச் சேர்ப்பவர்கள்போல. அதனை=அப்பொருளை. ஐய=ஐயனே; விளி. (34)

யானினைந்தன னோடின னென்றியம் புதலால்
தானெ னப்படு கின்றதே தெனக்கது தனை
நீநி கழ்த்துக வென்றுகோ ரக்கனின் றியம்ப
ஞான நற்குரு பரனிது நவின்றன னயந்து.

(கு-ரை.) யான் நினைந்தனன், ஓடினனென்று (யாவரும்) இயம்புதலால் என்க. இயம்புதலால்=யாவரும் கூறுதலால். எது=யாது. நிகழ்த்துக=கூறுவீராக. ஞானநல்குருபரன்=ஞானசிரியனாகவந்த அல்லமன்.

நானினைந்தன னெனல்கர ணத்தினை நண்ணும்
ஆன தன்மையா லுடல்பொறி கரணங்க ளனைத்தும்
நானெ னும்படி வரும்வரத் தான்பல வதனால்
நீந வின்றதத் தியாசமென் றறிகென நிகழ்த்த.

(கு-ரை.) எனல்=என்றுரைத்தல். கரணத்தினை=அந்தக்கரண இயக்கத்தில். நண்ணும்=சேரும். எனும்படி வரும்=என வழங்கும்படி சேரும். வர=(அங்ஙனம்) வழங்கிவர. தான்பல=தான் என்பது பல வாகக்காணும். அத்தியாசம்=கற்பனை. (36)

ஒழியு மென்னுயி ரெனுமிடத் தவ்வுயி ரொழிய
மொழிய வேறுமோ ருயிருள தோவிதை மொழிநீ
பழியி னல்லருட் குன்றமே யென்றவன் பகரச்
செழிய மென்மலர்ப் பதத்தெமை யாள்பவன் செப்பும்.

(கு-ரை.) ஒழிய=நீங்கலாக. பழித்தலில்லாத சிறந்த அருள்மலையேயென்று கோரக்கர்கூற என்க. செழிய=செழுமையான. (37)

உயிரெ னும்பெய ரியங்குகாற் கியற்பெய ருரைப்பின்
அயலு றுந்தனக் கப்பெய ராகுபே ராமென்
றியலு ணர்ந்தவ ரியம்புவ ரென்றெமக் கிறைவன்
மயல றும்படி யுணர்ந்திமீ துரைத்தனன் மன்னோ.

(கு-ரை.) இயங்கு காற்கு = சஞ்சரிக்கும் பிராண வாயுவிற்கு. இயற்பெயர் உரைப்பின் = இயற்பெயராக உரைத்தால். அயலுறும்= அப்பிராண வாயுவிற்கு விலகி நிற்கும். தனக்கு=ஆன்மாவான தனக்கு. ஆகுபேராம்=ஆகுபெயராம். இயல்=இயற்றமிழ். (38)

தன்னைச் சச்சிதா னந்தமென் றருமறை சாற்ற
மின்னிற் கெட்டிடுந் தசைநிண மென்புதோன் மேய்ந்த

இன்னற் பொய்க்குடி லாகிய வுடம்பினை யானென்
றுன்னிக் கெட்டனை யென்கொனீ யென்றினு மியம்பும்.

(கு - ரை.) மின்னில் கெட்டிடும்=மின்போலத் தோன்றி மறையும். மேய்ந்த=போர்த்த. இன்னல்=துன்பமயமான. குடில்=வீடு. (39)

வெருவு றப்படும் பிறவியை யொழித்துமெய் வீடு
மருவு தற்குளம் வைத்தவ னிம்மல வடிவைத்
தெருவி னிற்புனி தம்படா வொன்றனைத் தீண்டி
அருவ ருப்பவன் போலரு வருத்ததை யகற்றும்.

(கு - ரை.) வெருவுறப்படும்=அஞ்சத்தக்க. மருவுதற்கு=அடைதற்கு. மலவடிவை=மலவடிவான இவ்வுடலை. படா=இல்லாத. அருவருத்து அதையகற்றுமென்க. அதை=அவ்வுடலை. (40)

மருந்து கொண்டுநோய் தீர்ப்பவர் போற்சிவ மருவி
இருந்த விவ்வுடம் பினைப்பெரி யவர்விட வெண்ண
மருந்து கொண்டுநோ யோடுற மதிப்பவன் போல
இருந்த விவ்வுடம் போடுற வெண்ணினை யென்னே.

(கு - ரை.) விட=விடும்படி. கொண்டு=இருந்தும். நோயோடு உற=நோயுடன் இருக்க. மதிப்பவன்போல=எண்ணுபவன்போல். (41)

பிறந்த வாகமொன் றிறந்திடாப் பெருமையு முடைத்தோ
எறிந்த வான்சிலை வீழ்ந்திடா திருப்பதிங் கில்லை
செறிந்த காரிய மென்பதென் றுயினுஞ் சிதையும்
இறந்தி டாதுகா ரணமெனப் படுமதே யென்றும்.

(கு - ரை.) ஆகம் = உடல். வான் எறிந்த சிலை = ஆகாயத்தில் வீசிய கல். இங்கு=இவ்வுலகில். செறிந்த=நிறைந்த. காரணம் நிற்கக் காரியம் என்றாயினும் ஒருநாள் சிதையநேரும் என்றபடி. (42)

மருந்தி னுலுட னித்தமா மென்றுநீ வகுத்த
திருந்து வாழுநாட் பன்மைகொண் டன்றிவே றில்லை
பொருந்தி நீயுட லழிந்திடா தென்பது பொருந்தா
தருந்த வாவினி வீடுவேண் டென்றனை யயன்.

(கு - ரை.) மருந்தினுல்=(காயசித்திக்கு உரிய) மருந்தால். நித்தமாம்=என்றும் இருக்குமாம். வகுத்தது=கூறியது. பன்மை நாள்=பலநாள். அருந்தவா=அருமையான தவத்தனே. (43)

ஏது சொல்லினு மென்னுட லழிவுறு தென்றும்
வாது செய்வதென் காட்சியா லுணர்த்துவன் வலியின்
றுதி நாதன தருளினு லென்றுகோ ரக்கன்
றீதி லாவருள் வாரியோ டுரைத்திது செய்யும்.

(கு - ரை.) என்னுடல் என்றும் அழிவுறாது எனவும், இன்று காட்சி
யால் வலியுணர்த்துவன் எனவும் இயைக்க. (44)

இன்னி யங்களின் முழங்குவெள் ளருவிவெற் பெறிந்த
மன்ன வன்படை யன்னதோ ரொளிரயில் வாய்வாள்
தன்னை யெம்பிரான் கைக்கொடுத் தனையனென் றன்னை
நின்னி ரும்புய வலியினா லெறிகென நிகழ்த்தி.

(கு - ரை.) இயங்களின் = வாத்தியங்களைப்போல. எறிந்த =
(இறகுகளை) அறுத்த. மன்னவன் = இந்திரன். படை = வஜ்ராயுதம்.
அயில்வாய்=கூரிய முனையை உடைய. அனையன்=அந்த கோரக்கன். ()

அத்த வீச்சிற கன்னதோர் தோலறு மேனும்
சித்த னலனென் றுமுன் னின்றனன் செருக்கி
நித்தன் யானிவன் கருதிய தேசெய்து நெஞ்சின்
வைத்த மாதருக் கொழிப்பலென் றருளுளம் வலித்தான்.

(கு - ரை.) அத்த=இறைவனே. "ஈச்சிற கன்னதோர் தோலரினும்
வேண்டுமே, காக்கை கடிவதோர் கோல்" என்பது நாலடியார். மாத
ருக்கு=மிக்ககருவம். வலித்தான்=உறுதிகொண்டான். (46)

வாங்கு வாளினை மின்னென விதிர்த்தருண் மாரி
ஓங்கி வானுரு மேறென வதிர்த்தவ னுடம்பில்
தாங்க மால்வரை மீதெறிந் தானெனத் தாக்க
ஆங்கொ ரோதைகிண் ணென்றுமே லெழுந்ததை யன்றே.

(கு - ரை.) அருள்மாரி=கிருபை மேகமாம் அல்லமன். வான்உரு
மேறென அதிர்த்து=மேகமெனக் கர்ச்சித்து. தாங்க=பட. ஓதை=ஒலி.

திருப்ப ருப்பத நடுங்கிய தவ்விறற் சீற்றத்
தரக்க னுற்றிது தனையுமின் றெடுத்தன னமென்
றுரைப்ப தற்கரி தாகிய வச்சமுற் றோடிப்
பொருப்பி றைக்கொரு மகளரன் புயங்கள்புல் லினளால்.

(கு - ரை.) அரக்கன் = இராவணன். இதுதனையும் = இந்த ஸ்ரீ
சைலத்தையும். மகள்=உமாதேவி. புல்லினள்=தழுவினள். (48)

விஞ்சை மாதர்தம் யாழொலி கேட்டமா வேடர்
அஞ்சி லோதியர் பதலைகேட் டயரசு ணம்போல்
நெஞ்சு மாழ்கினர் புள்ளின மெழுந்தகா னிமிர்த்துத்
துஞ்சு மாவெழுந் தோடின வானமுளி துளித்த.

(கு - ரை.) அம்சில் ஓதியர்=அழகிய சடைப்பில்லையை அணிந்த
கூந்தலையுடைய மாதர். பதலை = பறையோசை. துஞ்சுமா = உறங்கி
யிருந்த மிருகங்கள்; வான்=மேகங்கள். துளிதுளித்த=மழை பெய்தன.

இன்ன வாறொலி யெழவுட லூறின்றி யிருப்ப
முன்ன மேவிய செருக்கினு மும்மடங் கெய்தி
என்னை நேர்பவ ரிலையென வவனுளத் தெண்ணித்
தன்னை யேநனி வியந்தமை யறிந்தனன் றலைவன்.

(கு - ரை.) ஊறு=பழுது. நேர்பவர்=எதிர்ப்பவர்; ஒப்பானவர் எனினுமாம். அவன்=அக்கோரக்கன். (50)

ஒலியெ ழுந்திட லின்னண நினதுபே ருடம்பு
வலிய டைந்தநின் னொப்பவ ரிலைவளி வழங்கும்
உலகி லென்றுகை குலைத்திள நகைபுரிந் தொருகைம்
மலர்பொ ருந்துவா ளவன்கையிற் கொடுத்திது வகுத்தான்.

(கு - ரை.) இன்னணம் ஒலியெழுந்திட என்க. வளிவழங்கும்= காற்று உலவும். குலைத்து=கொட்டி. வகுத்தான்=கூறினன். (51)

வாங்கும் வாளினா னின்வலி யொடுநுமர் வலியும்
தாங்கி யென்னைநீ யெறிந்துகா ணென்றுநந் தலைவன்
ஆங்கு நின்றனன் சித்தனு மஞ்சில னாகி
ஓங்கி வாளினா லெறிந்தன னொப்பிலா னுருவை.

(கு - ரை.) நுமர்=நின்சுற்றத்தார். தாங்கி=பெற்று. எறிந்து= வெட்டி. ஒப்பிலானுருவை வாளினாலோங்கி எறிந்தனனென்க. (52)

அணும யங்குமின் னுழைகதி ரெறிந்தவா ளாக
இணைம யங்குமெய்ப் படாதுவாள் வறிதுபோ யிற்று
பணைம யங்குதோள் மாயைதன் படாமுலை படாத
மணம யங்குதண் சோதிமேல் வாள்பட வற்றே.

(கு - ரை.) அணுமயங்கும்=பரமாணுவும் பின்னிடத்தகும். மின்னலினும் நுண்மையான கதிர்=சூரிய கிரணத்தை. வாளாக=வெட்டிய வாள்போல. இணைமயங்கும்=உவமைப்பொருள்எலாம் தோற்கும். பணைமயங்கும்=மூங்கிலும் தோற்கும்படியான. படாமுலை=மேலாடை போர்த்த முலைகள். மணமயங்கும்=மணமெலாம் பின்னிடும். (53)

## வேறு

வாளெறிந்து கையிளைத்த கோரக்க னதன்மிக மனம்வியந்து, நாளிறைஞ்சும் பரஞ்சுடரே யிவனென்று மெய்விதிர்ப்ப நடுநடுங்கித், தானடைந்த செருக்கொழிந்து தலையன்பி னெறிநடப்பத் தலைப்பட் டெங்கோன், தேனடைந்த செழுங்கமலத் திருவடியில் வீழ்ந்தெழுந்து செப்புகின்றான்.

(கு - ரை.) வாள் எறிந்து=சிதாகாசத்தை வெட்டி. விதிர்ப்ப= குலுங்க. நெறி=மார்க்கத்தில். தலைப்பட்டு=முடிபுகொண்டு. (54)

நின்னையறி யாதுமது வுண்டவன்போன் மனஞ்செருக்கி நினைந்த பாவம், பின்னரெதிர் நின்றுநின துரைமறுத்துப் பித்த னெனப் பிதற்றுந் தீமை, இன்னுயிர்கொன் றுடல்கவரு மறவன் போற் செய்தபிழை யெல்லா மெந்தாய், மன்னியநின் பேரருளாற் தீர்த்தெனையாட் கோடியென மறித்துந் தாழ்ந்தான்.

(கு-ரை) மது=கள். மறவன்=கொடியவன். மன்னிய=நிலை பெற்ற. கோடி=கொள்ளுதி. மறித்தும்=மறுபடியும். (55)

செய்தபிழை போகவினிப் பிழைசெய்யா துடம்புநசை தீர்ந்து நின்றன், மெய்தெரியி னெனக்குநீ யினியனெனப் பெருங்கருணை வெள்ளங் கூற, வுய்தலிலென் பிழைபொறுத்திட் டடித்தரிய வான முத மூட்டு கின்றாய், கைதருசெம் மணியனையா யான்செய்வ தேது ளது கைம்மா றென்று.

(கு-ரை.) போக=நீங்கலாக. நசை=பற்று. மெய்=உண்மை வடிவம். தெரியின்=காணின். பெருங்கருணை வெள்ளம்=அல்லமன். உய்தல் இல் = உய்ந்து கடைத்தேறலில்லாத. அடித்து = தண்டித்து. மணி=மாணிக்கம். கைம்மாறு=பிரதி உபகாரம். (56)

முற்றுமருள் செய்துநீ யானறிய வேண்டுபொருண் மொழிதி யென்
பற்றுடல நசைதீர்ந்து கோரக்க னிற்பவவன் பருவங் கண்டு [று
கற்றறியு மறிவினா லறிவரிய பரஞ்சோதி கருணை கொள்ளப் [றான்.
பெற்றதிரு வுளமகிழ்வுற் றன்பொடுகேண் மதியென்னாப் பேச லுற்

(கு-ரை.) முற்றும் அருள் = நிறைவுடைய கருணை. வேண்டிய பொருள் யாதோ அதை யென விரிக்க. பற்றுடலநசை=பற்றிய தேகாபிமானம். பருவம்=பக்குவம். மதி=முன்னிலையசை. (57)

இருந்தபடி குகேசனைநீ யறிவையெனி னின்பிறவி யெனுநோய் தீர்ந்து, பொருந்துறுவை பேரின்பமென் றமலன் கூறவவன் போற்றி யெந்தாய், பரிந்தருள்செய் குகேசனெனு மொழிப்பொருளே தது கூறப் படுவான் யாவன், தெரிந்துணர வருள்செய்வா யென்றுதொழ வெம்பெருமான் செப்பு கின்றான்.

(கு-ரை.) அவன் = கோரக்கன். மொழிப்பொருள்=சொல்லின் பொருண்மை. ஏது=யாது. கூறப்படுவான்=உணர்த்துபவன். (58)

குகையிதய மதன்கணம ரிறையீச னென்றுபொருள் குறித்துக் கொண்மோ, நிகழனைய குகேசமொழி யுடையன்யான் றானெனவே நிமலன் கூற, அகமகிழ முகமலர்ந்து சித்தனறை குவனீயே யாகி லுன்றன், முகையவிழ்மென் மலர்க்கரத்திற் சிவலிங்கங் கொண்ட தென்கொன் மொழிதி யென்றான்.

(கு-ரை.) குகை இதயம்=குகை யெனப்படுவது, இருதயமெனப் படும். நிகழனைய=விளங்காநின்ற. கொண்மோ=கொள்ளுதி. (59)

பிறந்தபயன் பெறவுலக ரெனைக்கண்டு கொண்டுமனம் பிறழ்த லின்றிச், சிறந்தசிவ லிங்கமலர்க் கரங்கொண்டு பூசனையாஞ் செய்ய வேண்டி, நிறைந்தவென துருவாகு மிக்குறிகைக் கொண்டனன்யா னீங்கா தென்றும், அறிந்துதெளி குதிமனமென் றருள்செய்தெங் குருதேவ னறைய லுற்றான்.

(கு - ரை.) பிறழ்தல்=வேறுபடல். லிங்கம்=லிங்கத்தை. கரம்= கரத்தில். நிறைந்த=எங்கும் உள்ள குறி=இட்டலிங்கம். இக்குறி என்றும் நீங்காது யான் கைக்கொண்டன என்றியைக்க. (60)

போதகனு கியகுரவ னென்ஞான்று நற்கருமம் புரிக வென்று
வேதமுத லாகியநூன் முழுதுமொருங் கொருவந்தம் விதித்த லாலே
சாதகனு கியபருவ மாணுக்கன் பாசவலி தணிக்க வல்லான்
மேதினிமே லுடலொடுநற் செயல்விடுவ தன்றியிடை விடலா காதால்.

(கு - ரை.) ஒருவந்தம்=தனித்திருத்தலை. ஆசிரியனே மாணவனே தம் தூயகிரியைகளை, தேகமுள்ளவரை இடையில் விடலாகா எங்க. (61)

என்றுதன தியலுணர்த்தி யுடம்புநா னென்றிருந்த வியல்பு போல, நின்றவெனை யுணர்ந்துநீ சோகம்பா வனைகொண்டு நிற்பை யாயில், பொன்றலுறு விடங்கலுழன் றனைநினைப்பப் போதல்போற் போமவிச்சை, நன்றறிதி யெனவறிவித் தனனெங்கோன் கோரக்க னுதன் றன்னை.

(கு - ரை.) இயல்=இலக்கணத்தை. சோ=அவனே; அகம்=நான் எனும்பாவனை, சோகம் பாவனையென். பொன்றலுறு=கொல்லுதற்கு உரிய. கலுழன்றனை=கருடனை. அவிச்சை=அஞ்ஞானம். (62)

ஞானகுரு பரனருளாற் றனக்குரைத்த மொழிப்பொருளை நன்ற றிந்திட், டூனவடி வென்பதுவிட் டுண்மையலா வனைத்தையுநீத் துண்மை கண்டு, தானதனை யடைந்துதா னதுவென்னு மரு ளகன்று தானே யாகி, வானவரு மறிவரிய பெரும்புகழ்கோ ரக்கன வண் மன்னி னுனல்.

(கு - ரை.) ஊனை=மாமிச உடலை. வடிவு=தனது தேகம். நீத்து= வெறுத்தகற்றி. உண்மைகண்டு=மெய்ம்மைநிலை யினையதென அறிந்து. ()

பத்தொன்பதாவது

கோரக்கர்கதி முற்றிற்று.

கதி 19 - க்கு திருவிருத்தங்கள் - 947.

இருபதாவது

# முனிவரர்கதி

## வேறு

பனிவரை மகளொடு பவள வார்சடைத்
தனிவரை யமர்திருச் சயில நீங்கியே
துனிவரை யல்லமன் சுருதி மெய்ப்பொருள்
முனிவரை யுணர்த்திய முறைமை கூறுவாம்.

(கு - ரை.) பனிவரை மகள்=பார்வதியார். வரை=மலைபோன்ற சிவபிரான். சைலம்=ஸ்ரீசைல பர்வதம். துனிவரை=(பிறவித்) துன்பத்தை அகற்றும். சுருதிமெய்ப்பொருள் = வேதமுடிவாகிய உண்மைப் பொருளை. முனிவரை=முனிவர்களுக்கு. (1)

அருந்தவ முயன்றகோ ரக்கற் கம்முறை
விரிந்தறி வுருவமா மெய்ம்மைத் தன்மையைப்
பரிந்தரு ளமலனப் பாலு முத்தரம்
பொருந்துநர் தமக்கருள் புரியப் போயினன்.

(கு - ரை.) விரிந்து=வியாபித்து. அறிவுருவமாம்=அறிவே வடிவமாகிய. பரிந்து அருள்=விரும்பி உபதேசித்த. அப்பாலும்=அதன் பின்னும். உத்தரம் பொருந்துநர்தமக்கு=வடநாட்டு முனிவர்களுக்கு. (2)

நல்லன தீயன நாடு றுதுகொள்
வல்லழ லெனவருண் மழையெ னப்படும்
அல்லம னெதிர்ந்தவ ரறமு ளாரறம்
இல்லவ ரெனுதறி வியற்றி னனரோ.

(கு - ரை.) கொள்=தன்னகப்படுத்தும். எதிர்ந்தவர்=நேரில் வந்தவர்களை. அறிவு இயற்றினன்=ஞானோபதேசஞ் செய்தான். (3)

யாவருந் தனதருட் கேற்று ளாரெனப்
பாவவன் றளையறப் பரிந்து நன்னெறி
மேவவந் தருள்புரி விமல னயிடை
மாவழங் குறுமொரு வனத்திற் போயினன்.

(கு - ரை.) ஏற்றுளார் = தகுதியுடையார். பாவவன்தளை=பாவமாகிய வலிய பிணிப்பு. மாவழங்குறும்=விலங்குகள் வாழும். (4)

அக்கொடு வனத்தெதி ரன்பெங் கின்றதுள்
புக்கறி கிலாவொரு புளினன் கூன்புறக்
கொக்கென நாடொறுங் கொலைகு றித்தவன்
கைக்கொடு மரமொடு கடிது தோன்றினன்.

(கு - ரை.) அக்கொடு=கொடிய அந்த. உள்புக்கு அறிகிலா = மனத்திற் புகுந்து அறியாத. புளினன்=வேடன். கூன்புறம்=வளைந்த முதுகுடைய; "கொக்கொக்க கூம்பும் பருவம்" என்பது பொதுமறை. கொலைகுறித்தவன் = கொலையே விரதமாகக் கொண்டவன். மரம்= தோமரம்; முதற்குறை. (5)

அன்பனைக் கண்ணிடந் தப்பும் வேடனுக்
கின்பமீ குதல்புகழ்க் கேற்ற தன்றுநான்
வன்பனைத் திரியுமிம் மறவற் காப்பலென்
றென்பொலா நெறிமன மிரங்கிற் றென்றனன்.

(கு - ரை.) வேடனுக்கு = கண்ணப்பநாயனாருக்கு. வன்பனை= கொடியவனை. மறவன்=வேடனை. பொலாநெறிமனம் = பிளவுபடா நெறியுடைய நெஞ்சம். மறவனை நெறிப்படுத்தலே புகழென்றபடி. (6)

நல்லறி வவனுள நடுதற் கொப்பிலா
அல்லமன் வினையற வருட்கண் வைத்தனன்
கொல்லையின் விதையிடக் கொழுப்புக் காமுளி
புல்லெரி வுறவழற் போகட் டென்னவே.

(கு - ரை.) நல்லறிவு = தூய ஞானத்தை. ஒப்பு இல்லாத அல்லம னென்க. வினை=நல்வினை தீவினை இரண்டும். கொழுப்புக்கா=எருவிற் காக. முளி=முள்ளிச்செடிகளும். புல்=புற்களும். எரிவுற=எரிந்துபோக. அழல்போகட்டென்னவே=நெருப்பிலிட்டாற்போல. (7)

மேவுதீ வினையெலாம் விளிந்து தூயனைப்
பாவியே னுய்வகை பகர்தி யென்றனன்
மாவலால் வழங்குறு வனத்தில் வேட்டுவன்
யாவர்தா மிறையரு ளெய்தி னுய்ந்திடார்.

(கு - ரை.) விளிந்து=ஒழிந்து. மாஅலால் = விலங்குகளையன்றி. வழங்குறு=யாவரும் வசிக்காத. வேட்டுவன் உய்வகை பகர்தியென்றனன் என்க. உய்ந்திடார்=யாவரும் உய்வர் என்றபடி. (8)

அறிவெனும் வேலினு லைம்பு லன்களாம்
மறியின மருளெனும் வலையைத் தப்புறு
தெறிகுவை யெனினுனக் கில்லை துன்பெனு
நெறியினை வழுவற நிமலன் கூறினன்.

(கு - ரை.) வேலினுல்=வேலாயுதத்தால். மறியினம்=மான் கூட் டங்கள். அருளெனும் வலையை என்க. வலையைத் தப்புறுது=வலையி னின்றும் தப்பியோடாதபடி. எறிதல்=வீசுதல். நெறி=பிறவாநெறி. (9)

அறிவொடு மனஞ்சிலை யம்ப தாகநான்
குறியென வெய்மையேற் குமர நின்றனைப்
பொறிமதி லிலங்கைமுன் புரந்து ளான்றலை
பறிபட வெய்தவன் பணியு மென்றுமே.

(கு - ரை.) அறிவுவில்லாக, மனம் அம்பாக அல்லமன் குறியாக ன அமைதலின் இது நிரனிறையணி. பொறிமதில்=பகைவர் நெருங்கா வண்ணம் யந்திரச்சிலைகள் அமைக்கப்பெற்ற மதில்களையுடைய.. பறி பட=அறுபட்டுப்போக. எய்தவன்=இராமன். (10)

இப்பரி செறுழ்வலி யெயின னுய்வகை
செப்பிநன் னிலையருள் செய்தி ருத்தியே
அப்புற மருளுடை யமலன் போம்பொழு
தொப்பறு தவவன மொன்று தோன்றிற்றே.

(கு - ரை.) பரிசு=தன்மையை. எறுழ்வலி=மிகுவலியுடைய. எயி னன்=வேடன். நன்னிலை=மெய்ம்மை நிலையை. இருத்தியே=நிலையிற் கலங்கா திருக்கவைத்து. அப்புறம்=அவ்விடத்திலிருந்து. (11)

கோடமை கரிகளுங் கொடும டங்கலும்
பாடமை பகைதவிர் பரிசி னாதற்
காடர வொடுமதி யமர்பி ரான்சடைக்
காடல துவமையாங் கண்ட தில்லையே.

(கு - ரை.) கோடமை=கொம்புள்ள. கொடுமடங்கல்=கொடிய சிங்கங்கள். பாடமை=பெருமை தங்கிய பரிசினாலென்க. அதற்கு=அந் நிலைக்கு. சடைக்காடு = சடாடவி. பகையிலா அக்காடு, சிவபெருமான் (பாம்பும் மதியும் பகையின்றி உறையும்) சடாடவியை ஒத்தது என்க.(12)

பெயர்க்குறு கால்கள்கை யாகப் பெற்றவும்
உயிர்க்குறு நாசிகை யாக வுள்ளவும்
மயக்கறு தீயினை வளர்த்து வான்புனல்
பயக்குறு முனிவரர் பணிகள் செய்யுமால்.

(கு - ரை.) பெயர்க்குறு=நடப்பதற்குரிய. கால்களைக் கைகளாகப் பெற்றவை=புலி சிங்கமாதிய. மூக்கைக்கையாக உள்ளவை-யானை, யாளி ஆதிய ,உயிர்க்குறு=சுவாசிக்கும். பயக்குறு=பெய்யவைக்கும். (13)

மறைபல வோதுநர் மகம்வ ளர்க்குநர்
கறைமிட றுடையநங் கடவுட் பூசனை
முறைவழி புரிகுநர் மூச்ச வித்தொரு
தறியென வசைவற விருக்குந் தன்மையார்.

(கு - ரை.) கறைமிடறு = திருநீலகண்டம். முறைவழி = ஆகம முறைப்படி. மூச்சவித்து=சுவாசம் பந்தித்து. தறி=ஸ்தம்பம். (14)

# வேறு

ஆயி ருக்கு மருந்தவர் தங்கள்பால்
போயி வர்க்குறு போதனை யாற்பவ
நோய கற்றுவ லென்று நுவன்றனன்
தாயெ னக்கொரு தானெனு மல்லமன்.

(கு - ரை.) இவர்க்குறு போதனையால்=இம்முனிவர்களுக்குத்தக உபதேசித்தலால். அல்லமன்,! நோயகற்றுவன் என்றனனென்க. (15)

நோற்று நோன்புட னெந்து வருந்துவீர்
ஆற்று நீர்மக மாதி வினையினால்
மாற்று மாயை மலஞ்செறு விற்படு
சேற்றி னுற்கழுஞ் சேறு நிகர்க்குமால்.

(கு - ரை.) சிவஞானத்தாலன்றி மாயாமலம் பிறமுயற்சியால் நீங்காதென்பது குறிப்பு. நோன்பு நோற்று என்றியைக்க. செறு=வயல். (16)

ஞானங் கொண்டு நணுகுஞ் சிவபதம்
ஊனங் கொண்ட கருமத் துறுவது
வானங் கொண்டு வளர்த்தல் புகையநு
மானங் கொண்டு வளர்த்தலை யொக்குமால்.

(கு - ரை.) சிவபதம்=சாயுச்சியமுத்தி. ஊனம்=பழுது. கருமத்து=(வேள்வி முதலியபுண்ணிய) செயலில். வானம்கொண்டு=வானமளாவ. புகையுள இடத்தில் நெருப்புளது; அதுபோல் வேள்வி உள்ள இடத்து சிவபதம் உண்டு என்பது நும்கருத்துப்போலும் என, அல்லமன் பரிகசித்தான் என்க. (17)

குடுமி யங்கிரி யொப்பக் குவித்தபுல்
சுடுதல் கொண்டு பிறவி சுடப்படா
தடுபு லன்க ளறிவெனு மங்கியில்
சுடுதல் கொண்டு பிறவி சுடப்படும்.

(கு - ரை.) குடிமி அம்கிரி=சிகரத்தையுடைய அழகியமலை. புல்=தருப்பைகளை. அடு=(உயிர்களை) வருத்தும். அங்கியில்=தீயில். (18)

போத மாகும் புனிதத் தழலினுள்
பேத பாவனைப் பேரவி பெய்வனேல்
ஆதி சோவுடை மாசி யவனென
வேதம் யாவும் விளங்க விளம்புமே.

(கு - ரை.) போதம்=மெய்ஞ்ஞானம். பேதபாவனை=சிவம் வேறு, தான் வேறு எனக் கருதும் பாவனை. பேரவி=பெரு!நெய்யை. சோ உடை=திரிபுரமதிலை உடைத்த. மாசி=மேகம். (19)

மறையி னுள்ள கருமம மனவினை
வறியர் கொள்ளுதல் போல மதியறும்
சிறியர் கொள்வர் தெளிதத் துவமசி
அறிஞர் கொள்வ ரணிகொளுஞ் செல்வர்போல்.

(கு - ரை.) கருமம்=கன்மஅநுஷ்டிப்பை. மனவினை=மனத்தில் துயரையுடைய. வறியர்=ஏழைகள். தத்=அதுபோல்; துவம்=நீ; அசி= ஆயினாய் எனும் பொருளில் பயின்றது, இம்மா வாக்கியம். (20)

என்று கூற விருந்தவ ரன்பொடு
நின்று ஞான நெடுந்தகை தாண்மிசை
இன்று நீவர வெத்தவஞ் செய்தனம்
மன்ற யாமென வாழ்த்தி வணங்கினார்.

(கு - ரை.). இருந்தவர் = மிக்க தவசிகள். ஞானநெடுந்தகை= பெருந்தகுதியுடைய ஞானசொரூபனான அல்லமன். மன்ற =பெரிதும்; தேற்றமுமாம். "மன்றவென்கிளவி தேற்றஞ்செய்யும்" என்பது விதி. (21)

மாயை தோன்றிய ஞான்று மனத்தெழும்
மூய மோக முடிந்திடச் செம்மலர்
வாயி னுற்றுரு வாசன் சொலப்படும்
தூய னுமிவ னென்று துதித்தனர்.

(கு - ரை.) மா=தோற்றம்; யா=இலயம்: ஞாலமனைத்தும் எத னில் உதித்து ஒடுங்குகிறதோ அது, மாயை என்றபடி. மனத்து எழுமூய= உளத்திலெழுந்து (அறிவை) மூடிய. மோகம் = சிற்றின்ப உணர்வு. முடிந்திட=விலக. இவன்=இவ்வல்லமன். (22)

இன்ன வாறிங் கிருந்த வரின்புற
மன்னு ஞான மறைமொழி கூறியே
தன்னை மேவுந் தலைமை புரிந்தனன்
அன்னை போலுநம் மல்லம தேவனே.

(கு - ரை.) மறைமொழி = மந்திரச் சொற்களை; "நிறைமொழி மாந்த ராணையிற் கிளந்த மறைமொழி தானே மந்திர மென்ப" என்பது, தொல்காப்பியம்: இனி, ஞான இரகசிய மொழிகளை யெனினுமாம். மேவும் = அடையும். தலைமை புரிந்தனன் = முதன்மைத் தன்மையை அளித்தான். (23)

இருபதாவது

முனிவரர்கதி முற்றிற்று.

கதி 20 - க்கு திருவிருத்தங்கள் - 970.

இருபத்தோன்றாவது

# சூனியசிங்காதனகதி

---

## வேறு

அல்லமனை யறிதற்கோ ரறிகருவி யாகவுனிச்
சொல்லரிய வெழுநிலைப்பொற் சூனியசிங் காதனமொன்
றில்லையென வில்லையெனு மெங்கள்குரு வசவேசன்
மல்லலுற வினிதாற்றி வைகுமுறை வகுத்துரைப்பாம்.

(கு - ரை.) அறிகருவி=அடையாளம். உனி=உன்னி; நினைத்து. எழுநிலை=சுபேச்சை, விசாரணை, தனுமானசி, சத்துவாபத்தி, அசம்சத்தி, பதார்த்தபாவனை, துரியம் என்ப; இனியிதனை, இரதம், இரத்தம், சுக்கிலம், மூளை, தசை, என்பு, தோல் என்னும் எழு தாதுக்கள் எனவும்: மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுக்தி, ஆக்ஞை, துவாதசாந்தம் என எழு ஆதாரங்கள் எனவுங் கூறுவர். சூனியம்=உள்ளதும் இல்லதும் உள்ளதில்லதும் எனக் கூறவியலா வெறும் பாழ் என்பர் மாதவச் சிவஞான யோகிகள். இல்லை எனல் இல்லை என்னும் இவ்வித்தக தத்துவத்தையே, "நில்லாவுலகி னிலைநேர்மையினால் வல்லாரு முணர்ந்திலர் மன்னுயிர்தாம், பல்லா யிரகோடி பரந்துளவால், இல்லாதன இல்லை இளங்குமரா" என்றார் கம்பரும். மல்லல்=வளப்பம். ஆற்றி=அமைத்து. (1)

ஒடுக்குமனம் வீட்டுநெறிக் கொருதுணையா கும்புறத்து
நடக்குமன நிரயவழி நடப்பதற்குத் துணையாமென்
றிடக்கர்மன மடக்கும்வகை யெம்பிரா னியம்பியவா
றடக்கமன முறுநெறியி னருணந்தி தலைப்பட்டான்.

(கு - ரை.) ஒடுக்குமனம்=மனவொடுக்கம். புறத்துமனம்=புறநெறியிற்போம் மனம். நிரயம்=நரகம். இடக்கர்=முரண்பாடு செய்யும்.

நில்லாது போமனத்தைக் கால்பிடித்து நிறுத்தியே
வில்லாரு மதியமுதம் விருந்திட்டு நட்புறீஇப்
பொல்லாத புலனுகரப் புறத்துநிலை தடுமாறிச்
செல்லாம லுடன்கொண்டு சித்திரமொத் திருந்தனனால்.

(கு - ரை.) கால்=பிராணவாயுவை. வில்=ஒளி. மதியமுதம்=நெற்றி நடுவாகிய ஆக்கினைக்கு அடுத்த சிதாகாசச் சந்திரமண்டலத்தினின்றுவரும் அமுதத்தை. நுகர=(விஷயாதிகளை) அனுபவிக்க. புறத்துநிலை=புறம்பாகிய நிலை: உடன்கொண்டு=வயப்படுத்தி. (3)

நின்றமனங் கொண்டுதா னித்தமாந் தனையுணர்த்த
என்றுவரு ஞானகுரு வெனவெழுந்து வளர்காதல்

ஒன்றுமொழி வறநிற்ப வுவப்பதுல கிற்பொருள்வே
றின்றியரு ணந்திபிரா னெங்கதவர வினைநோக்கி.

(கு - ரை.) நின்ற=சித்திரமொத்து அசைவற்றிருந்த. நித்தமாம்=
த்தியமான. ஒன்றும் ஒழிவறநிற்ப=ஒன்றுமட்டும் நீங்காமலிருக்க. (4)

எவ்வுருவி னெடுவருமோ வெம்பிரான் றெளியகிலேன்
செவ்வியவோர் தவிசமைத்துச் சேர்ந்ததன்மே லிருப்பவனை
அவ்வியமி லல்லமனென் றறிவன்யா னென்றுதுணிந்
திவ்வுலக முளம்வியப்ப விதுசெய்தா னருணந்தி.

(கு - ரை.) செவ்விய = செம்மையான. அதன்மேல் சேர்ந்திருப்
பவனை என்க. அவ்வியமில்=குற்றமில்லாத. உளம்=உள்ளம். (5)

## வேறு

ஆதியா தார மாதி யடுக்கெனப் பன்னி றத்த
சோதியேழ் நிலைக ளோங்கச் சூனிய பீட மொன்று
போதினோ னுளம்வி யப்பப் பொன்மணி பளிங்கு கொண்டு
சாதிநான் மறைகள் போற்றுஞ் சைவநா யகன்செய் வித்தான்.

(கு - ரை.) ஆதி ஆதாரம் ஆதி=மூலாதாரம் முதலிய. சோதி=
ஒளிவடிவான. சூனியபீடம்=சூனிய சிங்காதனம். போதினோன்=பிரமன்.
சாதி=ஓரினம். நாயகன்=தலைவனான வசவண்ணர். (6)

காரண வுபாதி யேழ்மேற் கண்டிடு ஞானி போலச்
சீரணி நுதலின் மீது சென்றுகாண் யோகி போலப்
பூரண ஞானா நந்தப் போதக னிருப்புக் காண்பான்
ஏரணி நிலைக ளேழ்மே னிகழ்வெளித் தவிச மைத்தான்.

(கு - ரை.) காரணம் = தானே (காரியரூபமாக ஆகும்) முதற்
பொருள். உபாதி=சாத்தியத்தில் வியாபித்து சாதனத்தில் வியாபியா
திருத்தல். ஏழாவன=ஈசன், முற்றறிவன், வியாபி, எவைக்கும் ஏது,
ஏகாசகன், நிருபாதி, பாவனை என்பன. போதகன்=பரமாசாரியன்.
இருப்பு=நிலையை. ஏர் அணி=மிக்க அழகு. ஏரணி ஏழ் நிலைகளின்
மேல் வெளித்தவிசு என்க. வெளித்தவிசு=சூனியசிங்காதனம். (7)

களங்கமின் மதியம் போலக் கண்டவர் மனம லர்த்தும்
பளிங்குசெய் நிலையுள் வந்து பார்ப்பவர் மெய்ந்நி ழற்போய்
விளங்குத றன்மேற் றோன்ற வெந்தெரி பசும்பொ னாற்செய்
துளங்கொளி நிலையைச் சென்னி சுமத்தல்போற் செய்த வொக்கும்.

(கு - ரை.) பளிங்கு=பளிங்கினால். மெய்ந்நிழல்=உடலின் சாயை.
மெய்ந்நிழல் போய் தன்மேல் தோன்ற விளங்குதல் தோன்ற என்க. (8)

திருந்திய பளிங்கு கொண்டு செய்தவந் நிலையின் வாய்தல்
பொருந்துத றெரிகி லாராய்ப் புகுந்துகாண் மனித ரெல்லாம்

இருபத்திரண்டாவது

# சூனியசிங்காதனத்திலிருந்தகதி

## வேறு

பள்ளம்புகு புனல்போனெறி படருஞ்சிவ னடியார்
உள்ளம்புகு மருணந்தியிவ் வுலகோரறி யாமல்
கள்ளங்கொளு மனமோடுசெய் யணைமேலொரு கருணை
வெள்ளங்கடி தேறுஞ்செயல் விருப்பாலெடுத் துரைப்பாம்.

(கு - ரை.) "பள்ளங் கண்டு வருபுனல்போற் பலிகொண் டில்லின் புறம்போந்தார்" எனத் திருவிளையாடற் புராணமும்; "பள்ளத்துப் பாயு நன்னீ ரனையவர்" எனக் கம்பரும் உரைத்த லறிக. நெறிபடரும்=நன்னெறியில் ஒழுகும். கருணைவெள்ளமான அல்லமனென்க. (1)

சிரனாடுறு கயலாடல்செய் செந்நாடுடை யுழவர்
அரனாடுறு மொருகாவிரி யறனாடுறு முறைபோல்
பரனாடுறு மடியார்வினை பரியத்திரி குரவன்
வரனாடுறு முருகும்பர வசவன்புறு வசவன்.

(கு - ரை.) சிரல்நாடுறு = சிச்சிலிக்குருவி தேடும். கயல் ஆடல் செய் = கயற்கெண்டைகள் விளையாடும் வயல். அரன்நாடுறும் = சிவபிரான் விரும்பும். அறல்நாடுறும்=நீரை எதிர்நோக்கும். பரன்=சிவபரன். பரிய=அகல. வரல்=வருகையை. பரவசமாம்படி உருகும் அன்புறு வசவன் அல்லமன் வருகையை எதிர்நோக்கு மென்க. (2)

பொன்னனைமை கதிர்வீசணை புரிந்தீரறு பருவம்
பின்னயின யான்செய்தொழில் பிள்ளைத்தொழி லாயிற்
றென்னாள்வரு மெனையாளுடை யெம்மானறி யேனென்
றுன்னுவரு துயரோடுள முளைந்தான்வினை களைந்தான்.

(கு - ரை.) கதிர்வீசு அணை=ஒளிவிடும் சிங்காதனம். புரிந்து=செய்து. ஈராறுபருவம்=12 மாதம். பின்னயின=கழிந்தன. (3)

இவ்வாறமர் நாளோர்பக லெமையாளுடை வசவன்
செவ்வாறுசென் மனத்தல்லம தேவன்வர றேன்றிற்
றவ்வாறது நிகழ்வுற்றவ னார்வந்தனை யொருநான்
எவ்வாறுரை செய்வன்பணி யிறையுஞ்சொல வரிதால்.

(கு - ரை.) செவ்வாறுசெல் = செம்மைநெறியில்செல்லும். நிகழ்வுற்றவன்=நேரப்பெற்ற வசவண்ணரது. பணியிறை=ஆதிசேடன். இறையும்=ஒரு சிறிதும். வசவண்ணர்மனதில் அல்லமர்வருகை தோற்றமாயதென்க. (4)

வலமாடின விழிதோளருள் வசவற்கதி தூரம்
செலுமாடவன் வருநாள்விழி யிடமாடிய செயல்வாய்
குலமாதுள மெனவேமகிழ் கொண்டன்பு நிறைந்து
மலமாயைக டூரக்குஞ்சென் னவசவற்கிது புகல்வான்.

(கு - ரை.) வசவண்ணர்க்கு வலதுகண்ணும் தோளும் துடித்தன என்க. ஆடவன்=கணவன். வாய்=வாய்த்த. தூரக்கும்=ஓட்டும். வசவண்ணர் சென்னவசவ தேவருக்கு இது புகல்வார் என்க. (5)

## வேறு

நற்குறி பலவு மிற்றை நாணிகழ் கின்ற வென்பால்
வற்கலை முனிவர் போற்றும் வசவவந் நிகழ்ச்சி யானும்
பிற்பெறு பயன்யா தென்று பெருந்தகை வினவ நின்ற
சிற்பர முணர்ந்த சென்ன வசவதே சிகனு ரைப்பான்.

(கு - ரை.) குறி=சகுனம். வற்கலை=மரவுரி. வசவ=சென்னவசவனே; விளி. நிகழ்ச்சியால் நாம் எனப்பிரிக்க. பெருந்தகை=வசவண்ணர்.

ஐயவிந் நிமித்தந் தன்னு லல்லமன் காண்பை யின்று
மெய்யுரை யிதுகா ணென்னு விடுத்தனன் மருக னெங்கள்
கையுறு மமுத னன்றான் கருதிய படிவிண் ணப்பம்
செய்யவுண் மகிழ்வு பூத்துச் செயல்செய்வார்க் குரைக்க லுற்றான்.

(கு - ரை.) நிமித்தம்=சகுனம். மருகன் விடுத்தனன்=வசவண்ணரது மருமகனான சென்னவசவர் விடை கூறினர். அமுதன் றான்=வசவண்ணர். செயல் செய்வார்க்கு=ஏவலாளர்க்கு. (7)

உடம்பெனும் வனத்தி னின்ற வுயிரெனுங் கன்னி தன்னைத்
தொடர்ந்திசை மணத்தாற் சேர்ந்த துணைவனல் லமனின் றெய்தும்
அடைந்தருள் கல்யா ணத்தை யணிமினென் றெந்தை கூற
நடந்தனர் நன்றென் றன்னார் நகரியோர்க் குணர்த்தி னரால்

(கு - ரை.) எய்தும்=எழுந்தருள்வார்; "உயர்திணை யீறுபோ லஃறிணை வருதலும், அஃறிணை யீறுபோ லுயர்திணை வருதலும், அருகல் விதியென வறைந்தன ரான்றோர்" என்பது, விதி. அடைந்தருள்=அவர் எழுந்தருளும். அணிமின்=அலங்கரியுங்கள். (8)

அலர்கதிர் ஞாயி றூரு மணிநெடுந் தேர்க்கொ டிஞ்சி
விலகுற வதிற்றுக் காமன் மேலள வொருசா ணிற்பப்
பலர்புகழ் மணிமா டத்துப் பறக்குமொண் கிளியொ ழுங்கில்
இலைசெரு கியப சும்பூந் தோரண மிசைய வார்த்தார்.

(கு - ரை.) அலர்=பரவிய. ஞாயிறு ஊரும்=சூரியமண்டலம் வரைபடரும் அத்தனை உயரமான. கொடிஞ்சி=முகடு. ஒழுங்கில்=தன்மை போல. ஆர்த்தார்=கட்டித் தொங்கவிட்டனர். (9)

இருபத்திரண்டாவது

# சூனியசிங்காதனத்திலிருந்தகதி

## வேறு

பள்ளம்புகு புனல்போனெறி படருஞ்சிவ னடியார்
உள்ளம்புகு மருணந்தியிவ் வுலகோரறி யாமல்
கள்ளங்கொளு மனமோடுசெய் யணைமேலொரு கருணை
வெள்ளங்கடி தேறுஞ்செயல் விருப்பாலெடுத் துரைப்பாம்.

(கு - ரை.) "பள்ளங் கண்டு வருபுனல்போற் பலிகொண் டில்லின் புறம்போந்தார்" எனத் திருவிளையாடற் புராணமும்; "பள்ளத்துப் பாயு நன்னீ ரனையவர்" எனக் கம்பரும் உரைத்த லறிக. நெறிபடரும்=நன்னெறியில் ஒழுகும். கருணைவெள்ளமான அல்லமனென்க. (1)

சிரனாடுறு கயலாடல்செய் செந்நாடுடை யுழவர்
அரனாடுறு மொருகாவிரி யறனாடுறு முறைபோல்
பரனாடுறு மடியார்வினை பரியத்திரி குரவன்
வரனாடுறு முருகும்பர வசவன்புறு வசவன்.

(கு - ரை.) சிரல்நாடுறு = சிச்சிலிக்குருவி தேடும். கயல் ஆடல் செய் = கயற்கெண்டைகள் விளையாடும் வயல். அரன்நாடுறும் = சிவபிரான் விரும்பும். அறல்நாடுறும்=நீரை எதிர்நோக்கும். பரன்=சிவபரன். பரிய=அகல. வரல்=வருகையை. பரவசமாம்படி உருகும் அன்புறு வசவன் அல்லமன் வருகையை எதிர்நோக்கு மென்க. (2)

பொன்னணமை கதிர்வீசணை புரிந்தீரறு பருவம்
பின்னயின யான்செய்தொழில் பிள்ளைத்தொழி லாயிற்
றெந்நாள்வரு மெனையாளுடை யெம்மானறி யேனென்
றுன்னவரு துயரோடுள முளைந்தான்வினை களைந்தான்.

(கு - ரை.) கதிர்வீசு அணை=ஒளிவிடும் சிங்காதனம். புரிந்து=செய்து. ஈராறுபருவம்=12 மாதம். பின்னயின=கழிந்தன. (3)

இவ்வாறமர் நாளோர்பக லெமையாளுடை வசவன்
செவ்வாறுசென் மனத்தல்லம தேவன்வர ரேன்றிற்
றவ்வாறது நிகழ்வுற்றவ னார்வந்தனை யொருநான்
எவ்வாறுரை செய்வன்பணி யிறையுஞ்சொல வரிதால்.

(கு - ரை.) செவ்வாறுசெல் = செம்மைநெறியில்செல்லும். நிகழ்வுற்றவன்=நேரப்பெற்ற வசவண்ணரது. பணியிறை=ஆதிசேடன். இறையும்=ஒரு சிறிதும். வசவண்ணர்மனதில் அல்லமர்வருகை தோற்றமாயதென்க. (4)

வலமாடின விழிதோளருள் வசவற்கதி தூரம்
செனுமாடவன் வருநாள்விழி யிடமாடிய செயல்வாய்
குலமாதுள மெனவேமகிழ் கொண்டன்பு நிறைந்து
மலமாயைக டுரக்குஞ்சென் னவசவற்கிது புகல்வான்.

(கு - ரை.) வசவண்ணர்க்கு வலதுகண்ணும் தோளும் துடித்தன என்க. ஆடவன்=கணவன். வாய்=வாய்த்த. துரக்கும்=ஓட்டும். வசவண்ணர் சென்னவசவ தேவருக்கு இது புகல்வார் என்க. (5)

## வேறு

நற்குறி பலவு மிற்றை நாணிகழ் கின்ற வென்பால்
வற்கலை முனிவர் போற்றும் வசவவந் நிகழ்ச்சி யானும்
பிற்பெறு பயன்யா தென்று பெருந்தகை வினவ நின்ற
சிற்பர முணர்ந்த சென்ன வசவதே சிகனு ரைப்பான்.

(கு - ரை.) குறி=சகுனம். வற்கலை=மரவுரி. வசவ=சென்னவசவனே; விளி. நிகழ்ச்சியால் நாம் எனப்பிரிக்க. பெருந்தகை=வசவண்ணர்.

ஐயவிந் நிமித்தந் தன்னு லல்லமன் காண்பை யின்று
மெய்யுரை யிதுகா ணென்னு விடுத்தனன் மருக னெங்கள்
கையுறு மமுத னென்றான் கருதிய படிவிண் ணப்பம்
செய்யவுண் மகிழ்வு பூத்துச் செயல்செய்வார்க் குரைக்க லுற்றான்.

(கு - ரை.) நிமித்தம்=சகுனம். மருகன் விடுத்தனன்=வசவண்ணரது மருமகனான சென்னவசவர் விடை கூறினர். அமுதன் னன்=வசவண்ணர். செயல் செய்வார்க்கு=ஏவலாளர்க்கு. (7)

உடம்பெனும் வனத்தி னின்ற வுயிரெனுங் கன்னி தன்னைத்
தொடர்ந்திசை மணத்தாற் சேர்ந்த துணைவனல் லமனின் றெய்தும்
அடைந்தருள் கல்யா ணத்தை யணியினென் றெந்தை கூற
நடந்தனர் நன்றென் றன்னார் நகர்யோர்க் குணர்த்தி னரால்

(கு - ரை.) எய்தும்=எழுந்தருள்வார்; "உயர்திணை யீறுபோ லஃறிணை வருதலும், அஃறிணை யீறுபோ லுயர்திணை வருதலும், அருகல் விதியென வறைந்தன ரான்றோர்" என்பது, விதி. அடைந்தருள்=அவர் எழுந்தருளும். அணியின்=அலங்கரியுங்கள். (8)

அலர்கதிர் ஞாயி றூரு மணிநெடுந் தேர்க்கொ டிஞ்சி
விலகுற வதிற்றுக் காமன் மேலள வொருசா ணிற்பப்
பலர்புகழ் மணிமா டத்துப் பறக்குமொண் கிளியொ ழுங்கில்
இலைசெரு கியப சும்பூந் தோரண மிசைய வார்த்தார்.

(கு - ரை.) அலர்=பரவிய. ஞாயிறு ஊரும்=சூரியமண்டலம் வரை படரும் அத்தனை உயரமான. கொடிஞ்சி=முகடு. ஒழுங்கில்=தன்மை போல. ஆர்த்தார்=கட்டித் தொங்கவிட்டனர். (9)

போதகக் குருநம் மூருட் புகக்கொடி கட்ட னன்றென்
றூதர வொடும சைத்தா ரவிர்கொடி மாடத் தும்பர்
சோதிதன் னிரத மென்றுஞ் சுழன்மென நகுதல் போல
வீதியு ளாடி யோடு விளங்குறு நிலைத்தேர் செய்தார்.

(கு - ரை.) மாடத்தும்பர்=மாளிகைமேல். அசைத்தார்=கட்டினர். சோதிதன்னிரதம்=சூரிய ரதம். சுழலும் என்பது உகரங் கெட்டு லகரம் னகரமாகத்திரிந்து சுழன்ம் என ஈற்று மகரக்குறுக்கமாயிற்று. நகுதல்=பரிகசித்தல். சூரியரதம் நிலையின்றிச் சுழலலால் வீதியில் நிலைத்தேர் அமைத்தனர் என்க. (10)

குங்கும நறிய சந்தங் குழைத்ததண் பனிநீர் சிந்திப்
பொங்கெழின் மறுக னைத்தும் புதைசெழுஞ் சேறு செய்தார்
மங்கல மனைமுன் பந்தர் மணப்பந்த ருண்மை யாகக்
கொங்கவி ழிதழ்ந றும்பூங் கோதைக டூக்கி னூரால்.

(கு - ரை.) நறியசந்தம்=மணமுடைய சந்தனம். மறுகு=வீதிகள். புதை=கால் புதையத்தக்க. மனைமுன்பந்தர்=தலைவாயிலிலுள்ள பந்தலில். மணப்பந்தர்=கலியாணப் பந்தலைப்போல. கொங்கு=மணம். கோதைகள்=மாலைகளை. (11)

வயலிடஞ் சேர்ந்து நின்ற வாழையுங் கரும்பும் பாளை
உயரிளங் கமுகு மொன்றோ டொன்றுநின் றுசாவித் தாமெல்
லியரருந் தொடைதோள் கண்ட மெனுமுறுப் பழகி ரக்கும்
செயலில்வந் தடைந்த வென்னச் செழுங்கடைத் தலைமு னூர்த்தார்.

(கு - ரை.) சேர்ந்து = நெருங்கி. உசாவி=கலந்து பேசி. இது நிரல்நிறைப் பண்புருவகவணி. மெல்லியர்=மாதர்களின். கடைத்தலை=தலைவாயிலின்கண். ஆர்த்தார்=கட்டினர். (12)

இலையினாற் பொலிந்த வாழை தொடையினை லெய்தும் பேறு
முலையினாற் பெறுவ மென்று முன்னிவந் திருத்தல் போலக்
கலையினாற் சிறந்த வல்குற் கயற்கணார் நிறைகு டங்கள்
விலையினாற் சிறந்த செம்பொன் வேதிகை மீது வைத்தார்.

(கு - ரை.) கலை=ஆடை. தொடையென உவமித்து புகழப்படும் பயனை வாழை அடைதல்போல, முலையென உவமித்துப் புகழப்படும் பயனை யாம் அடைவேம் என வந்ததுபோல் நிறைகுடம் பரப்பினர் என்க; இது உருவகவுவமம். (13)

மனத்திரு ளகற்றி நின்ற மணிச்சுடர் வரவு பார்ப்ப
நினைத்துவந் திருத்தல் போல நெடுமணிக் கதவு வாய்தன்
முனைத்திரு விளக்கு வைத்தார் முகிழ்முலைக் கருநெ டுங்கண்
தனிச்சிலை நுதற்பூங் கோதைச் சரிகுழற் றளிர்க்கை நல்லார்.

(கு - ரை.) மணிச்சுடர்=அழகிய தீபம்போன்ற அல்லமனது. முனை=முன்னிடத்தில். முகிழ்=அரும்பு போன்ற, குவிந்த. தனிச்சிலை= ஒப்பற்ற வில்போன்ற. சரி=சரிந்த. (14)

அல்லம குரவன் றன்னை யருணந்தி யோடு காணச்
செல்லுவ மென்று செம்பொற் சீர்கெழு விமானத் தோடும்
ஒல்லையி னிலத்தி ழிந்த வும்பர்வாழ் மகளிர் போல
இல்லெனு மருங்குன் மாத ரிருந்தனர் நிலைத்தே ரேறி.

(கு - ரை.) ஒல்லையின்=விரைவில். நிலத்திழிந்த உம்பர்வாழ் மகளிர்போல=நிலவுலகில் வந்த தேவலோகப் பெண்கள் போன்று. இல்லெனும்=இல்லையென்று கண்டோர் கூறப்பெறும். (15)

திருநக ரிதனை யின்று திருந்தவே றலங்க ரிப்ப
நெருநலுள் ளனக ழித்து நீத்தவை யமரர் கோமான்
ஒருநக ரலங்க ரித்தற் குரியனா வென்னி னந்தி
பெருநக ரணியின் மிக்க பெருமையார் கூற வல்லார்.

(கு - ரை.) நெருநலுள்ளனகழித்தன நீத்தவை=நேற்று அலங்கரித்துள்ளன களைந்து விலக்கிய அவற்றை. (16)

இன்னண மலங்க ரித்த வெழின்மணி மறுகி னூடு
மன்னவர் மன்ன னுய்ய மந்திரக் கிழமை பூண்டோன்
தன்னொரு குரவன் றன்னைத் தானெதிர் கொள்ள வேண்டிப்
பொன்னவிர் கோயி லின்றும் புறப்படாப் போத லுற்றான்.

(கு - ரை.) மன்னவர்மன்னன்=அரசர்க்கரசனான விச்சலராஜன். தன்ஒரு = தனது ஒப்பற்ற. மந்திரிக்கிழமைபூண்டோன் = மந்திரித் தொழிற்கு உரிமைபூண்ட வசவண்ணர். புறப்படா=புறப்பட்டு. (17)

பதியுமப் பதியாற் காணும் பசுவுமப் பசுவின் ஞானம்
பொதியுமைம் பாசந் தானும் பொருளென வழக்கிற் கூறும்
விதியுமப் பாசம் பொய்யாய் வேறறும் வீடு மோதி
மதிமயக் கறுத்த சென்ன வசவனு மருங்கு சென்றான்.

(கு - ரை.) காணும்=விளங்கும். ஐம்பாசம்=ஆணவம், கன்மம், மாயை மாயேயம், திரோதாயி; மாயேயத்தை, வைந்தவம் எனவும் கூறுவர். வழக்கிற்கூறும்=வழக்கிடுகின்ற. விதியும்=நியமங்களும். வேறறும் வீடும்=பேதபாவமற்ற முத்தியையும். (18)

எம்மடி மாசு முக்க ணிறையவ னடிமை பூண்டோர்
தம்மடி மாசு நீக்குந் தன்றொழி னெறிவ ழாத
செம்மடி வால மாச்ச தேவனு மன்பு தாயின்
மும்மடி யாகு நந்தி முதல்வனோ டருகு சென்றான்.

(கு - ரை.) எம்அடிமாசும்=எமது மூல அஞ்ஞானமும். செம்= செம்மையான. மடிமாசும்=வஸ்திர அழுக்கையும். (19)

சங்கரன் சடையிற் பாம்புந் தவழ்ந்தெதிர் கிடந்த பிள்ளைத்
திங்களுஞ் செய்த வொப்பச் செங்கைமா னவச மாகக்
கங்கையுந் திரைய டங்கக் கானமுன் பாடி யீச
கிங்கரன் றனது பாங்கர் கின்னரப் பிரமன் சென்றான்.

(கு-ரை.) பிள்ளைத் திங்களும் = இளமைச் சந்திரனும். செய்த ஒப்ப=செய்ததுபோலும் இருக்கின்ற. அவசமாக=பரவசப்பட. கானம்= இசை. ஈசகிங்கரன்=ஒருவகை அடியார் குலத்தான். (20)

தண்டினர் கரகக் கையர் சடையருந் தூள னத்தர்
புண்டர நுதலர் கற்றோய் பூந்துகி லுடையர் நீலை
கண்டனை யகம்பு றத்துங் கண்டவர் வினையி னீங்கித்
தொண்டுறு நெறியி னின்றோர் சூழ்ந்தன ரெண்ணி லாரே.

(கு-ரை.) தண்டினர்=திரிதண்ட முடையவர்களும். கரகம்= கமண்டலம். உத்தூளனத்தர்=மேனி முழுதும் நீறு பூசியோரும். புண்டர நுதலர்=திரிபுண்டரமணிந்த நெற்றியினரும். திரிபுண்டரம் = மூன்று இரேகையாக நீறணிந்த குறி. கல்தோய் பூந்துகில் உடையர் = கல்காவி தோய்த்த மெல்லிய நூலுடையினரும். (21)

தோள்வலந் துடித்த தின்று சுடரிலை வேற்ப ணென்று
கோள்வலங் கொள்ளுஞ் செம்பொற் குன்றெனு மார்பிற் காண்பேம்
வேள்வலங் கொண்ட நெற்றி விழியிறை யருளா லென்னும்
வாள்வலங் கொண்ட சேனை மறவர்வா ரிதிபோற் சூழ்ந்தார்.

(கு-ரை.) வேல்புண் = வேல்பட்ட புண். கோள் = சூரியன்; நவக்கிரகங்களும் ஆம். குன்று=மேரு. வேள்வலம் கொண்ட=காமன் வலிமைகவர்ந்த. மறவர்=வீரர். வாரிதி=கடல். பிறர்மார்பிலென்க. (22)

எங்கள்வாழ் வனைய நந்தி யெழுந்தருண் மறுகி னூடு
மங்குல்வா னிரவிப் புத்தேண் மணிநெடுந் தேர்ப்பைங் கிள்ளை
தங்கள்காற் றாட்கு டைந்து தரிப்பரி தாகி யோட
அங்கண்மா ஞால மெல்லா மதிர்தர நடந்த வம்மா.

(கு-ரை.) மங்குல் = மேகத்தையுடைய. இரவிப்புத்தேள்=சூரியன். பைங்கிள்ளைதங்கள்=பசும் புரவிகளுடைய. கால்தாட்குஉடைந்து= கால்களினின்றெழுந் தூசிக்கு மெலிந்து. (23)

அரவொடு மஞ்சு மக்கு மடுகளி றெட்டோ டும்போர்
பொரவொரு களிநல் யானை போதுமென் றெண்ணி லாத
இரவொடு புரைநி றத்த வீர்ங்கவுட் சிறுகட் டூங்கு
கரவளை வெண்ம ருப்புக் கடாக்களி றெழுந்த வன்றே.

(கு-ரை.) இரவொடுபுரை=இரவுக்கு ஒப்பான. தூங்குகரம்= தொங்குந் துதிக்கை. வளைவெண்மருப்பு=வளைந்த வெள்ளைத் தந்தங்கள்.

அரவு எட்டாவன:—வாசுகி, அநந்தன், தக்ஷன், சங்கன், குளிகன், பதுமன், கார்க்கோடகன், மகாபதுமன் என்பன. களிறு எட்டாவன:—ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புட்பதந்தம், சார்வபௌமம், சுப்பிரதீபம் என்பன. (24)

ஆனைமேற் கொண்டும் வாவு மாடல்வெம் பரியி வர்ந்தும்
கூனல்வேய் தொடுத்து ஞான்ற குச்சுடைச் சிவிகை யூர்ந்தும்
சேனைகா வலரெண் ணில்லார் சிலைமகன் கோல மென்ன
மானவேன் மன்னர் மன்னன் மந்திரி மருங்கு சென்றார்.

(கு - ரை.) மேற்கொண்டும் = எறியும். வாவும் = தாவிப்பாயும். ஆடுதல்=பரதநாட்டியம் புரியும். வெம்பரி யிவர்ந்தும்=வேகமாகச் செல்லும் குதிரைகள்மேலேறியும். ஞான்ற=தொங்குகின்ற. (25)

நலங்கிளர் மதன்கு டைக்கு நகைமணிக் காம்பி லென்ன
இலங்குறு பசும்பொற் காம்போ டெண்ணில்வெண் குடையெ ழுந்த
புலன்களை வென்ற வீரன் போகிய மறுகி லெங்கும்
விலங்கினை யன்றி யந்த விலங்கின்வா லாடிற் றன்றே.

(கு - ரை.) காம்புஇல் = காம்பு இல்லை. வீரன்=வசவண்ணர். போகிய மறுகில்=சென்ற வீதியில். விலங்கே நினைந்தாலன்றி அதன் வால் பிறர் முயல்வால் ஆடாமையைப்போல, வசவண்ணரே புறப்படினன்றி இத்துணைக் குடைஎழுச்சி இல்லை என்றபடி. (26)

மாயைதன் றேல்வி யெல்லா மாதர்க்கும் வந்த வன்றே
நாயகன் றன்னைப் பற்றி நாம்வென்றி கொள்வ மென்று
போயுறு தன்மை போலப் புணர்முலைக் கருநெ டுங்கண்
தேயுநுண் மருங்குன் மாதர் திரள்பல வெழுந்த வன்றே.

(கு - ரை.) நாயகன்தன்னை = அல்லமனை. போயுறு=செல்லும். புணர்முலை="ஈர்க்கிடைபோகா விளமுலை" என்பதுபோல நின்றது. (27)

பரிகளின் முழக்கு மிக்க பல்லிய முழக்கும் பூட்கைக்
கரிகளின் முழக்கும் வீரக் கழலொடு செல்லும் வெங்கோள்
அரிகளின் முழக்கு மாத ரணிகளின் முழக்குஞ் செங்கைச்
சரிகளின் முழக்கும் விம்மித் தடங்கடல் போன்ற வன்றே.

(கு - ரை.) இயங்கள் = வாத்தியங்கள். பூட்கை = துளைக்கை; துதிக்கை. வெங்கோள் அரி=கொடிய வலிமை கொண்ட சிங்கங்கள் என வீரர்களை உணர்த்திற்று. சரிகளின்=வளையல்களின். (28)

ஆடுவ கவரி யெங்கு மசைவன சிவிறி யெங்கும்
மூடுவ குடைக ளெங்கு முழங்குவ வியங்க ளெங்கும்
பாடுவ விசைக ளெங்கும் பாய்வன கரிக ளெங்கும்
ஓடுவ புரவி யெங்கு முயர்வன தூளி யெங்கும்.

(கு - ரை.) கவரி=வெண்சாமரைகள். ஒலிறி=விசிறி. அளி=புழுதி. உயர்வன=மேலோக்கிச் செல்கின்றன. (29)

கரிகல மசையா நின்ற கவரிக ளுரைகள் மொக்குள்
விரிகுடை மதுகை வீரர் விதிர்க்கும்வா ளுகண்மீன் பாயும்
பரிதிரை முழக்க மார்க்கும் பல்லிய முழக்க மாகப்
பொருகட லெனவெ ழுந்து போயது வசவன் சேனை.

(கு - ரை.) யானைகள் கப்பலாகவும், சாமரைகள் நுரைகளாகவும், விரிகுடை குமிழிகளாகவும், வாள்களின் அசைவுகள் மீன்களாகவும், பாயும் குதிரைகள் அலைகளாகவும், ஆர்க்கும் வாத்தியங்கள் முழக்கமாகவும், மோதும் கடலை ஒத்து இருந்தது வசவண்ணர் சேனை எழுச்சி என்க. இது இயைபு உருவகவணி. கவரி=வெண்சாமரை. மொக்குள்=குமிழி. மதுகை=வலி. விதிர்க்கும்=அசைக்கும். உகளல்=துள்ளல். (30)

## வேறு

இன்ன வாறெழுந் திரளொடு நந்திஎம் பெருமான்
தன்னை நேர்குரு பரனெதிர் சென்றவன் றாளைச்
சென்னி யால்வணங் குவனெனு மோகையாற் சென்றான்
துன்னும் வானவர் தொகுதியும் வியப்பொடு துதிப்ப.

(கு - ரை.) திரளொடு=பரிவாரங்களுடன். சென்று அவன் தாளை யெனப் பிரிக்க. ஓகையால்=மகிழ்ச்சியால். நேர்=ஒத்த. (31)

அத்தி றஞ்செலுஞ் செலவினை யகங்குருட் டமணர்
புத்தர் கண்டிவ ரென்கொலோ வறிதெதிர் போதல்
பித்த னென்றுதம் மிறைவனைச் சொல்லுமிப் பேயர்
எத்தி றஞ்செயா ரெனச்சிவ சரணரை யிகழ்ந்தார்.

(கு - ரை.) அகம்குருடு=குருட்டு மனம்: அறிவில்லா மனம். அமணர்=சமணர். வறிது=பயனின்றி. சிவசரணரை=சிவனடியாரை. (32)

மன்னன் விச்சலன் பாலடைந் தருகரொம் மன்று
சின்ன கர்க்கொரு புதுமைபொன் றுற்றது நீகேள்
நன்னி மித்தமொன் றெய்திய தேகொடு நந்தி
தன்னி டத்தொரு வன்வரு மென்றெதிர் சாரும்.

(கு - ரை) பால்=இடத்தில். நல்நிமித்தம் ஒன்று எனப் பிரிக்க. எய்தியதே கொடு=சேர்ந்ததையே ஆதாரமாகக்கொண்டு. (33)

தண்ட நாயகன் றொள்வலந் துடித்தது தன்னைக்
கொண்டு தான்வருங் குருபர னென்றெதிர் கோடல்
கண்ட வோர்கள விற்பெறு மடிசிலைக் கருதி
உண்டு போம்விருந் தினர்தமைத் தேடுத லொக்கும்.

(கு - ரை.) குருபான் வருமென்று தான் எதிர்கோடல் என்றியைக்க; எதிர்கோடல்=எதிர்கொள்ளச் செல்லுதல். அடிசிலை=உணவை. (34)

ஒருவன் வந்திடு மெனவெதிர் கடற்படை யொருங்கு
பரவி வந்திடச் செலுமிவன் றன்னைநீ பார்த்துப்
பொருவின் மந்திரக் கிழமைநல் கியவுனைப் போல்வார்
அரவின் வன்றலைப் படிமிசை யிலையென வறைந்தார்.

(கு - ரை.) படிமிசை = பூமியில். கடற்படை = கடல்போன்ற சேனைகள். ஒருங்கு=ஒருமிக்க. பொருவில்=ஒப்பில்லாத. (35)

அருகர் வாசகங் கேட்டலு முளம்வியந் தடிகேள்
விரகி னான்மிகு தண்டநா யகனுமெவ் விளைவு
கருதி னான்கொலோ வறிகில முடிவுறக் காண்பம்
வருக நீரிரு மின்களென் றிருந்தனன் மன்னன்.

(கு - ரை.) அடிகேள்=சுவாமிகளே. விரகு=ஆலோசனை. முடிவுற=இறுதிவரை. வருக=வசவண்ணர் இங்கு வரட்டும். (36)

தண்ட நாயகன் றனதுளந் தங்குறத் தானத்
தண்ட நாயகன் றன்மனந் தங்கிய தலைவன்
தண்ட நாயகன் றனையிகழ் சமண்செருக் கழியத்
தண்ட நாயக னெதிர்செல நினைந்தனன் றனித்து.

(கு - ரை.) தலைவன்=அல்லமன். தண்டநாயகன்றனை=வசவண்ணரை தண்டநாயகன் எதிர் தனித்துச்செல நினைந்தனனென்க. (37)

என்னைக் காண்குவ னெவ்வகை செல்லினு மென்றும்
துன்னற் கோவண மொடுவிரி குஞ்சியுந் தோன்றத்
தன்னைக் காண்குநர் பித்தனென் றெள்ளவென் றனக்குப்
பொன்னைப் போலுநல் வசவனா யகனெதிர் போனான்.

(கு - ரை.) துன்னல்=ஊசிகொண்டு தைத்துள்ள. விரிகுஞ்சியும் =அவிழ்ந்த குடுமியும்.எள்ள=பரிகசிக்க. (38)

## வேறு

மருவிநின் றவரிவன் மருள னேயென
விரைவிலிங் ககலக லெனவி லக்கினார்
ஒருவருங் கண்டிறை யுருவு ணர்ந்திலர்
உருவுகண் டெள்ளுந ருணர வல்லரோ.

(கு - ரை.) மருவி=சூழ்ந்து. மருளனே=பித்தனே. அகல் அகல் என்னும் அடுக்கு வெகுளிப்பொருளது. எள்ளுநர்=இகழ்பவர். (39)

அல்லம னாயிடை யாட லுன்னியே
பல்லெழு வாயுடைப் பால னாகுவன்

கொல்லிள வேறெனக் குமர னுருவன்
வில்லென வுடல்வளை விருத்த னுருவன்.

(கு - ரை.) ஆடல் = திருவிளையாட்டு. பல் எழும் = பல் முளைக்கும். இள ஏறு=இளஞ்சிங்கம். விருத்தன்=வயோதிகன். (40)

விஞ்சையர் மகிழ்வுற வீணை யொன்றுகைக்
கஞ்சமென் மலர்கொடு கானம் பாடுவன்
அஞ்சன விழிமணி யரிச்சி லம்படி
வஞ்சியர் மனமயல் வளர வாடுவன்.

(கு - ரை.) விஞ்சையர்=கந்தருவர். கஞ்சம்=தாமரை. கானம்= இசை. அஞ்சனவிழி=மைபூசிய கண்கள். ஆடுவனென்க. (41)

இந்திர னிவனென யானை மேற்கொளா
வந்தொரு புடைநரர் மருளத் தோன்றுவன்
பைந்தொடி பெயர்தரு பாணி போலவே
பந்திமுன் முடங்குளைப் பரிந டத்துவன்.

(கு - ரை.) கொளா=கொண்டு. நரர் = மனிதர்கள். பாணி = நடனம்: காலமுமாம். பந்தி=குதிரைப்படை தங்குமிடம்; லாயம். முடங்கு உளைப்பரி=மடங்கிய பிடரிமயிரையுடைய குதிரை. (42)

வானிடைக் கண்டனன் மனையிற் கண்டனன்
சேனையுட் கண்டனன் றெருவிற் கண்டனன்
யானெனக் கடிநக ரெங்குந் தோன்றுவன்
ஞானநற் கண்ணினுற் காணு நம்பனே.

(கு - ரை.) வானிடை=விண்ணில். யான் என்பதை வானிடை மனையிடை சேனையுள் தெருவில் என்றவிடமெலாம் கூட்டிப் பொருளறிக. இது, ஊர்மக்கள் பேச்சு. கடிநகர்=காவலமைந்த நகரம். (43)

ஆடுநர் தம்முட னாடு நல்லிசை
பாடுநர் தம்முடன் பாடு மென்மலர்
சூடுநர் தம்முடன் சூடும் வாள்விதிர்த்
தோடுநர் தம்முட னோடு மல்லமன்.

(கு - ரை.) ஆடுவாருடனாடியும் பாடுவாருடன் பாடியும் மலர் சூடுவாருடன் சூடியும் வாள்விதிர்த்து ஓடுவாருடன் ஓடியும், அல்லமர் விளையாடினரென்க. (44)

பொருவிலா வளநகர் பொருந்து மானிடர்
வரைவிலா வாடலிவ் வகைசெய் கிற்பவர்
ஒருவரோ பலர்கொலோ வுணர்கி லோமென
வெருவினா ரல்லமன் விநோத நோக்கியே.

(கு - ரை.) பொருந்தும்=வசிக்கும். வரைவிலா ஆடல்=அளவிலாத திருவிளையாடலை. அல்லமன் விநோதம்நோக்கி வெருவினரென்க.

மண்ணிடை மறைவுறு நிதிய வைப்பினைக்
கண்ணிடு மஞ்சனக் காரன் காண்கைபோல்
நண்ணிடு முணர்வுடை நந்தி யெம்பிரான்
அண்ணலை யறிந்தன னைய மின்றியே.

(கு - ரை.) நிதியவைப்பினை=பொன் புதையலை. கண்ணிடு=கண்ணில்பூசிய. அஞ்சனக்காரன்=மையுடையவன். (46)

உடம்பெலா முள்ளமா யுருகிக் கண்கணீர்
அடங்குறு தொழுகமெய் விதிர்ப்ப வன்பினல்
தொடர்ந்தெலா வுயிரையுந் தொண்டு கொண்டருள்
நெடுந்தகா யருளென நிலத்தி றைஞ்சினன்.

(கு - ரை.) உருகி=நெக்குருகி அடங்குறுதொழுக = தடைக்கு அடங்காமல் பெருக. விதிர்ப்ப=நடுங்க. அருள் நெடுந்தகாய்=கருணை பெருகும் தகுதியுடையவனே. அருள்=கருணைசெய். (47)

தண்டநா யகனிலந் தண்டிற் றாழ்ந்தெழத்
தொண்டரா யவனொடு துன்னி னரெலாம்
கண்டுநீர் விழியுகக் கசிந்த வன்பினல்
அண்டநா யகன்றிரு வடியி றைஞ்சினர்.

(கு - ரை.) நிலம்=பூமியில். தண்டில்=தண்டாகாரமாக. தாழ்ந்தெழ=வணங்கி யெழ. துன்னினர்=நெருங்கி யிருந்தவர். (48)

நந்தித னன்பையு நந்தி பால்வரும்
எந்தைதன் னருளையு மென்சொல் வாமெனச்
சிந்தினர் மலர்மழை தேவர் யாவரும்
துந்துமி யதிர்த்தனர் தொண்ட ரார்ப்பவே.

(கு - ரை.) எந்தைதன்=எமது அப்பனான அல்லமருடைய. துந்துமி=துந்துஎன்னும் ஒலியுடையதொரு தெய்வ வாத்தியம். (49)

மயலிலா நங்குரு வசவன் வாழ்தரும்
இயலினு லல்லம னெண்ணி வந்தருள்
செயலினு லடியவர் திரள்க ளித்தலால்
கயிலையே வளங்கெழு கல்லி யாணமே.

(கு - ரை.) மயலிலா=மயக்கம் இல்லாத. இயலினல்=தன்மையால். வசவண்ணர் வாழும் இயல்பினலும், அல்லமர் வரும் செயலினலும் கல்லியாணபுரம் கயிலையேயாயதென்க. (50)

தெரியநற் றண்டநா யகன்றன் செய்கையும்
பெரியவக் குருபரன் பெருமை தன்னையும்

கரியமெய்ச் சமணர்தாங் கண்டு மன்பிலர்
அரியவற் றரிதழுக் காறு வெல்வதே.

(கு-ரை.) தெரியத்தாம் கண்டும் என்றியைக்க. தெரிய=பிரத்தியக்கமாகவிளங்க. கரிய=கருமையான. அழுக்காறு=பொறாமை. (51)

தந்திர முடிவெனுஞ் சைவ தேசிகன்
வந்தெதிர் தனதுதாள் வணங்கி னாரொடு
செந்திரு மகளுலாந் தெருவுட் போகியே
நந்திதன் மந்திர நணுகி னனரோ.

(கு-ரை.) தந்திரம் = ஆகமம். இது தத்துவ நுட்பங்களையும், மந்திரங்கள் பலவற்றையும் தன்னிற்கொண்டது. முடிவு = முடிந்த பொருளை விளக்குவது. தேசிகன்=அல்லமன். (52)

தேவரு முனிவருஞ் சித்த ராகிய
யாவரு மிதணிய லின்ன தென்றுளத்
தாய்வரு நிலையுடை யம்ப ராதனம்
மூவரு மடிதொழு முதல்வ னேக்கினன்.

(கு-ரை.) இயல்=இயல்பு. ஆய்வு அரு=ஆய்வதற்கரிய. நிலையுடைய=எழுநிலைகளை யுடைய. முதல்வன்=அல்லமன். (53)

அசைவறு மறிவுரு வாகு மல்லமன்
திசையுறு மணியணைச் சென்னி மீமிசை
வசையறு வழிநடை வசவ தேசிகன்
இசையம ருலகிடை யேற வேறினன்.

(கு-ரை.) வழிநடை=வழியில் ஒழுகும். இசை=புகழ். அமர் உலகிடை=பொருந்திய உலகில். ஏற=மிகவும் பரவ. (54)

கூறரு மொளியுடைக் குதிரைத் தேரினன்
வேறொரு மணிமய வெற்பி வர்ந்தெனத்
தேறரு மணைமிசை தேசி கோத்தமன்
ஏறலு மலர்மழை யிழிந்த வென்பவே.

(கு-ரை.) கூறரும்=உரைத்தற்கரிய. தேரினன் = தேருடைய சூரியன். தேறரும்=தெளிதற்கரிய. இவர்ந்தென=ஏறியதுபோல. (55)

முரசொடு பல்லிய முழக்கெ ழுந்தன
துரிசறு மடியவர் தொகுதி கைகுவித்
தரகர வெனுமொலி யண்ட கூடமட்
டொருகண மொடுங்குமுன் னேடிற் றென்பவே.

(கு-ரை.) துரிசறு = குற்றமற்ற. அரஹர எனும் ஓசை ஒரு கணப்பொழுதிற்குள் அண்டகூடமட்டும் சென்றதென்க. (56)

## வேறு

முதனிலை முதலா மூவிரு நிலையின் மூலமா முதலவா தார [று
இதழவிழ் கமலப் பொகுட்டினு ணின்ற விலிங்கமோ ராறெனை நின்
றுதன்மிசை யிலகு நிட்களம் போல நுவன்றவே ழாநிலை யாகும்
அதன்மிசை யமல னல்லம தேவ னமர்ந்தன னமரரும் வியப்ப.

(கு - ரை.) முதல்நிலை முதலா மூவிரு நிலையின்=பகுதி, விகுதி, இடைநிலை, சாரியை, சந்தி, விகாரம்போன்ற. மூலாதாரம் முதலான ஆறு ஆதாரங்கள் என்க; பிறவும் பொருந்தாக் கூறுவர். (57)

உடம்பொடு பொறிநாற் கரணமற் றுயிரென் றுரைத்திடப் படு
முபா திகளைக், கடந்துள நிலையிற் சோதியா யிலங்கக் கண்டிடு துரி
யனைப் போல, நெடுந்தவி சமைய வமைத்தசெம் மணிப்பொன்
னிலைகளோ ரேழையுங் கடவா, இடந்தனி விசும்பென் றல்லம
னிருப்ப விருந்தவர் யாவருங் கண்டார்.

(கு - ரை.) உபாதி=அவஸ்தை. துரியன்=துரிய நிலையைத் தரிசித்தவன். தனிவிசும்புஎன்று=ஞானாகாயம் என்று. (58)

ஆடினர் சிலவ ரங்கைகள் கொட்டி யல்லமன் பெரியதோர் புக
ழைப், பாடினர் சிலவர் விழிபொழி வெள்ளம் பாய்வுறக் குவித்
தகை தலைமேல், சூடினர் சிலவர் நிலமிசை வீழ்ந்து தொழுதனர்
சிலவர்மெய்ப் புளகம், மூடினர் சிலவர் பரவினர் சிலவர் முக்கணு
னடியவ ரன்றே.

(கு - ரை.) அங்கைகள்=அழகிய கைகள். புளகம்=புளகாங்கிதம். பாய்வுற=பாய. மூடினர்=போர்த்தனர். (59)

இந்தியம் விடயங் கரணமெய் யென்னு மியாவையுங் காண்கில
னெங்கும், அந்தர வணுமே லிவர்ந்திருந் தருளு மண்ணலைக் கண்ட
வப் பொழுதே, முந்திய பரமா நந்தவா ரிதியுண் மூழ்கின னழுந்
தின னம்மா, தந்திர மெவற்றுஞ் சிறந்தது சைவ தந்திர மெனுமரு
ணந்தி.

(கு - ரை.) இந்தியம்=ஞானேந்திரியம் ஐந்தும் கன்மேந்திரியம் ஐந்தும் ஆம். விடையம்=சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்பன. கரணம்=மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்பன. மெய் = உடல். தந்திரம்=நூல்: சாத்திரம். சைவதந்திரம்=காமிக முதல் வாதுள மீறாகவுள்ள சிவாகமங்கள் இருபத்தெட்டுமாம். இவை சிவத்தைத் தியா

ணித்தல், பூசித்தல், பிரதிஷ்டித்தல் ஆதியவற்றைத் தெளிவுறக் கூறுவன. ஆகலின்; சிறந்ததாயின என்க. எனும்=என்று கூறும். (60)

மண்டல மவத்தை குணமபி மான மலமிவை யனைத்தையுங் கடந்துள், கண்டிடும் வண்ணம் புறத்துநீ யெம்மைக் காணிய வமைத்தவிச் செய்கை, வெண்டிரை சுருட்டுங் கருங்கட லுலகில் வேறுளர் செய்வதன் றென்று, தொண்டர்க டுதிக்கும் வசவனைத் துதித்தான் சுரரெலாந் துதிக்குமெம் பெருமான்.

(கு - ரை.) மண்டலம் = பரிதி, மதி, அக்கினி முதலிய மண்டலங்கள். அவத்தை=கீழாலவத்தை, மேலாலவத்தை என்பன. மலம்=ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதானம் எனும் ஐந்து. உள் கண்டிடல்=அகத்தில் அறிதல். காணிய=எம்மைக் காண்பதன் பொருட்டு. அமைத்த=(சூனிய சிங்காதனம்) செய்த. வெண்திரை=வெண்மையான அலைகளையுடைய. கருமையான கடல் சூழ்ந்த உலகத்தில் என்க. வேறுளர்=(உன்னையன்றிப்) பிறர். துதித்தான்=புகழ்ந்தான். (61)

உன்னருளுளதேற் கமலன்மா றொழிலு மொருசிறு துரும்பு செய்கிற்கும், என்னநல் வசவன் புகன்றுகை கூப்பி யிணைவிழி புனலுக வுருகித், தன்னுணர் கிலனாய் வசமற நிற்பத் தண்கதிர்ச் செம்மணி குயின்ற, பொன்னரி யணைமேல் விசும்புற விருந்தான் புல்லரு மல்லம தேவன்.

(கு - ரை.) உன் அருள் உளதேல்=தேவரீர் திருவருள் உளதாயின். கமலன்=பிரமன். மால்=திருமால். தொழிலும்=படைத்தல் காத்தலாதிய தொழில்களும். செய்கிற்கும்=செய்யும். தன்னுணர்கிலனாய்=தன்னை மறந்தவனாய். வசமறல்=பரவசப்படல். தண்கதிர் செம்மணி குயின்ற=குளிர்ந்த ஒளி வீசும் சிவந்த ரத்தினங்கள் பதித்த. புல்லரும் அல்லமதேவன் விசும்புற இருந்தான் என்றியைக்க. புல்லரும்=தழுவுதற்கரிய. (62)

இருபத்திரண்டாவது

சூனியசிங்காதனத்திலிருந்தகதி முற்றிற்று.

கதி 22-க்கு திருவிருத்தங்கள் - 1047.

இருபத்துமூன்றாவது

# ஆ ரோ க ணை க தி

## வே று

ஒருவ ருண்ண வொருவர் பசிகெடார்
தரையி லென்னுந் தகுமொழி பொய்த்திட
அருளி னல்லம ஞரும் பசிகெட
விரவி யுண்ட மிகுதி விளம்புவாம்.

(கு - ரை.) கெடார்=நீங்கார். தரையில்=உலகில். தகுமொழி=பழமொழி. ஆரும்=யாவரும். விரவி=கலந்து. (1)

தண்ணந் திங்களிற் றண்ணெனத் தண்கதிர்
வண்ணங் குன்றுறு ஞாயிறு வார்சிலைப்
பண்ணங் குன்றுறு பான்மையி னுதனத்
தெண்ணந் தேவ னிருந்தருள் காலையில்.

(கு - ரை) திங்களில்=சந்திரனைக்காட்டிலும். வண்ணம்=தன்மை. வார்சிலை பண் அம்குன்றுறு=பெரிய கற்களால் சமைந்த அழகிய மலையில் வரும். சந்திரனிலும் குளிர்ந்த சூரியன் உதயகிரியில் உதயமாவதுபோல, சூனிய சிங்காதனத்து அல்லமன் இருந்தானென்க. இஃது இல்பொருளுவமையணி. (2)

வசவ னுள்ளம் வயல்புகு நீரென
விசய னல்லமன் மேனி வடிவமாய்
அசைவி லன்பிறி தொன்று மறிந்திலன்
இசையு மோவிய மென்ன விருந்தனன்.

(கு - ரை.) வயல்புகுநீரென=வயலில் நேராகச் செல்லும் நீரைப்போல. விசயன்=(மாயையை வென்ற) வெற்றியனுன. மேனிவடிவமாய்=உருவத்திருமேனியனுய். ஓவியம்=சித்திரம். (3)

கழும ணித்தவி சென்னுங் கலத்திடை
அழிவ றத்திக ழல்லம னுகிய
செழிய நற்சுதை சென்ன வசவனும்
விழியி னுக்கு விருந்திட் டனனரோ.

(கு - ரை.), கழுமணி=சாணைபிடித்த ரத்தினங்கள் பதித்த. கலத்திடை=பாத்திரத்தில். சுதை=அமுதத்தை. (4)

முனிவி னைக்கொனு மோளிகை மாரனும்
வினையி னைத்தெறு மெய்ம்மடி வாலனும்
தனைநி கர்க்குந் தவிசமர் பூவினை
மனமெ னப்படும் வண்டுற விட்டனர்.

(கு - ரை.) முனிவினைக் கொலும் = கோபத்தை அழிக்கும். மோளிகைமாரன் என்பது = ஒரு அடியவர் பெயர். பூவினை = (அல்லமரு ஞகிய) மலரை. வண்டுஉற = வண்டுகள் = மொய்க்க. (5)

முன்னி ருந்த முதுக்குறை வாளரும்
பின்ன டைந்த பெரியரு மாகிய
மன்னி ருந்த மணித்தவி சின்புடைத்
துன்னி யெங்கணுஞ் சூழ்ந்தனர் தொண்டரே.

(கு - ரை.) முதுக்குறைவாளர் = பேரறிவுடையவர். அடைந்த = வந்த. மன்இருந்த = அல்லமர் வீற்றிருந்த. துன்னி = நெருங்கி. (6)

புண்ட ரந்திரு நெற்றியிற் பூசிமெய்க்
கண்டி யென்னுங் கலனணி வார்சிலர்
பண்டை நான்மறை யின்பய ஞகவே
கொண்ட வஞ்செழுத் துங்குறிப் பார்சிலர்.

(கு - ரை.) கண்டி என்னும் கலன் = உருத்திராக்கமாலை என்னும் ஆபரணம். பாவத்தைக் கண்டித்தலால் இது இப் பெயர் பெற்றது. (7)

நந்த னந்தரு நாண்மலர் மஞ்சனஞ்
சந்த னஞ்சுடர் தண்புகை யாதிகொண்
டிந்தி யங்களெ லாமடங் குள்ளமோ
டந்தி வண்ணனை யர்ச்சிப்ப ரோர்சிலர்.

(கு - ரை.) மஞ்சனம் = அபிஷேக ஜலம். சுடர் = விளக்கு. அந்தி வண்ணனை = அந்திப்பொழுதில் தோன்றும் செவ்வானம்போலும் நிற முடைய சிவனை. (8)

தாவில் பூசனை தாம்புரி கிற்பதில்
பாவெ லாஞ்சொலப் பட்டிடு மைம்புலக்
காவல் செய்யுங் கருத்துடை யார்தமக்
கேவல் செய்தனன் றென்றுசெய் வார்சிலர்.

(கு - ரை.) தாவில் = கெடாத. புரிகிற்பதில் = செய்வதிலும். பா = நூல்களை உணர்த்திற்று. எவல் = திருப்பணி. (9)

பூச னைத்தொழில் பூண்பதி னெண்மடங்
கீச னைத்துதித் தேத்துத னன்றென
வூச லொத்த வுளமில ராய்ப்புலத்
தூசி நிற்பத் துதிப்பவ ரோர்சிலர்.

(கு - ரை.) பூண்பதின் = மேற்கொள்வதினும். ஊசல் = ஊஞ்சல். புலத்தூசிநிற்ப = ஐம்புலன்களாகிய புழுதி அடங்கி நிற்க. (10)

அங்க லிங்க மயிக்க மிதுவென
மங்க லந்தரு மாமறை யின்முடித்

தங்கு றுந்தத் துவமசி தன்பொருள்
பங்க மின்றிப் பகர்பவ ரோர்சிலர்.

(கு - ரை.) அயிக்கம்=ஐக்யம்; ஒன்றுதல். ஆன்மா மலவலியினின்றும் நீங்கி சிவத்துடன் இரண்டறக்கலக்கும் அத்துவித உண்மையை தத்துவமசி மாவாக்கியம் விளக்கும் என்க. பங்கம்=பழுது. (11)

பாச மேது பசுவெனப் பட்டதே
தீசன் யார்பதி யெவ்வகை யாருயிர்க்
காசு தீர வருளு மருளுடைத்
தேசி காவெனத் தேர்பவ ரோர்சிலர்.

(கு - ரை.) பாசமேது = பாசமென்பது யாது; பசுவெனப்பட்டதேது=பசுவென்பது யாது. எவ்வகை=எத்தகையது. ஆசு=குற்றம். (12)

புறந்தி னஞ்செயும் பூசையி னன்றெனச்
சிறந்த கஞ்செய் தியானம றுவிமெய்ம்
மறந்தி ருந்த மனஞ்சிவ லிங்கமுற்
றிறந்தி டுந்திற மெய்தின ரோர்சிலர்.

(கு - ரை.) பூசையின்=வழிபாட்டினும். அகம்செய்தியானம்=மானத வழிபாடு. இறந்திடும்=உலக உணர்ச்சி நீங்கும். (13)

ஓடி நீளு முயிர்நின்றி டாதெனில்
நீடு மாமன நிற்பதன் றுதலால்
வீடு மேவரி தென்று விதிமுறை
நாடி வாயு நலிபவ ரோர்சிலர்.

(கு - ரை.) உயிர்=உயிர்ப்பு; பிராணவாயு. மேவரிது=அடைதற்கு இயலாது. வாயுநலிபவர்=சுவாசபந்தனம் செய்பவர். (14)

இனைய ராகி யிருந்தவக் காலையில்
அனைய னாகிய வல்லமன் றன்னிடை
நினைவெ லாமுற நின்று தமதிடை
மனமி லாத வசவனைக் கண்டனர்.

(கு - ரை.) இனையராகி=இத்தன்மையராய். அனையனாகிய=அத்தன்மையனான. அல்லமன் தன்னிடை = அல்லமனிடத்தில். மனம் இலாத=மனம் செலுத்தாத. (15)

## வேறு.

பெரியவர் சிறியவ ரென்னும் பெற்றிமை
அரவணி கடவுட னடியார் தம்முளே
தெரிபவ னெவனவன் சிறிய னேயென
விரிவுறு மறையெலாம் விளம்பு மென்பவே.

(கு - ரை.) பெற்றிமை = தன்மையை. தெரிபவன்=ஆய்பவன். சிறியனேயென=இழிந்தவனே என்று. விரிவுறும்=விரிந்த. (16)

ஆவுரித் திடினுநீ றணியு மன்பனம்
மாவுரித் தவனென வணங்கத் தக்கவன்
பூவுரித் தவன்பதம் புனையப் போற்றுற
நாவுரித் தெனமறை நான்கு மோதுமால்.

(கு - ரை.) மாஉரித்தவன் என=யானைத்தோலை உரித்த சிவபிரான் போல. "ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும், கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்பராகில் அவர் கண்டீர் யாம்வணங்கும் கடவுளாரே" என்பது தமிழ் மறை. (17)

வந்தவர் வருபவர் வருகின் றார்களாம்
அந்தமி லடியர்மாட் டாற்றுஞ் செய்கையைச்
சிந்தனை செய்கிலன் றேசி கன்செயும்
இந்திர சாலமுற் றிருந்து நந்தியே.

(கு - ரை.) அந்தமில் = அளவில்லாத. அடியர்மாட்டு = அடியவரிடத்து. ஆற்றும்=செய்யும். இந்திரசாலத்தி லகப்பட்டு என்க. தேசிகன்=அல்லமன். (18)

பத்தியிற் றவறினேன் பாலி ருந்துநாம்
துய்த்துடற் சுமப்பதிற் றுறத்த னன்றென
மெய்த்தவக் குழாமெலாம் வெகுண்டு போயின
அத்தனற் றண்டநா யகனை விட்டரோ.

(கு - ரை.) பால்=இடத்தில். துய்த்து=புசித்து. சுமப்பதில்=தாங்குவதினும். துறத்தல்=இறத்தல். குழாம்=கூட்டம். (19)

துன்றிய மெய்த்தவர் துறந்து போயபின்
மன்றல்செய் மற்றைநாண் மனையை யொத்தொரு
தன்றனி நற்புரந் தனிப்பக் கண்டனன்
நன்றறி நற்செய னந்தி தேவனே.

(கு - ரை.) மன்றல்=திருமணம். மணம்செய் காலத்து மக்கள் நிறைந்த இல்லம் மறுநாள் அவர்கள் அகல வெரிச்சென இருத்தல் இயல்பு.

வழுவின னன்புசெய் வழியை யின்றுநான்
குழுவுறு மடியவர்க் குறித்துச் செய்தவிவ்
ஒழிவறு மடிசிலுண் டொழிந்தி டாதுதீர்ந்
தழிவுறு மேயென வகந்த ளர்ந்தனன்.

(கு - ரை.) அடியவர் குறித்து=அடியார்பொருட்டு. ஒழிவறும் அடிசில்=ஒழிவற்ற இவ்வுணவு. ஒழிந்திடாது=செலவாகாமல். (21)

சங்கம பத்திசெய் தண்ட நாதனே
சங்கம பத்திசெய் தகைமை பூண்டுநான்
சங்கம பத்தியிற் றவறினே னென்றால்
சங்கம பத்திசெய் தன்மை யெண்மையோ.

(கு - ரை.) தண்டநாதனே தவறினேனென்றால் பத்திசெய்தன்மை எண்மையோ எனக் கூட்டுக. தகைமை=தகுதி. எண்மையோ=எளிதோ.

இழிப்பினும் வெறுப்பினு மில்லி னுள்ளன
அழிப்பினு முடம்பினை யரிந்து கொல்லினும்
பழிப்பறு சங்கம பத்தி செய்பவன்
ஒழிப்பது பிறவியென் றுலக மோதுமே.

(கு - ரை.) உலகம் ஓதுமே = உயர்ந்தோர் கூறுவரே. "உலக மென்ப துயர்ந்தோர்மாட்டே, நிகழ்ச்சியவர்கட் டாகலான" என்பது விதி.

இம்முறை சங்கம பத்தி யெய்திய
எம்முடை நந்தித னெண்ண முற்றுற
அம்மடை யடிசிலுண் டலமன் மாதவர்
தம்முறு பசியெலாந் தணிப்ப வுன்னினன்.

(கு - ரை.) சங்கமபத்தி=அடியார் பத்தி. முற்றுற=நிறைவேற. உன்னினன்=கருதினன். மடைஅடிசில்=சமைத்தசோறு. போதகன்=அல்லமன். (24)

ஒருவன்யான் சிறுபசி யுடையன் சிற்றுணா
விரைவுற விடுதிநீ வேண்டு மாறுபின்
பரிவுள வடியவர் பாற்செ யென்றனன்
பொருவறு வசவனை நோக்கிப் போதகன்.

(கு - ரை.) சிற்றுணா = சிறு உணவு. விடுதி = கொண்டுவருக. வேண்டுமாறு=விரும்பியபடி. அடியவர்பால்=அடியவரிடத்து. (25)

ஐயனு முனிவுறா தருளும் வண்ணம்யான்
செய்யுநல் வினையென மகிழ்ந்து தேவனைப்
பையவுண் மனையிடைப் பணிந்து கொண்டுபோய்ப்
பெய்யுமென் மலர்மணிப் பீடத் தேற்றினன்.

(கு - ரை.) ஐயனும் = அல்லமனும். உண்மனையிடை=போஜன அறையில். பைய=மெதுவாக. மென்மலர் பெய்யும் பீடமென்க. (26)

ஏற்றிய வருள்வச வேச னெம்பிரான்
காற்றுணை மலர்களைக் கந்த மஞ்சன
நாற்றமென் மலர்நறும் புகைவி ளக்கெனப்
போற்றிய விவைகொடு பூசை செய்தனன்.

(கு - ரை.) கால்துணை மலர்களை=திருவடித் தாமரைகளை. போற்றிய=ஆகமங்களால் சொல்லப்பட்ட. கந்தம்=சுகந்தம். (27)

பூசனை செய்தபின் போற்றி நின்றுபொன்
பாசன மமைத்துமென் பதம்ப டைத்துமேல்
யோசனை கைகமழ் கறியு மொள்ளிய
போசன முறையிடப் புரிந்து நந்தியே.

(கு - ரை.) பொன்பாசனம்=அழகிய வாழையிலை. பதம்=சோறு. யோசனைதூரம் கைகள் வாசனை வீசத்தக்க கறிவகைகள் என்க. (28)

அருந்துக வெனவடி தொழுது மக்கலம்
திருந்திய வமுதுளோ ரவிழுஞ் சேடியா
தருந்தின னோரிமைப் போதி னல்லமன்
பொருந்திய வவரிறும் பூத ராகவே.

(கு - ரை.) திருந்திய அமுதுள் ஓர் அவிழும் சேடியாது=நிறையப் படைத்த அன்னத்தில் ஒரு பருக்கையும் மீதமாகாதபடி. இறும்பூது= ஆச்சரியம். (29)

பின்னரு மம்முறை பெய்ய வையனவ்
அன்னமு மம்முறை யருந்திப் பின்னரும்
பின்னரு மம்முறை பெய்ய வுண்டனன்
தன்னுளம் வியந்தனன் றண்ட நாயகன்.

(கு - ரை.) அம்முறை=மேல் உண்ட அப்படியே. பெய்ய=இட. பின்னரும் பின்னரும்=மீட்டும் மீட்டும். (30)

சிறுச்சிறி தனமிடுஞ் செய்கை யாலருள்
இறைக்கெழி லுதரவெங் நெருப்பெ ழுந்ததால்
விறற்கன லம்முறை விறகி டக்கனன்
றுறப்பெரி தெனவெழுந் தோங்கல் போலவே.

(கு - ரை.) விறற்கு அனல்=விறகிற்பட்டதீ. அம்முறை=மேற்படி சிறிது சிறிதாக இடும் முறையில். உற=மிக. ஓங்கல்=அதிகரித்தல். (31)

எண்ணிய வெண்ணியாங் கியற்று மேவலர்
அண்ணலும் வருகென வழைத்து நமமனைப்
பண்ணிய பதமெலாம் படைமி னென்றலும்
துண்ணென வனமிடுந் தொழிலெரு டங்கினர்.

(கு - ரை.) ஏவலர்=வேலையாட்களை. அண்ணலும்=வசவண்ண ரும். பதம்=சோறு. துண்ணென=திடுக்கென்று (32)

## வேறு

அளவறு மடியர்க் கெல்லா மாக்கிய வடிசிற் குன்றம்
கொளவுறு கூடை யோடு கூடைக டாக்கக் கொண்டு
வளமுறு கயிலைக் குன்றம் பெயர்த்திவண் வைத்த தென்னத்
தளவுற முடிசி லெங்க டம்பிரா னெதிர்கு வித்தார்.

(கு - ரை.) அடிசிற்குன்றம்=மலைபோன்ற சோறு. கொளஉறு= வாரிக்கொள்ளத் தகுந்த. தளவு உறழ்=முல்லையரும்புபோன்ற. (33)

பருப்பொரு பொருப்பெ னத்தாம் படைத்தனர் சிலரெ டுத்து
விரைப்புது நெய்க விழ்த்து விடுத்தனர் சிலர்ம ணக்கும்

பொரிக்கறி பளிதம் பாகு புளிங்கறி பலவு மெல்லாம்
விரைத்தொரு சிலர்சொ ரிந்து நின்றனர் முகில்கள் போல.

(கு - ரை.) பொருப்பென=மலைபோல. விரை=வாசனை. பளிதம்=பச்சடி. பாகு=குழம்பு. பலவுமெல்லாம்=இவைபோல்வன பிறவற்றையும்.

வடைபடு திகிரி யாக மாங்கனி கவண்கல் லாக
உடைபடு கழைக்க ரும்பங் கொண்கதை யாகக் கொண்டு
கடைபடு மூலகிற் கெல்லாங் காரிய கருத்தன் முன்னர்ப்
படைபடை யெனச்சொ ரிந்தார் படைமுகத் திளைஞர் போல.

(கு - ரை.) படு = பொருந்திய. திகிரியாக = சக்கரங்களாகவும். கடைபடு=கீழ்ப்பட்ட. காரியகருத்தன்=செயல் நடத்துந் தலைவனான அல்லமன். இது, விரியுருவக அணி. (35)

குளங்கரை யாக வந்தக் குளத்தினுட் பசுவின் றீம்பால்
விளங்குறு மமுத வேலை விடுத்தென விட்டார் சில்லோர்
உளங்கனி மூவர் செய்யு ளொத்தமுக் கனியு மேனோர்
வளங்கெழு தொடர்பு போலு மற்றைய பழமுந் தூர்த்தார்.

(கு - ரை.) கரை=எல்லை. அமுதவேலை=பாற்கடலை. மூவர்=அப்பர், சம்பந்தர், சுந்தரர். முக்கனியும்=மா, வாழை, பலாக்கனி. ஏனோர்=மற்றையர். கெழு=சிறந்த. தொடர்பு=பாசுரம். மற்றையபழம்=திராக்ஷை, முந்திரி, பேரீந்து, கொய்யா முதலிய. ஈண்டு பன்னிரு திருமுறைகளையும், கனிகள் எனப் போற்றியமை யோர்க. (36)

எண்ணில ரிடுவ வெல்லா மினியன வின்னா வென்னான்
கண்ணிமை யொடுங்கு முன்னர்க் கடிதுமின் றுதவு றுமல்
வண்ணமென் மலர்க்கை வாங்கி வறிதிருந் தனனெனுங் கோன்றேர்ப்
பண்ணவன் பரிக்கு மேடு பள்ளமென் பனவுங் குண்டோ.

(கு - ரை.) இனியன இன்னா என்னான்=சுவையுடையன சுவையல்லாதன என்று கூறாதவராய். தேர்ப்பண்ணவன்பரிக்கு=சூரியன் குதிரைகளுக்கு. (37)

சற்றினு முண்க வென்று தமருப சரியா வண்ணம்
சற்றினு மிடுக வென்று தம்பிரா னுண்ணா நின்றான்
மற்றிது கண்டு நின்றோர் மட்கல மொழிய வேறு
பற்றிலை யென்று நந்தி திருமுகம் பார்த்துச் சொன்னார்.

(கு - ரை.) சற்று இன்னும் உண்க எனப் பிரிக்க. தமர்=உறவினர். உண்ணா=உண்டு. மட்கலமொழிய=மண் பாத்திரம் நீங்கலாக. (38)

உண்விளை யாடல் செய்யு மொருவனைக் கண்டு வேண்மேல்
கண்விளை யாடு நெற்றிக் கடவுண்மெய் யடியா ரெல்லாம்
விண்விளை யாடுஞ் சோலை வியனக ரிடத்திற் செல்வப்
பெண்விளை யாடுந் தம்மிற் பேரன மிடுதற் கெண்ணி.

(கு - ரை.) உன்விளையாடல்=உன்னும் திருவிளையாடல். வேள் மேல்=மன்மதன்மேல். விளையாடும் நெற்றிக்கண் கடவுள் என்க. விண் விளையாடல்=ஆகாயமளாவிய. செல்வப் பெண்கள் கூடி தம்மில் விளையாடும் நிலாச் சோற்றையும் கொண்டுவந்து படைக்கக்கருதி யென்க. பேர் அனம்=சிறந்த நிலாச்சோற்றையும். (39)

பாண்டின்மே லேற்றி வந்தும் பானையிற் சுமந்து வந்தும்
வேண்டிய பாக முற்று வேறுவே றாய வன்னம்
ஆண்டகைக் குரவ னுன்னை வளவிலர் சொரிந்து யர்த்தார்
ஊண்டழல் வெறுக்கும் வண்ண மூட்டுவ மென்பார் போல.

(கு - ரை.) பாண்டில்=வண்டி. வேண்டியபாகமுற்று=(அவரவர்) விரும்பிய வண்ணம் சமைத்த. சொரிந்து உயர்த்தார்=கொட்டி (மலை போல்) உயரக்குவித்தார். ஊண்தழல்=உதராக்கினி. (40)

மலையென வமல ஞான வாரிமுன் சொரிந்து யர்ப்பார்
இலைமலர் பசுங்காய் கந்த மிளஞ்செழுந் தண்டாற் செய்த
உலையமை பல்கா யம்பெ யொண்கறி யமுது வேறு
பலபல முறைம யங்கப் படைப்பர்வல் விரைந்து வந்து.

(கு - ரை.) இலை=கீரைகளையும். மலர்=மலர்க்கறிகளையும். தண்டால்=தண்டு வகைகளால். உலைஅமை = அடுப்பேற்றி பாகமான. பல் காயம்=பல சுவை. வல்=மிக. (41)

குய்கமழ் கறிக ளிட்டுக் குவிப்பவர் சிலரெ டுத்து
நெய்கமழ் கைய ராகி நிற்பவர் சிலர்நி ரம்பப்
பெய்கமழ் சொரியென் றான்பால் பெய்பவர் சிலர ளைந்த
கைகமழ் தயிர்க்கு டத்தாற் கவிழ்ப்பவர் சிலரங் கம்மா.

(கு - ரை.) குய்=தாளிதம். கமழ்=பரிமளிக்கும். பெய்=விடு. கவிழ்=கவிழ்த்துவிடு. சொரி=அப்படியே சொரிந்து விடு என விரிக்க. ஆன்பால்=பசும்பால். (42)

இட்டவர் மறிய வன்ன மிடுதற்கு விரைந்து செல்வார்
முட்டுவ ரெதிர்ந டந்து மூரல்கை வாங்கி வாங்கிக்
கொட்டுவ ரடிசி றந்த கூடைகள் கவிழ்த்தெ றிந்து
தட்டுவ ரனம்ப டைக்குந் தம்பிரா னடிய ரன்றே.

(கு - ரை.) மறிய=மீட்டும். எதிர் நடந்து ஒருவருடனொருவர் முட்டிக்கொள்வரென்க. கை=கையில். வாங்கி வாங்கி=எடுத்தெடுத்து. அடிசில் தந்த கூடைகளென்க. மூரல்=சோறு. (43)

இன்னணம் படைத்த வெல்லா மிமைப்பினி லயின்று சைவ
மன்னவன் வயிற்றின் வெந்தீ வளர்த்தினிர் நீயி ரெல்லாம்
என்னநல் வசவ தேவ னிருந்தபல் பண்டங் கொண்டு
முன்னவன் பசியை யாற்ற முன்னிமற் றிதனைச் செய்தான்.

(கு-ரை.) அயின்ற=உண்டு. சைவமன்னவன் = அல்லமனது வயிற்றின் வெந்தீ=உதராக்கினி. முன்னி=நினைத்து. (44)

அவரையும் பயறு மெள்ளு மரிசியு மவலுங் கொள்ளும்
துவரையுங் கடலை யுஞ்செஞ் சோளமு நெல்லும் புல்லும்
குவரையுங் கயிலை யும்பொற் குன்றமும் போல ஞாலத்
தெவரையுங் களிப்புச் செய்ய வெங்கணுங் குவிப்பித் தானால்.

(கு-ரை.) செம்=சிவந்த. குவரை=ஒருவகை தானியம். பொன் குன்றமும்=மேருமலையும். எங்கணும்=எல்லாவிடத்தும். (45)

குன்றெனக் குவித்த வெல்லாங் கொள்ளெனக் கொண்டு நம்பன்
மென்றரைக் கணத்து ளின்னு மெல்வன கொணர்மி னென்ன
வன்றிறற் றண்ட நாதன் மனத்தினா லவைவி யற்றி
நின்றிடத் தம்பி ரானு நினைவினா லவைய யின்றான்.

(கு-ரை.) கொள்ளென=உண் என்று கூற. நம்பன்கொண்டு= அல்லமன் அவற்றையெல்லாம் உட்கொண்டு. அரைக்கணத்துள் மென்று என இயைக்க. வசவண்ணர் மனத்தால் படைத்ததை அல்லமர் மனத்தாலேயே உண்டு தீர்த்தாரென்க. (46)

நோக்கினா லளித்த வெல்லா நோக்கினாற் றொலைத்தா னந்தி
வாக்கினா லளித்த வெல்லாம் வாக்கினால் வள்ள லுண்டு
போக்கினா னிடுத லுண்ண லென்னுமிப் போரின் கண்ணே
தூக்கினா லிருவர் தாமுந் தோல்வியுற் றுடைந்தா ரில்லை.

(கு-ரை.) தொலைத்தான்=உண்டு தீர்த்தான். வள்ளல்=அல்லமன். உண்டு போக்கினான்=உண்டு தீர்த்தான். தூக்கினால் = ஆராய்ந்தால். உடைந்தாரில்லை=பின் வாங்கினோர்களில்லை. (47)

படைத்திடுந் தொழின்மு யன்ற பத்தன தியல்பு மன்ன
துடைத்திடுந் தொழிலி னின்ற தூயவ னியலு நோக்கி
அடுத்தநற் பத்த ரெல்லா மனையவ ரிருவர் சீரும்
எடுத்துரைத் துளம்வி யப்புற் றிறைஞ்சின ரொருங்கு மாதோ.

(கு-ரை.) பத்தன்=வசவண்ணர். அன்ன=அவற்றை. துடைத்திடும்=தின்று தீர்க்கும். தூயவன்=அல்லமன். அடுத்த=சூழ்ந்திருந்த. ஒருங்கு இறைஞ்சினரென்க. மாதோ=அசை. (48)

இடுதற்கு வல்லோ னந்தி யிடும்பொரு ளெவற்றை யுங்கை
தொடுதற்கு வல்லா னிந்தத் தூயவ னென்ப ரிவ்வா
றிடுதற்கு வல்லா ரில்லை யென்பரிவ் வாறு நாங்கை
தொடுதற்கு வல்லார் தம்மைச் சொல்லவுங் கேளே மென்பார்.

(கு-ரை.) இடுதற்கு=படைத்தற்கு. கைதொடுதற்கு=கை வைத்தற்கு. கைதொடுதற்கு வல்லார்=சுட்டிக்காட்டுதற்குரிய வன்மையாளர்.

கண்ணப்ப னன்பி ஞனே கறியென வமைத்த வூனை
உண்ணப்ப னூனின் வேரு முயிருணின் றமைவ னென்று
வண்ணப்பொன் னனைய சென்ன வசவதே சிகன்வ ணங்கி
விண்ணப்பஞ் செய்தான் றுங்க விடைமுகங் கரந்தா னோடு.

(கு - ரை.) விடைமுகங்கரந்தவர்=ரிஷபமுகம் மாறிவந்த வசவண்ணர். ஊனை=மாமிசத்தை. உண் அப்பன்=உண்ட சிவபிரான். ஊனின் வேரும்=உடம்பிற்கு அயலாயுள்ள. உயிருள் நின்று அமைவன்=உயிர்க்கு உயிராயிருப்பவன். (50)

## வேறு

சென்ன வசவன் சொல்லியவச் செயலே செய்யுஞ் செயலென்று
மன்னு மருளின் மடிவால மாச்சி தேவன் வந்துரைப்ப
என்னை யுடையா னும்மொழியே யெனது மனதைத் தேற்றுமது
பின்னை யுளதோ கதகமலாற் பெருநீர் தெளிதற் கென்றுரைத்து.

(கு - ரை.) என்னையுடையான்=என்னை அடிமையாகவுடைய வசவண்ணன். தேற்றுமது=தேற்றத்தருவது. கதகம்=தேற்றாங்கொட்டை.

பொறிகள் கரணம் பூதங்கள் புலன்கண் மற்றும் பல்வகைய
கறிக ளாக வாருயிரே கலந்துண் பதமா நீயுண்ணப்
பெறுக திலன்யா னெனநின்று பிறவிப் பிணிதீர் மருத்துவன்றன்
நறிய மலர்மெல் லடிபணிந்தா னமையா ளுடைய வருணந்தி.

(கு - ரை.) பதமா=சோறாக. பெறுகதிலன் = பெற்றேனில்லை. மருத்துவன்=வைத்தியரான அல்லமருடைய. நறிய=மணம் கமழ்கின்ற.

வசவ னிலைகண் டருண்ஞான வள்ள லல்ல மப்பெயரான்
பசியின் வந்தே னலன்பொருட்குப் படர்கா மக்கு வந்திலன்யான்
கசியு நினது மனத்தன்பு காண வந்தே னென்றேத்தி
இசையின் மலியு மரனடியார் யாரு மகிழ வெடுத்தணைத்தான்.

(கு - ரை.) பொருட்கு=பொருளீட்டுதற்கும். படர்=படர்கின்ற. காமக்கு=காமத்தைத் தவிர்த்தற்கும். (53)

கண்போ லுயிர்கள் கண்டறியக் கதிர்போற் காட்டும் பெருமானே
உண்போன் யானு வூட்டுமுனக் கூட்டு வேனென் றெழுந்தமையால்
எண்போ தென்போற் பேதைமையா ரில்லை யில்லை யென்றனன்பின்
பண்போ டமல னெதிர்நின்றான் பத்தி வடிவ மாயினுன்.

(கு - ரை.) உண்போன் = போகம் அனுபவிப்போன். யானு= யானுக. ஊட்டும்=அப்போகங்களை உண்பிக்கும். எண்போது=ஆலோசிக்கும்போது. (54)

செம்மை நெறியா னருணந்தி தேவன் றன்னைப் புகழ்வமோ
பொய்ம்மை தீரு மல்லமனைப் புகழ்வ மோவிங் கன்றியிவர்

தம்மை விழியாற் காண்பதற்குத் தவஞ்செய் துடல மிதுபெற்ற
எம்மை யாமே புகழ்வமோ வெனவின் றனர்தம் பிரானடியார்.

(கு - ரை.) இங்கன்றி=இவ்விதமன்றி. உடலமிதுபெற்ற=இத்தேகம் தாங்கிய. தம்பிரான்=தனக்குத்தானே தலைவன். (55)

பரிந்த நந்தி முகநோக்கிப் பசித்தா ரென்று நீதளரப்
பிரிந்த வந்த வடியார்தமைப் பிறங்க லனைய நின்மாடத்
தருந்த வணங்கிக் கொணர்தியென வறிவா னந்த மயன்கூற [தில்;
விரைந்து விடைகொண் டெழுந்தன்பு வெள்ளஞ் சென்ற தவரிடத்

(கு - ரை.) பிறங்கல்=மலை. அறிவானந்தமயன் = சச்சிதானந்தசுரூபனான அல்லமன். அன்புவெள்ளம்=வசவண்ணர். (56)

சென்ற வசவ னருட்குரவன் றிருமே னியிற்று னங்கணிந்த
மன்றன் மலருஞ் சந்தனமும் வடிவிற் றிகழ மடிமிர்ந்து
தின்றன் முதல கறிமணக்கத் தேக்கு விடுத்து முகமலர்ந்து
கொன்றை கமழ்வே ணியனடியார் குழாங்க ளிருப்பக் கண்டனனால்.

(கு - ரை.) அருட்குரவன்=அருளையுடைய பரமாசாரியனான அல்லமன். மடிமிர்ந்து=வயிறு எடுப்பாகி. தேக்கு=ஏப்பம். (57)

கண்ட நந்தி யடிபணிந்து கடையேன் செய்த பிழையெல்லாம்
உண்டு பொறுமின் வருகவென வுள்ளங் களிப்புற் றுங்கிருந்த
தொண்டர் வசவ நின்பெருமை சொல்ல வெளிதோ வயிறுரப்
பண்டு போல வாய்கைதொழிற் படாம லயின்றே மின்றென்று.

(கு - ரை.) உண்டுபொறுமின் = உணவுண்டு பொறுப்பீர்களாக. வாய்கை தொழில் படாமல்=வாயும் கையும் வேலைசெய்யாமல். (58)

தேவ ருண்ண வவியுணவு செந்தீ முகத்தி லிடுதல்போல்
ஓவில் யாங்க ளெல்லேமு முண்ண வடிகி லல்லமன்றன்
நாவின் மருவ விடுவினையோர் நாவோ புகழுந் தரத்ததென
ஆவி யனைய நந்திசீ ரமல னடியார் புகன்றேத்தி.

(கு - ரை.) உண்ண=உண்பதன் பொருட்டு. அவியுணவு=அவிர்ப்பாகத்தை. செந்தீமுகத்தில்=வேள்விக்குண்டத்தில். ஓவில்=நீங்காத. ()

உலகி லொருவன் சிவயோகி யுண்ட தம்ம சராசரமாம்
அலகி லுயிர்க ளெலாமுண்ட தாகு மென்ன மறைகூறும்
இலகு முறையைக் காட்சியா னின்றிங் குணர வுணர்த்தினன்
கலக வினைக டீர்க்குமருட் கண்ணன் றிகழல் லமதேவன்.

(கு - ரை.) அம்ம=வியப்பிசைக் குறிப்பு. சரம்+அசரம்=சராசரம். காட்சியால் இன்று=இன்று வெளிப்பட. இங்கு என்பது—காலம், இடம், செயல் மூன்றனையும் சுட்டிற்று. "தண்டறு சிந்தை தபோதனர்

தாமகிழ்ந்து, உண்டது மூன்று புவனமும் உண்டது” என்பது—திருமந்திரம். (60)

ஆத லாலவ் வல்லமனை யருத்த லெம்மை யெலாமருத்தல்
பாத மவனைப் பணிதலெமை பணித லாகு மெஞ்ஞான்றும்
பேத மில்லை நல்வசவப் பெயரோய் செல்க வென்னமலை
மாது தழுவக் குழைந்ததோள் வள்ள லடியார் தமைவணங்கி.

(கு - ரை.) அருத்தல்=உண்பித்தல். பாதமவனை=அவன் திருவடிகளை. வள்ளலடியார்தமை=சிவனடியவர்களை. (61)

மீண்டு நந்தி யல்லமனுர் மென்பூங் கமல வடியிறைஞ்சி
ஆண்ட பெருமா னடியார்க ளென்னை யுண்ட வுணவுகரு
ஈண்டு மகவு முண்ணல்போ லெந்தை யுண்ட வெலாமுண்டு
பூண்ட மகிழ்வோ டிருந்தனர்நீ புனைந்த மலரும் புனைந்தென்றுன்.

(கு - ரை.) ஆண்டபெருமான் அடியார்கள்=என்னையாண்ட சிவனடியார்கள். கருஈண்டு மகவும்=கருப்பையில் பொருந்திய குழவியும். பூண்ட=மேற்கொண்ட. புனைந்த=சூடிய. (62)

மாற னடித்த வடிபட்ட மன்னு முயிரின் றிறமெல்லாம்
ஈறில் புகழ்கங் கணவசவ னிட்ட வடிசி லுண்டுபசி
ஆறி யிருந்த வாதலினு லல்ல மன்பூ ரணனெனனக்
கூறு மொழிமெய் மெய்யென்று கூறி யுலகங் களித்ததால்.

(கு - ரை.) மாறன்=அரிமர்த்தன பாண்டியன். மன்னும்=நிலைபெற்ற. திறமெல்லாம்=கூட்டங்கள் அனைத்தும். ஈறில்=முடிவில்லாத. புகழ்கங்கண வசவன்=புகழாகிய கங்கணமணிந்த வசவண்ணர். (63)

இவ்வா றருந்தி யமைதிபெறு மெங்கள் பரம யோகிதான்
தெவ்வா கியவைம் புலன்வென்ற திறல்கூர் வசவன் றனைமகிழ்ந்து
சைவா கமமு நான்மறையுஞ் சாற்றும் பொருளை யுணர்த்துதற்குச்
செவ்வாய் மலரத் திருவுள்ளஞ் செய்து தனிவீற் றிருந்தனனுல்.

(கு - ரை.) பரமயோகி=சிவயோகி. “வேதவாகமச் சென்னியில் விளைபொரு ளபேதம் பேதமாகிய பிணக்கருத்து இருட்பிணி யவிழ்த்து” எனவும், வேதமோடாகமம் மெய்யா மிறைவனூ லோதும்பொதுவும் சிறப்புமென்றுன்னுப நாதனுரையிவை நாடிலிரண்டந்தம் பேதமதென்னில் பெரியோர்க்கபேதமே எனவும் பிறருங் கூறலறிக. (64)

இருபத்துமூன்ருவது

ஆரோகணகதி முற்றிற்று.

கதி 23 - க்கு திருவிருத்தங்கள் - 1111.

இருபத்துநான்காவது

# மனோலயகதி

## வேறு

மயங்குத லின்றி மனோலய மெய்தில்
சயந்தரு முத்தி தலைப்படு மென்று
நயந்தரு மல்லம நாதன் விளங்க
இயம்பிய வண்ண மியம்புது மன்றே.

(கு-ரை.) மனோலயம்=மனம் லயப்படுதல். சயம்தரு=வெற்றியைத் தரும். தலைப்படும்=உண்டாகும். நயம்=இன்பம். (1)

பத்நர்க டங்கள் பசிக்குணு மையன்
தத்துவ நல்கு கருத்தொடு தங்க
அத்தலை யன்பொ டகங்குழை கின்ற
வித்தக நந்தி விளம்புவ னன்றே.

(கு-ரை.) உணும்ஐயன்=உண்ட அல்லமன். தத்துவம்=மெய்யுணர்வு. அத்தலை=அவ்விடத்தில். அகம் குழைதல்=மனம் உருகுதல். ()

விருப்பு வெறுப்புரு வாம்விட யத்தோ
டிருக்கு மயற்சக மென்பதி லாமல்
பரப்பிர மத்தியல் பார்ப்ப தெனக்குத்
தெரித்தரு ளென்றுரை செய்து துதித்தான்.

(கு-ரை.) இருக்கும்=கூடியிருக்கும். மயல்சகம்=மாயப்பிரபஞ்சம். இலாமல்=தோன்றாதபடி. தெரித்தருள்=உரைத்தருள். (3)

அண்ணலு மார்வ மடைந்தரு ணந்தி
மண்ணுல கோர்தளை மாறுபு ஞானக்
கண்ணுறு மாறு கடாவின னென்று
புண்ணிய னோடு புகன்றிடு கின்றான்.

(கு-ரை.) ஆர்வம் அடைந்து=மகிழ்ந்து. தளைமாறுபு=பந்தத்தினின்றும் அகன்று. கடாவினன்=வினவினன். (4)

யானென தென்ப திருந்திடு காறும்
ஞான முறுவன து நண்ணில னாகில்
தானிலை யாத சகந்திகழ் கிற்கும்
தீன மிலாத சிவந்திக ழாதே.

(கு-ரை.) யான்எனதென்பது=அகங்காரம் மமகாரம். அது=அந்த ஞானம். தீனமிலாத=வறுமையிலாத. திகழல்=காட்சியாதல். (5)

கறங்கெனு மாறுழல் கின்ற கருத்துப்
பிறந்திற வாத பெரும்பிர மத்தில்

இறந்திடில் யானென தென்னு மகந்தை
மறைந்திடு மன்றி மறைந்திடு மோதான்.

(கு - ரை.) கறங்கு எனுமாறு=காற்றாடி என்னும்படி. உழல்கின்ற= விடாதலைகின்ற. கருத்து=மனம். இறந்திடில்=அழியில். அன்றி=அது வல்லாத பிறமுயல்வில். மறைதல்=அழிதல். (6)

யானிது செய்வ லெனக்கிது செய்வர்
ஏனைய ரென்ன விருந்த கருத்தான்
மேனிகழ் முத்தி விரும்ப விருட்டால்
பானுவை மேவுறு பற்றை நிகர்க்கும்.

(கு - ரை.) ஏனையர்=(யான் செய்த உபகாரத்தை யேற்ற) மற்றையர். இது=இன்ன உதவி. கருத்தால்=எண்ணத்தால். மேல்நிகழ்= மேலாக விளங்கும். மேவுறுபற்று=அடையும் ஆசை. (7)

இருவினை தாம்வரும் யானென லாலவ்
இருவினை யால்வரு மின்பொடு துன்பம்
இருவினை யானென லின்றெனி லில்லை
இருவினை யில்லெனி லில்லை பிறப்பே.

(கு - ரை.) யான் எனலால்=யானல்லாததை யான் எனக்கோடலால். இருவினை=நல்வினை தீவினைகள். யான் எனல் இன்றெனின் இருவினையில்லை என்க. இருவினையிலையேல் பிறப்பில்லை என்க. (8)

மனத்தை யடக்க மனந்துணை யாகும்
பினைத்துணை யின்றது பெற்றன னாயின்
தனிச்சிவ மேயொரு தானென வாழ்வன்
நினைத்து மறந்து நிலத்துழ லானே.

(கு - ரை.) முதல்மனம்=அசுத்தமனம்; அடுத்தமனம்=சுத்தமனம். அது=அந்தசுத்த மனத்தை. பினைதுணையின்று=வேறு துணைவேண்டா.

வாரண மாகு மனத்தை யடக்கில்
காரண மாயை களைந்தொழி யாத
பூரண மாகிய போத மடைந்திட்
டாரண மோது மரும்பொரு ளாவான்.

(கு - ரை.) வாரணமாகும்=யானையொத்த. களைந்து=வேரொடும் அகற்றி. ஒழியாத பூரணமாகிய போதம்=நீங்காத நிறைவான ஞானம். ஆரணம் ஓதும்=வேதங்கள் சிறப்பித்துக்கூறும். (10)

## வேறு

விரிந்த நெஞ்சங் கருவியாம் விடய முணர விரியாமல்
ஒருங்கு நெஞ்சங் கருவியாந் தன்னை யுணர வொருங்காமல்
விரிந்த நெஞ்ச முடையவனை விடாது பிறவி யென்றுணர்க
ஒருங்கு நெஞ்ச முடையானை யுறுது பிறப்பென் றுணர்கவே.

(கு - ரை.) விரிந்த நெஞ்சம் விடயம் உணரக் கருவியாம் எனவும்; விரியாமல் ஒருங்கு நெஞ்சம் தன்னை யுணரக் கருவியாம் எனவும் கொள்க. முன்னையர் பிறவியர்; பின்னையரிலர். ஒருங்கும்=குவியும். (11)

அந்தக் கரண சுத்தியே யறிவை யறிதற் சாதனமவ்
அந்தக் கரண சுத்திதனக் கறையுங் கரும மாரணங்கள்
அந்தக் கரண சுத்திகா ணுவ தவாவற் றிடுதலே
அந்தக் கரண சுத்தியினு லடைவன் பிண்டப் பெயரன்றே.

(கு - ரை.) அந்தக்கரணசுத்தி = மனத்தூய்மை. அறிதல்=அறிதற்கு. சுத்தி தனக்கு = தூயதாதற்கு. ஆரணங்கள் கருமம் அறையும் என்க. ஆவது=நேர்வது. அவாஅற்றிடுதலே = ஆசையற்றிருத்தல் மூலமாகத்தான். பற்றற்றால் மனம் தூய்மையுறுமென்றபடி. (12)

ஆசை யறுதல் வீட்டின்ப நேரே யடையக் காரணமாம்
ஆசை யறுத லலதில்லைப் பலநூ லனைத்து மாய்ந்திடினும்
ஆசை யறுவோன் சிவனுத றிண்ண மெனநன் றறிந்திருந்தும்
ஆசை யுறுத லென்கொண்டோ வந்தோ மனித ரறியேமே.

(கு - ரை.) ஆசை யொழிதல் பேரின்பத்தை நேரே அடையக் காரணமாக இருக்கும் என்றபடி. அந்தோ=ஐயோ. (13)

ஆசு தீர்ந்த மனத்தினிடை யன்றி யுணர்வு தோன்றுது
மாசு தீர்ந்த வாடியிடை யன்றி வதனந் தோன்றுமோ
பாச நீங்கு பரஞ்சுடரை நினைக்கு நினைவாற் பற்றுமனம்
காச நீங்கு கண்போலத் தன்னைக் காண விளங்குமால்.

(கு - ரை.) ஆசுதீர்ந்த=குற்ற மகன்ற. உணர்வு = ஞானோதயம். ஆடி=கண்ணாடி. காசம்=கண்ணை மறைக்கும் நோய்; காமாலை. (14)

வான மல்லேன் வளியல்லே னழனீ ரல்லேன் மண்ணல்லேன்
ஞான மல்லேன் வினையல்லே னுனே சிவமென் றெண்ணினேன்
ஊன மில்லா வொருசிவமே யாவ னிவ்வா றுன்னுதான்
ஈன மெல்லா முடையவுடம் பெடுத்துச் சுழலு மெஞ்ஞான்றும்.

(கு - ரை.) வளி=காற்று. ஈனமெல்லாம் = இழிவு அனைத்தும். ஊனம்=பழுது. உன்னுதான்=சோகம் பாவனை செய்யாதவன். (15)

தன்னைச் சிவமென் றறிந்தவனே யறிந்தான் றன்னை யுண்மையாத்
தன்னைச் சிவமென் றறியாதா னறியா னென்றுந் தன்னுண்மை
தன்னைச் சிவமென் றென்றறிவ னென்றே பாசந் தனைநீப்பன்
தன்னைச் சிவமென் றறியாதான் றனக்குப் பிறப்பே துணையாகும்.

(கு - ரை.) உண்மையாத்தன்னை யறிந்தான் என்க. தன் உண்மை என்றும் அறியான் என அடுத்த அடியை இயைத்துப் பொருள் அறிக. மூன்றும் அடியில், "தன்னைச் சிவமென்றறிந்தவன்றே தாழ்வாம் பாசந் தனை நீக்கும்" என்றும் பாடம். (16)

தன்னைப் பேத மாய்க்காண்கை சகத்திற் காணப் பட்டதாம்
தன்னைப் பேத மறச்சிவமென் றறிவோன் ஞானி தானொருவன்
என்னக் கருதி மறையதுநீ யானு யென்ன வத்துவிதம்
தன்னைப் புகலுங் கண்டதனைச் சாற்றன் மறையின் கருத்தன்றே.

(கு - ரை.) சகத்தில்=உலகைப்போல். அது நீயானாய் என்றது, தத்துவமசி மகாவாக்கியம். கண்டதனைச் சாற்றல், பொய்த்தோற்றந்தனைக் கூறல். பண்ணும் இசையும், பழமும் சுவையும், எள்ளும் எண்ணெயும், உயிரும் உடலும், நீரும் நிழலும் போல் பிரித்துக்காண இயலாத நிலையுடனிருப்பதுவே அத்துவிதம் என்பர். சாற்றல்=கூறல். (17)

தூய்தா கியநெஞ் சுடையார்க்குத் தாமே சிவமாத் தோன்றுமால்
தீதா கியநெஞ் சுடையார்க்குத் தெளிய வபேத மிகலின்றி
வேதா கமங்கள் விளம்பிடினும் விளங்கா தென்றும் வேறென்னும்
வாதா லழிவ ரவர்மாயை மயக்க மடங்கு மதியினர்.

(கு - ரை.) அபேதம் தெளிய என இயைக்க. அபேதம்=பேதமின்மை. வேறென்னும்=சோகம் பாவனை யிருப்பில் சிவம் வேறு நான் வேறு என்று கூறும். வாதால்=வாதத்தால். (18)

நெஞ்சம் சோகம் பாவனையி னிற்க நிறுத்தி விடயங்கள்
அஞ்சுந் துறவாத் துறந்தசிவ யோகி யொருவ னடியிணையில்
துஞ்சுந் திருமான் முதலமர ருள்ள மவனைத் துதித்திறைஞ்சா
தெஞ்சுந் தவமா முனிவரிலை யெனநான் மறையு மியம்புமால்.

(கு - ரை.) துறவாமல் துறந்த என்க. திருமால் முதல் அமரர் ஆதியர் உள்ளம் எல்லாம் சிவயோகி அடியிணையில் இறைஞ்சும் என்க. ()

என்று கருணை பொழிவிழியெங் கோமா னுண்மை யினிதியம்ப
நின்ற வசவ ராயனுள மழல்சேர் மெழுகி னெக்குருகிச்
சென்று குரவ னடிபணிந்தான் சென்ன வசவன் முதலாகத்
துன்று சரண ருய்ந்தனம்யா மென்று துதித்துத் தொழுதனரால்.

(கு - ரை.) கோமான்=அல்லமன். உண்மை=அநுபவஉண்மையை. வசவராயன்=வசவண்ணர். துன்று சரணர்=நிறைந்த அடியவர். (20)

இவ்வா றருளாற் றனையுணர்த்தி யிருந்த ஞான வியல்வீரன்
சைவா சிரிய னல்லமனித் தரையிற் பருவந் தலைசிறப்ப
உய்வா னினைந்து தனைநோக்கி யுற்ற வடியார்க் குபதேசம் [னான்.
செய்வா னியன்ற வடிவொடுசென் றருள்செய் செயல்செய் துலாவி

(கு - ரை.) தனை=தன்னை. இயல்=இலக்கணம் அமைந்த. வீரன் சைவாசிரியன்=வீர சைவ சமயாசாரியனான. இத்தரையில்=இவ்வுலகில். பருவம் தலைசிறப்ப=பருவகாலம் மேலிட. (21)

இருபத்து நான்காவது
மனோலயகதி முற்றிற்று.

கதி 24 - க்கு திருவிருத்தங்கள் - 1132.

இருபத்தைந்தாவது

# மான்மியகதி

## வேறு.

வியனில மேவிய விழுமி யோர்க்கெலாம்
செயிரறு மல்லமன் செய்த நன்றியைக்
கயிலையி னுதல்விழிக் கடவு டன்புடை
மயிலிய லொடுசொலு மாறு கூறுவாம்.

(கு - ரை.) வியனிலம் = இடமகன்ற உலகம்; வியன் = பரப்பு. விழுமியோர் = மேலோர். செயிர் = குற்றம். மயிலியல் = உமாதேவியா. ()

ஆயிடை யருணந்தி யாதி மாதவர்
நேயமோ டமர்வுற நிறுவி யல்லமன்
மாயிரு ஞாலமேன் மானி டர்க்கெலாம்
போயருள் செயுந்தொழில் பூண்டு ளானரோ.

(கு - ரை) ஆயிடை = அவ்விடத்தில். ஆதி = முதலாக. நேயமோடு = பேரின்பத்துடன். அமர்வுற = விரும்பியிருக்க. நிறுவி = நிறுத்தி.

இன்னண மல்லம னிருநி லத்துறத்
தன்னிகர் கயிலையிற் சிங்கந் தாங்கிய
பொன்னணை மிசையமர் புராரி தன்னொடு
மின்னணி முலையுமை விளம்பன் மேயினள்.

(கு - ரை.) இன்னணம் = இவ்வண்ணம். இருநிலத்துற = பெரிய பூமியில் தங்கியிருக்க. தன்னிகர் = தனக்குத்தானே ஒப்பான. புராரி = திரிபுர தகனஞன சிவபிரான். மின் = ஒளிமிகு மாபரணம். (3)

அல்லம னருள்பெறற் கடைந்த நந்தியோ
டெல்லையி னின்கண மெனது நற்கலை
மெல்லிய னிலமிசை மேவிச் செய்ததென்
சொல்லுதி யெனவுமை யிறைவன் சொல்லினன்.

(கு - ரை) எல்லையில் = அளவில்லாத. நின்கணம் = உமது சிவகணங்களும். எனதுநற் கலைமெல்லியல் = எனது சிறந்த சாத்துவிக மகளும். (4)

நந்திநல் வசவனு நாமங் கொண்டமர்ந்
தந்தமி லெம்மடி யவரை யாமெனப்
புந்திசெய் தவர்விழை பொருள ளித்தமண்
சிந்திய நிலமிசைச் சிறப்புற் றுனரோ.

(கு - ரை.) அமர்ந்து=தங்கி. அந்தம்இல்=முடிவில்லாத. யாம் என = யாமே என்று. புந்திசெய்து=நினைத்து. அவர்=அவ்வடியவர். விழை=விரும்பிய. அமண்சிந்திய=சமணரை ஒழித்த. (5)

அறஞ்செயு நின்கலை யாகு மங்கைபோய்ச்
சிறந்துள வுலகின்மா தேவிப் பேர்பெறீஇ
மறஞ்செயு மதன்வலி மாள மாய்த்தெலாம்
துறந்தனள் குரவனைத் துருவிப் போயினாள்.

(கு - ரை.) பெறீஇ = பெற்று; இது சொல்லிசை அளபெடை. மறம்செயும்=தீமையையே புரியும். மதன்=மன்மதன். துருவி=தேடி.

நண்ணிய நங்கண நாதர் தாமுமக்
கண்ணகன் ஞாலமுற் றெம்மைக் காணிய
வண்ணநல் வினைகள்பல் வகைபு ரிந்தவர்
எண்ணிய பலநக ரிடத்து வைகினார்.

(கு - ரை.) கண்ணகல்=இடமகன்ற. கண்=இடம்; ஏழனுருபு. நல்வண்ணவினைகள் என மாற்றுக. வண்ணம்=தன்மை. (7)

அளக்கரும் விரதரா யவரி ருந்திடத்
துளக்கமி ளிலையுடைத் தூய னல்லமன்
கொளக்குறை படாதபே ரின்பங் கூட்டுண
விளக்கின னுலகினில் வீர சைவமே.

(கு - ரை.) அளக்கரும் = அளந்து காண்டற்கரிய. விரதராய்= நோன்பை மேற்கொண்டவர்களாய். துளக்கமில் = அசைவில்லாத. கொள=பலர் அநுபவிக்க. கூட்டுண = ஒன்று கலந்து சுவைக்க. (8)

## வேறு.

எவ்வகைச் சமயத் திற்கு மிறைவனே யெனினு நேயம்
சைவநற் சமயத் துற்றான் சைவத்தும் வீர சைவத்
தவ்வவர் பிறவி நீக்கு மல்லமன் விருப்ப முள்ளான்
மைவரிக் கயனெ டுங்கண் மடவரா லென்றான் வள்ளல்.

(கு - ரை.) நேயம்=அன்பு. அவ்வவர் பிறவியெனப் பிரிக்க. அவ்வவர்=அவரவர்களது. அல்லமன் வீரசைவத்து விருப்பமுள்ளா னென்க.

சமயமெவ் வகையி னுந்தான் சைவமே லாய தென்கொல்
அமையுநல் வீர சைவ மதனினுஞ் சிறந்த தென்கொல்
இமையவர் பரவு முக்க ணெம்பிரா னருள்செய் யென்ன
உமையவள் வினவ வேழ முரித்தவன் விளம்பு மன்றே.

(கு - ரை.) சமயம் எவ்வகையினும் = எவ்வகையான சமயத்தும். அமையும்=பொருந்திய. பரவும்=வழிபடும். வேழம்=யானை; "வேழக் குரித்தே விதந்து களிறெனல்" என்பது, தொல்காப்பியம். (10)

உரைக்குமெச் சமயத் திற்கு முத்தர பாகஞ் சைவம்
தரிக்குமச் சைவத் திற்குத் தரமென வீர சைவம்
தெரிக்குநற் காமி காதி சிரத்தினிற் றிகழுங் கண்டாய்
அரிக்குரற் சிலம்ப ரற்று மடிமலர்த் தடங்க ணல்லாய்.

(கு - ரை.) உத்தரபாகம்=மேலானபக்குவம். தெரிக்கும்=விளக்கும். அரிக்குரல்=பருக்கைமணிகளி னோசையால். அரற்றும்=சப்திக்கும்.

புறந்தரு சமயம் புக்குப் புறமலாச் சமயத் தெய்தி
அறந்திகழ் சைவ முற்றுங் கதிற்சரி தாதி யாற்றிச்
சிறந்துள் வீர சைவஞ் சேர்ந்தபின் வீடு நண்ணும்
நறுந்தளிர் கவற்று மேனி நளினமலர் வல்லி யன்னாய்.

(கு - ரை.) புறந்தரு சமயம்புக்கு=புறச்சமயத்திற் பிரவேசித்தும். புறமலாச்சமயத்து=அகச்சமயத்து. எய்தி=அடைந்தும். அதில்=அந்த சைவத்தில். சரிதாதி=சரியை முதலான. ஆற்றி=செய்து. கவற்றும்=வைக்கும். (12)

அருமறை முடியுஞ் சீர்சா லாகம முடியு மொத்துப்
பொருபற மிலாபன் முற்றும் பொருளினை விளங்கக் காட்டித்
தருமுறை யதனால் வீர சைவமே தலைமைத் தாமிவ்
இருமறு வறுநன் னூலு மிதிற்பிர மாண மாகும்.

(கு - ரை.) முடியும்=முடிபும். பொரும்=மோதும். இரு=பெரிய. மறுவறு=குற்றமற்ற. நன்னூலும்=நல்ல வீரசைவ நூல்களும். (13)

ஒன்றொரு விடயந் தன்னி லுறுசுவை நிறைவென் றாக்கி
என்றுமெம் முகத்த ளித்திட் டெம்பிர சாதங் கொண்டு
துன்றுறு கரும முன்னாத் தூய்மையிவ் வீர சைவத்
தன்றிவே றொருமார்க் கத்தி னடுக்குமோ வடுக்கண் மாதே.

(கு - ரை.) உறுதலால் எய்தும் சுவையைப் பூரணமாக்கி யெனக. முகத்து=சன்னிதியின். துன்றுறு கருமமுன்னா=நிறைந்த கர்மாநுட்டானங்களை நினைக்கும். வடுக்கண்=மாவடுபோன்ற கண். (14)

ஆதலால் வீர சைவத் தறிவினை யறியச் செய்தான்
மாதர்மா தேவி யாமுன் வண்கலை மாதி னுக்கு
மேதையாம் வசவ னாதி மெய்யடி யவர்க்கு ஞான
போதகா சிரிய னென்னும் பொருவிலல் லமன்வேற் கண்ணாய்.

(கு - ரை.) மாதர் = அழகிய. உன்வண்கலை மாதினுக்கு எனப் பிரிக்க. மேதை=மேலான. பொருவில்=ஒப்பில்லாத. (15)

பருவபே தத்தாற் பேதப் படும்பொருள் பருவங் கண்டு
திரிவின்மா முனிவர் யோகர் சித்தர்கண் முதலா னோர்க்குப்

பொருவிலா வல்ல மப்பேர் புண்ணியன் புகன்றுட் கொண்டான்
குரவவார் குழன்ம டந்தா யென்றனன் குன்ற வில்லி.

(கு - ரை.) பருவம்=பக்குவம். திரிவில்=மாறுதலில்லாத. குரவ ஆர் = குராமலர்மாலையை நிரம்ப அணிந்த. குன்றவில்லி = மேருவை வில்லாகவுடைய சிவபிரான். (16)

அம்மையுண் மகிழ்வு பொங்க வல்லமன் பெருமை கேளா
மம்மர்செய் துளங்க லக்கு மாயையைக் கடந்தா னென்றன்
மெய்ம்மைநின் பவள வாயால் விளம்பநா னறிந்தே னென்று
மும்மதில் வலிதொ லைத்த முக்கணு யகனைத் தாழ்ந்தாள்.

(கு - ரை.) மம்மர்செய்து உளம்கலக்கும்=மயக்கம் விளைவித்து மனத்தைப் பேதிக்கும். கடந்தான்=வென்றான். என்றன் மெய்ம்மை= என் மெய்ம்மை வடிவை. மும்மதில்வலி=திரிபுரவாசிகள் வன்மையை.

அங்குமை மாதி னோடு மல்லமன் பெருமை கூறித்
திங்கள்வெண் முகிழ்பு னைந்த செஞ்சடைப் பரமன் மேவ
இங்கருண் மேக மென்னு மிணையிலெங் குருகு கேசன்
மங்கல முத்தி யின்பம் வழங்குமத் தொழிலி னின்றான்.

(கு - ரை.) அங்கு = அவ்விடத்தில். உமை மாதினோடும் கூறி யென்க. மேவ=இருக்க. வெண்முகிழ் திங்கள் புனைந்த=வெள்ளிய பிறைத்திங்களை யணிந்த. (18)

மூத்தவ ரிளைஞர் நோயர் முகிழ்முலை மாதர் நல்ல
தீத்தொழி லாளர் பொல்லாத் தீத்தொழி லாள ரென்றும்
பார்த்திலன் யாவர் மாட்டும் பரிந்தருண் மாரி பெய்து
காத்தன னமல ஞான காரணன் குருகு கேசன்.

(கு - ரை.) நல்லதீத் தொழிலாளர்=தூய வேள்வி இயற்றும் அந்தணர். அடுத்த தீத்தொழிலாளர்=தீமையாளரை உணர்த்திற்று. (19)

இன்னவா றருளி னானே யிவருற விவர்வே றென்னா
அன்னைபோ லுயிர்கட் கெல்லா மாரரு ளொருங்கு செய்தே
என்னையா ளெனக்கொண் டாளு மிணையடிக் குருகு கேசன்
மன்னுமா தவர்க ணெஞ்ச மலர்தொறும் வாழா நின்றான்.

(கு - ரை.) இவர் உறவு இவர் வேறு என்னாது எனப் பிரிக்க. ஆரருள்=நிறைந்த கருணை. ஒருங்கு=ஒருசேர. ஆள்என்க்கொண்டு= அடிமையாளாக ஏற்று. நெஞ்சமலர்=இதயகமலம். (20)

எல்லொளி யிரவி போல விருண்மல மிரித்தி லங்கும்
அல்லமன் சரித மோதி லறம்பொரு ளின்பம் வீடாம்
நல்லன பயனோர் நான்கு நண்ணுவ னிதனைக் கேட்க
வல்லநல் வினையி னானு மற்றவ்வ மருவி வாழ்வன்.

(கு-ரை.) எல்ஒளி இரவிபோல=மிக்க ஒளியுடைய சூரியனைப் போல. இருண்மலம்=இருண்ட ஆணவம். சாதாரண இருள் வஸ்துவைக் காட்டாது எனினும் வஸ்துவைத் தேடுபவனை மறைக்காது: அவனுக்கு நான் தேடுகிறேன் என்ற உணர்ச்சியிருக்கும்: ஆணவ இருளோ தன்னையும் காட்டாது வஸ்துவையுங் காட்டாது மறைக்கும் அத்துணைக் கொடியதென்க. இரித்து=ஓட்டி. வீடாம்=வீடாகிய. (21)

மதியிலார் மதிஞ ராவர் மகவிலார் மகவு யிர்ப்பர்
நிதியிலார் நிதிப டைப்பர் நிலையிலார் நிலைத்து வாழ்வர்
பதியிலார் பதிகி டைப்பர் பழுதிலிவ் விருபத் தைந்து
கதியின்ற னிரம்பு காதை கற்றவர் கூறக் கேட்பின்.

(கு-ரை.) மதி=அறிவு. மகவு உயிர்ப்பர்=புத்திரசந்தானம் பெறுவர். நிதி=செல்வம். நிலையிலார்=எதனிலும் நிலைத்த உணர்ச்சி இல்லாதவர்கள். பதி=சுதந்தரமான பட்டணம். காதை=வரலாறு. இந்நூலைக் கற்றவர் கூறக் கேட்டவர்க்கு இம்மையிலும் பேறு வாய்க்குமென்றபடி.(22)

## நூல்செய்த காலம்

பார்கெழு சகாத்த மூவைஞ் ஞூற்றெழு பானுன் காவ
தாகிய கரநா மங்கொ ளாண்டுறு விடைஞா யிற்றில்
சீர்கெழு மல்ல மன்றன் றிருவிளை யாடற் காதை
கார்கெழு மிடற்றெங் கோமான் கருணைகொண் டியம்பி னானே.

(கு-ரை.) சாலிவாகன சகாப்தம் 1574 கர ஆண்டு வைகாசித்திங்கள் ஆதிவாரத்தில் இந்நூல் அரங்கேறியதென்க. விடை=இடபம்; வைகாசி மாதத்தை யுணர்த்தும் இராசி. (23)

மாசறு மல்ல மப்பேர் வள்ளறன் சரிதந் தன்னின்
ஆசறுஞ் செய்யு ளெல்லா மன்புடன் படிப்பார் தம்மை
ஏசறு மனித ரென்ன விசைப்பதோ கரித்தோல் போர்த்த
ஈசனென் பதுவே யன்றி யேதுமற் றேது வம்மா.

(கு-ரை.) சரிதந்தன்னில்=வரலாற்றில். மாசு ஆசு ஏசு என்பன=குற்றம் எனும் பொருளன. படிப்பார்தம்மை=படிப்பவரை. இசைப்பதோ=கூறத்தகுமோ. மற்று ஏது ஏது என்றது=பின் எப்பெயர் வைத்தல் பொருந்தும் எனும்பொருளது. (24)

## வாழ்த்து.

புண்ணிய ருலகில் வாழ்க புலஞ்செறு நோன்பு வாழ்க
பெண்ணொரு பாகன் பூசை பேணிவா ழடியர் வாழ்க
கண்ணுத லொருவன் சார்ந்த கற்புடைச் சைவம் வாழ்க
அண்ணலல் லமன்சீர் கேட்கு மாதர வாளர் வாழ்க.

(கு - ரை.) புலஞ்செறு=புலனை ஒடுக்கும். பேணி=மேற்கொண்டு. ஒருவன்=ஒருவனையே. கற்புடைச் சைவம்=கற்பு வழிகளை ஒத்து சிவத்தை யன்றி மறந்தும் புறந்தொழா நெறியுடைய சைவசித்தாந்தம். (25)

பொருவரும் பூதி வாழ்க பூதியை யணிவோர் வாழ்க
திருவளர் கண்டி வாழ்க சிறந்தவஞ் செழுத்தும் வாழ்க
குருவருள் வாழ்க மெய்மையைக் கூறுநா வோர்கள் வாழ்க
வெருவரும் பிறவி தீர்க்கும் வித்தகர் வாழ்க வாழ்க.

(கு - ரை.) பொருவரும்=ஒப்பற்ற. பூதி=ஐஸ்வரியம் எனும் பொருட்டாய் திருநீற்றை உணர்த்திற்று. வெருவரும் பிறவி=அச்சம் உண்டாக்கும் பிறவிநோயை. தீர்க்கும் வித்தகர்=ஒழிக்கும் ஞானிகள்.(26)

அல்லமன் சரிதச் செய்யு ளதனிலோர் செய்யுள் கற்க
வல்லவ ரருத்த மோத வல்லவர் வரைய வல்லோர்
செல்வமீ தென்ன வன்பாற் செவிப்புல னிறைக்க வல்லோர்
எல்லவ ரும்பூ மீதி லென்றும்வாழ்ந் திடுக வன்றே.

(கு - ரை.) அருத்தம் ஓத=பொருள் கூற. வரைய=எழுத. அன்பால்=அன்பினால். செவிப்புலன் நிறைக்க=செவியில் நிரம்பக் கொள்ள; கேட்க என்றபடி. பூமீதில்=உலகத்தில். என்றும் வாழ்வாராக என்க. ()

இருபத்தைந்தாவது
மான்மியகதி முற்றிற்று.

கதி 25 - க்கு திருவிருத்தங்கள் - 1159.

பிரபுலிங்கலீலை முற்றிற்று.

# செய்யுள் முதற்குறிப்பு அகராதி.



| செய்யுள். | பக்கம். |
|---|---|

திருமகள்விலாச அச்சியந்திரசாலை, சென்னை:—1938.

## திருக்குறள் - உரையுடன்

திக்கு கடிதம் விலை ரூ. 2-0.
கிளேஸ் கடிதம் ,, ரூ. 3-8.
பெதர்வெயிட் கடிதம் 2-வால்யம் ,, ரூ. 4-0.

[மூலமும் பரிமேலழகருரையும், தெளிபொருள் விளக்கப் பதவுரையும், விசேஷக் குறிப்புகளுடனும், நாயனார் திருவுருவப் படத்துடன் அச்சிடப்பெற்று அழகிய காலிகோ பைண்டு செய்யப்பட்டிருக்கிறது]

தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனார் திருவாய்மலர்ந்தருளிய திருக்குறளென்னும் இந்நூலானது 1330-குறள் வெண்பாக்களாற் செய்யப்பட்டு, பாஷையின் உயர்வை விளக்குவதாயும், இராஜதந்திர முதலிய பலவகைப்பட்ட சிறந்த நீதி நெறியை ஒருசேர நன்குணர்த்தத் தக்கதாயும், எல்லாச் சமயிகளானும் இனி தேற்றுக்கொள்ளப்பட்டதாயு முள்ளது. மேலும் தமிழ் பாஷையில் விருத்தியடைய விரும்புவோர்க்கும், முத்திநெறி பெற்றுய்ய விரும்புவோர்க்கும் ஏற்ற நூலாகவும், ஏனையோருக்குப் பொது நூலாகவும் இருத்தலால் இதன் பெருமை குன்றின்மேலேற்றிய விளக்குபோல் விளங்குகின்றது.

இந்நூல் வேதசாரமா யிருத்தலால் ஆதியில் உரையாசிரியர்களாகிய நச்சினார்க்கினியார் இதற்கு உரையியற்றினரென்றும் அவற்றுள் பரிமேலழகர் இயற்றிய உரைசொற்பொலிவும் பொருணயமும் நிறைந்து விளங்கியதால் சான்றோர் இவ்வுரையையே மேலாகக்கொண்டனரென்றும் வழங்கி வருகின்றன. ஆதலால், தமிழ் வேதமாகிய திருக்குறளும் இதற்குப் பரிமேலழகர் செய்த உரையையும் கற்றோர் யாவராலும் விரும்பத்தக்கனவே. இவ்வுரை அக்காலத்தி லுள்ளோருடைய கல்வித் தேர்ச்சிக் கேற்பச் செய்யப்பட்டதாதலால் கடின சந்திகளால் செறிந்து விளங்குகின்றது. தற்கால நிலைமையைக் கருதி பண்டித பாமரர் யாவர்க்கும் எளிதில் பயன்படும் பொருட்டுக் கடின சந்திகளை ஒருவாறு விளக்கி, அதனுடன் எளிய நடையில் செய்யப்பட்ட தெளிபொருள் விளக்கப் பதவுரையும் ஆங்காங்கு விசேடமேற்கோளுடன் சேர்த்து புதிய பதிப்பாக அச்சிட்டிருக்கின்றனம்.

கவனிப்பு:—எல்லா புஸ்தகங்கள் அடங்கிய கிரயஜாபிதா தேவையுள்ளவர்கள் தங்கள் விலாசத்தைத் தெரிவித்தால் இனாமாக அனுப்பப்படும்.

B. இரத்தின நாயகர் ஸன்ஸ்,
நெ. 41, வெங்கட்ராமய்யர் தெரு, ஜி. டி. சென்னை.

